ஓம்.

# சச்சிதானந்தசிவம்.



இஃது

சுப்பிரமணியசிவாவால்

எழுதப்பட்டு

ஷியார் பாரியை

மீனாக்ஷியம்மாளால்

வெளியிடப்பட்டது.





சென்னை

பி. ஆர். இராம ஐயர் அண்டு கம்பெனியாரால்

அச்சிடப்பட்டது.

1911



[விலை அணா 12.

# முகவுரை.

—oo:o:oo—

மகான், இயேசுகிறிஸ்துவின் பிரதமசிஷ்யராகிய பீட்டர் என்பவர், "The Beautiful" என்ற க்ஷேத்திரத்தின் வாயலிற் செல்லுங் காலத்தில், அங்கு உட்கார்ந்திருந்த இரண்டு கால்களுமில்லாத ஓர் பிறவி நொண்டியானவன் இவரைக் கண்டு, பிச்சை கேட்க, அவர், "Silver and gold have I none, but such as I have give I thee." என்று சொல்லி, அவனைக் கையைப் பிடித்துத் தூக்கிவிட, அவனுக்கு இரண்டு கால்களும் எல்லோருக்கும் போல் வளர சந்தோஷத்தால் குதித்துக் கொண்டு சென்றான் என்பதாகக் கிறிஸ்தவ வேதப் புஸ்தகத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதே மாதிரியாக எனது மனைவி என்னைச் சிறைச்சாலையில் கண்டு பேசிய காலத்தில், தான் ஏழைமைத் தனத்தினால் மிகக் கஷ்டப்படுவதாயும், தனது கஷ்ட நிவர்த்திக்கு ஓர் உபாயம் செய்து கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்ள, நானும், "Silver and gold have I none but such as I have give I thee," என்று, எனது சற்குரு முகத்தினின்றும் கேட்டு, அறிந்து, அனுபவித்தவைகளை ஓர் புஸ்தக ரூபமாய் எழுதி அவளது துக்க நிவர்த்தியின் பொருட்டு அளிக்கின்றேன். இந்நூலானது சாதாரணமாக ஜீவராசிகள் பிராரப்த கர்மானுசாரமாய் அனுபவிக்கும் துக்கத்தைத் தற்காலத்தில் நிவர்த்தி செய்யாவிடினும், வேதசாஸ்திரங்களில் விஸ்வாசமுடைய அந்தர்முகர்களான முமுட்சுக்களுக்கு சகல துக்கங்களுக்கும் வித்தாயிருக்கப்பட்ட

இடைவிடாத ஜனன மரண துக்கத்தை சூரியப் பிரகாசத்தின் முன் இருள்போல இருந்தவிடம் தெரியாமல் பறக்கடிக்கும் என்றும், அவர்களை ஜீவபாவத்தினின்றும் தெளிவித்து, சிவமாக்குவிக்கும் என்றும், நான் மனப்பூர்த்தியாய் நம்புகிறேன். சமஸ்த ஜீவகோடிகளையும் பம்பரம்போல் ஆட்டுவிக்கின்ற மகாசக்தியினது ஆக்ஞையால் யான் ராஜரீக வியவகாரங்களில் தலையிட்டதும், சென்ற 1908-ம் வருஷத்தில் எனது பேரில் திருநெல்வேலியில் ராஜத்துவேஷக் கேஸ் ஏற்பட்டதும் அக்கேஸில் ஸெஷன்ஸ் கோர்ட்டாரால் 10-வருஷம் தீவாந்தர சிட்சை விதிக்கப் பெற்றதும், பின்பு ஹைக்கோர்ட்டாரால் 4-வருஷம் குறைக்கப்பட்டு, 6-வருஷம் தீவாந்தர சிட்சை உறுதி செய்யப்பட்டதும், இவை முதலான சங்கதிகளை எனது சகோதாரில் பலரும் அறிவார்கள். யான் திருச்சிறுப்பள்ளி சென்ட்ரல் ஜெயிலில் இதுகாறும் வைக்கப்பட்டிருந்து, இப்பொழுது சுமார் 5-மாதக் காலமாக இந்த ஜெயிலில் வைக்கப்பட்டிருக்கிறேன்.

யான் இந்த ஜீவிய காலத்தில் சிருஷ்டி நீதிக்கு விரோதமானவைபும், உலகினரது இகழ்ச்சிக்கு உரித்தானவைபுமான அநேக நிகிருஷ்டச் செயல்களைச் செய்திருக்கலாம். ஆயினும், "ஸ்வல்ப மப்யஸ்ய தர்மஸ்யத் ராயதே மகதோ பயாத்" என்ற பகவத் வாக்கியமானது எனது அனுபவத்தில் உண்மையினும் உண்மையாக விளங்குகிறது. சென்ற 1900-ம் வருஷத்தில் யான் கோயம்புத்தூரில் மெட்ரிக்குலேஷன் வகுப்பில் படித்துக்கொண் டிருக்குங் காலத்தில் திண்டுக் கல்லுக்கு—அங்கு எனது பந்து ஜனங்கள் இருப்பதால்—வேனிற்கால விடுமுறை நாட்களில்போகும்படி நேரிட்டது. அப்பொழுது அவ்விடத்தில் ஓர்மகான் அதிவருணச் சிரமியாய், கிஞ்சிற்றேனும் விஸ்மரணையில்லாமல் தன் மரணையாகவே பித்தரைப்போல திரிந்துகொண்டிருந்தார்.

பிரபஞ்சப் பிரக்ஞை கடுகளவேனும் இல்லாத பித்தராகிய இவர் ஓர் தினம் யானிருந்த வீட்டிற்கு வந்து என்னை மாத்திரம் வெளியிலழைத்து மற்ற எனது பந்து ஜனங்களை உள்ளே போகும்படி சொல்லிக் கதவை யிழுத்தடைத்து வெளியில் தாளிட்டுக்கொண்டு, திண்ணையில் உட்கார்ந்தார். பின்பு என்னைப் பார்த்து "வேஷ்டியை அவிழ்த்து எறிந்து விடு" என்று சொன்னார்.

16 வயது பாலியனாகிய யான் தெருத்திண்ணையில் எங்ஙனம் வேஷ்டியை அவிழ்த்தெறிந்துவிட்டு நிர்வாணமாய் நிற்பது? எனது மனம் துணியவில்லை. "யான் கோவணம் உடுத்தவில்லை" என்று சொன்னேன். அதற்கு அவர் மறுபடியும் வெகு உரத்த சத்தத்துடன் வேஷ்டியைக் களைந்தெறிந்து விடும்படி ஆக்ஞை செய்தார். நான் இதற்கு முந்தியே அவரது மகிமைகளைப் பற்றிக் கேட்டிருக்கிறேனாதலால் எங்கே சபித்து விடுவாரோ என்று பயந்து, யான் உடுத்திருந்த ஆறுமுள நீளமுள்ள பெரிய வேஷ்டியைக் கோவணமாகத் தரித்துக்கொண்டு, அவர் எதிரில் நின்றேன். அவர் உடனே அடுத்த வீட்டில்போய் ஓர் பஞ்ச பாத்திரத்தில் ஜலம் வாங்கிக்கொண்டு வரச் சொன்னார். யான் கோவண உடையுடன் அடுத்த வீட்டு ஸ்திரீகளுக்கு முன்பாகப் போவதற்கு வெட்கப்பட்டேன். ஆயினும் அவருக்கு பயந்து அடுத்த வீட்டிற்குள் நுழைந்து ஓர் கதவின் மூலையில் எனது சரீரத்தை மறைத்துக் கொண்டு எனது முகத்தை மாத்திரம் அவர்களுக்குக் காண்பித்து ஓர் பஞ்ச பாத்திரத்தில் ஜலம் கேட்டு வாங்கிக்கொண்டு வந்தேன். அம்மகான், கையில் பஞ்சபாத்திரத்தை வாங்கிக்கொண்டு "இந்த ஜலத்தை நீ குடிக்கிறாயா, நான் குடிக்கட்டுமா?" என்று என்னைக் கேட்க, நான் "தாங்களும் குடியுங்கள்: நானும் கொஞ்சம் குடிக்கிறேன்." என்று

சொன்னேன். அவர் பாதி குடித்துவிட்டு மிச்ச மிருந்ததை என்னைக் குடிக்கச் சொன்னார். யான் குடிக்கையில் சிறிது ஜலம் பஞ்சபாத்திரத்தில் இருக்குங் காலத்தில் "நீ குடித்ததுபோதும்" என்று சொல்லி, என்னிடத்திலிருந்து பஞ்சபாத்திரத்தை வாங்கி வழியில் போய்க்கொண்டிருந்த ஒருவனுக்கு மிகுதியிருந்த ஜலத்தைக் குடிக்கக் கொடுத்து பிறகு அவனைப் போகச்சொல்லிவிட்டு, என்னைப் பஞ்சபாத்திரத்தை அடுத்த வீட்டில் கொடுத்துவிட்டு வரச்சொன்னார். யான் முன்போலவே கதவு மூலையில் மறைந்துகொண்டு பாத்திரத்தை எட்டி வைத்துவிட்டு, திரும்பி வந்து அவரெதிரில் நின்றேன். உடனே அவர் என்னைக் கூட வரும்படி சொல்லிவிட்டுத் தெருவிலிறங்கி நடந்தார். கோவணத்துடன் எங்ஙனம் தெருவில் செல்லுவது? அம்மகானிடத்தில் எனக்குள்ள பயமும் பக்தியும் என்னை அவர் பின்னே இழுக்க, அபிமானமும் அவமானமும் என்னைத் தடுக்க, அந்த நேரத்தில் என் மனது என்ன பாடுபட்டிருக்குமென்று எனது சகோதரர்களே அனுமானித்துக் கொள்ளலாம். யான் தலை குனிந்துகொண்டு அவர் பின்சென்றேன். அவர் சிறிதுதூரம் சென்றபின், ரஸ்தாவினின்றும் விலகி ஓர் மைதானத்தில் மலபாதைசெய்து, அம்மலத்தைத் தமது திரேகத்தில் அங்குமிங்கும் பூசிக்கொள்ள அவ்விடத்தில் மாடுமேய்த்துக் கொண்டிருந்த சில பையன்கள் அவரை எளனம் செய்து, திட்டி, கல்லாலடித்தார்கள். அவருடன் கோவணமாத்திரம் தரித்து நின்றுகொண்டிருந்த எனக்கும் அவருக்குச் செய்த பூசையில் பங்கு கிடைத்தது. எனக்குப் பிரியமில்லாவிடினும் மாறுத்தரம் சொல்லாமல் பெற்றுக்கொண்டேன். பின்பு அம்மகான் என்னை இட்டுக்கொண்டு திரும்பவும் ஊருக்குள் செல்கையில், சமஸ்கிருத பாஷையிலும் தமிழ்ப்பாஷையிலும் ஏதெல்லாமோ எனக்

குச் சொல்லிக் கொடுத்தார். அவைகளை யெல்லாம் அப்பொழுதே மறந்து விட்டேன். ஆனால், அவர்

"கட்டியணைத்திடும் பெண்டீரு மக்களும் காலத்தச்சன்
வெட்டி முறிக்கு மரம்போல்சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கியழுவர் மயானங் குறுகியப்பா
லெட்டியடிவைப்பரோ இறைவா கச்சி யேகம்பனே."

என்ற பாடலை இரண்டுமூன்று தரம் சொல்லிக்கொடுத்தார். இப்பாடல் மாத்திரம் எனது இருதயத்தில் வேரூன்ற அக்காலமுதல் எனது மனமானது பிரபஞ்ச தர்மத்தில் வெறுப்படைந்து விட்டது. பின்பு யானிருந்த வீட்டு வாசலின் வழியாக அவர் முன்னும் யான் பின்னுமாகப் போய்க்கொண்டிருக்கையில், யான் மிகவெட்கப்பட்டு அவருக்குத் தெரியாமல் திடீரென்று வீட்டிற்குள் நுழைந்து கொண்டேன். அவர் அன்று சாயங்காலம் மறுபடியும் வந்து "உனக்கு அவ்வளவுதான்." என்று சொன்னார். அக்காலத்தில் இவ்விஷயத்தைப் பற்றி யான் அதிகமாகக் கவனிக்கவில்லை. அம்மகாத்மா என்னை அழைத்தது, யான் வெட்கப்பட்டுப் பின்வாங்கினது முதலாய சங்கதிகளை நினைத்து நினைத்தும், அவர் "உனக்கு அவ்வளவுதான்" என்று சொல்லும்படியா யிருந்ததற்குள்ள எனதுமனோபரிபாகமின்மைக்காகவும் இப்பொழுதும் எப்பொழுதும் வக்கமுற்று, கிராவருத்த மடைகின்றேன். அவரது திவ்ய தரிசனம் எனக்குக் கிடைத்தது முதல் என்னுடைய வாழ்நாள் என்னால் கணிக்கப்படாமல், அவரது தியாகோபதேசமாகிய அப்பாடலாலேயே நடை பெற்று வருகின்றது. இதற்குப் பிறகு திருவனந்தபுரத்தில் சென்ற 1902-ம்வருஷத்துக் கடைசியில் ஸ்ரீமத் ஸதானந்த ஸ்வாமிகளைக்கண்டு அபயமடைந்து, சென்ற 1907-ம் வருஷம் ஜனவரிமீ 12-தேதி

வரையில், சரீரத்தினது சாயையைப்போல அவரை விட்டுப் பிரியாமல் வாசம் செய்ததால் எனது மனோ நிலைமை சீர் திருத்தப்பட்டது.

"இந்த (சந்நியாசி) தருமத்தைக் கொஞ்சமாவது அனுஷ்டித்தவன் மிக்கபயத்தினின்றும் ரக்ஷிக்கப்படுவான்" என்றகீதாவாக்கியத்தின் உண்மையானது எனது அனுவபத்தில் உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கு கின்றது. ஆகையால், மானுட உடல் தரித்த ஒவ்வொருவரும் எவ்வித பயத்தினின்றும் ரக்ஷிக்கப்பட விரும்பினல், இந்தக் கர்மானுஷ்டானத்தினல் ஈடேறுவார்களாதலால் எனது அனுஷ்டான முறைமையையும் அனுபவத்தையும் வெளியிட்டிருக்கின்றேன். உலகினரால் குற்றங்கூறுவதற்கு இப்புஸ்தகம் பாத்திரமாகுமோ என்றசந்தேகம்சிற்சிலசமயங்களில்எனக்குண்டாயினும், எனது பிரபஞ்சவாழ்வை ஜெகன் மாதாவாகிய மகா சக்தியின் வசம் திரிகாணங்களுமொத்து ஒப்புவித்து விட்டேனுதலால், கம்பாது குற்றத்தை குணமாகருசுப்படுத்திய மகாசக்தியானவள் என்னையும்அனுக்கிரகிப்பாளென்று திடமாய் நம்புகிறேன். தவிர, "ஏகம் சத்விப்ரா பகுதா வதந்தி" என்ற சுருதிப்படி, ஒன்றையே பலவாகப் பலரும் கூறுவதால், எனது அனுபவமும் அவ்வொன்றைக் குறித்தேயுள்ளதாகும். குயுக்திகள் பேசுபவர்களுக்கோ அல்லது அனுபவம் சிறிதுமின்றி பாஷா ஞானத்தினல் பெருத்த பதங்களைப் பிரயோகித்துப் பிறருடைய மூளையை வியாதிக்குள்ளாக்கும் கல்வியில் வல்ல பண்டிதர்களுக்கோ இந்நூல் பிரயோசனப் படுமென்று நான் நம்பவில்லை. என்னைப்போன்ற முமுட்சுக்களுக்கே இது ருசிகரமாயிக்கும். இந்நூல் ஜனங்களுக்குப் பிரியமாயிருந்தாலும் அப்பிரியமாயிருந்தாலும், இன்பத்தைக் கொடுத்தாலும் துன்பத்தைக் கொடுத்தாலும், எல்லாவற்றிற்கும் மகாசக்தியே காரண

மொழிய, யான் எழுதியவற்றுள் ஒவ்வொரு பதத்தையும் ருசுப்படுத்துவதற்கு எனக்கு தைரியமிருந்தாலும் கர்ம சக்தி, காலசக்தி எனப் பலபேர் வகித்த அம் மகாசக்தி யினால் சூத்திரத்தில் பொம்மைபோல் ஆட்டப்படுகிற யான் காரணஸ்தானத்தை வகிக்கத் துணியவில்லை. இப்புஸ்தகத் தில் குற்றங்குறைகளை, திண்டுக்கல்லில் என்னைத் தடுத் தாண்டு விதேக முக்தராயிருந்து, இப்பொழுது சமாதி யடைந்து விட்ட ஓதஸ்வாமிகளின் மேலாவது அல்லது திரு வாங்கூர் ஸமஸ்தானத்தில் என்னைச் சீர்திருத்தி எனது அனுபவத்தில் திடமாக இருக்கச்செய்த ஜீவன் முக்தராகிய சதானந்த ஸ்வாமிகளின் மேலாவது சுமத்தாமல், என்மேல் சுமத்தி என்னை அவமதிக்கக் கோருகிறேன். அவ்விரண்டு மகான்களின் பொருட்டு திக்குகளிலெல்லாம் நமஸ்காரம்; திசைகளிலெல்லாம் நமஸ்காரம்; எங்கும் எப்பொழுதும் நமஸ்காரம் செய்கிறேன். பரம ஜீவகாருண்ணிய ஸ்வரூபி களாய்க் காலதேயங்களுக்குத் தக்கவாறு இதற்குமுன் அவ தரித்தவர்களும், இப்பொழுது அவதரித் திருக்கிறவர்க ளும், இனிமேல் அவதரிப்பவர்களுமாகிய புருஷோத்தமர் களுக்கெல்லாம் நமஸ்காரம். பகிரங்கமாயும் அந்தரங்கமாயு முள்ள பற்பலவித ஜீவன் முக்தர்கள், விதேக முக்தர்களுக் கெல்லாம் நமஸ்காரம். உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான முமுட்சுகளுக் கெல்லாம் நமஸ்காரம். சமஸ்தகோடி ஜீவ ராசிகளுக்கும் நமஸ்காரம். இவைகளுக்கெல்லாம் ஆதி காரணமாய் மகாசக்தி எனப் பேர்பெற்று விளங்காநின்ற சாட்சாத் சச்சிதானந்த சொரூபிணியாகிய ஜெகன்மாதா வின் வித்யாசக்தி, அவித்யாசக்தி எனப்பட்ட இருபாதார விந்தங்களிலும் நமஸ்கரிக்கின்றேன். எந்த வஸ்துவானது தன்னந் தனிமையாய் ஒப்புவமை யற்றிருக்குமோ, எந்த வஸ்துவானது அனுபவத்திலன்றி அறியப்படாதோ, எந்த

வஸ்துவானது அனுபவ அறிவுக்கு மதீதமாகி அனுபவம் மாத்திரமா யிருக்குமோ, எந்த வஸ்து தான்மாத்திரமாய் விளங்குங் காலத்தில் பிரபஞ்சமானது இல்லாமல் போய் விடுமோ, எந்த வஸ்துவானது அனந்த கோடி நாம ரூபங்க ளால் வியவகரிக்கப்படுமோ, எந்த வஸ்துவை யன்றி வேறு வஸ்துக்கள் இல்லையோ, எந்த வஸ்துவானது பொய்யாகிய மாயா சக்தியின் லீலைகளுக்கெல்லாம் எஜமானனு யிருந்து சர்வசாட்சியா யிருக்குமோ, எந்த வஸ்துவானது அணுவுக் கணுவாயும் மகத்துக்கு மகத்தாயு மிருக்குமோ, எந்த வஸ்துவாய் விளங்குவதற்கு சமஸ்தகோடி ஜீவராசிகளும் தெரிந்தோ, தெரியாமலோ முயல்கின்றனவோ, வித்யாகர் வம், ஆணவம், அபிமானம் முதலிய பலவித அகங்காரக் கிரந்தியினுல் பாமரர்கள் எந்த வஸ்துவாக விளங்கப் பிரயத் தனம் செய்யாமல், வெகு துன்பத்திற் குள்ளாகுங் காலத் தில், வாழ்நாள் வீண் நாளாகக் கழிந்ததைப் பற்றி மனஸ் தாபப் படுவார்களோ, எந்த வஸ்துவானது கற்பனு லட்ச ணங்கட் கதீதமா யிருக்குமோ, அந்த வஸ்துவே சிவம். சத்தியம், சத்தியம், சிவோஹம்.

எனது சாவகாச சமயங்களில் எழுதி இப்புஸ்தகத்தை முடித்துக் கொடுக்கும்படி எனக்கு அனுமதி கொடுத்த இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரை அவர்களுக்கும், இவ்விடத் தில் தற்கால சூப்பிரண்டெண்டெண்ட் துரை அவர்களுக் கும் யான் வந்தன மளிக்கின்றேன்.

ஸெண்ட்ரல் ஜெயில்,<br>சேலம்.<br>15—3—1911.

சுப்பிரமணிய சிவம்.

# சச்சிதானந்த சிவம்.



எந்த வஸ்துவானது சத்தா மாத்திரமா யிருக்குமோ எந்த வஸ்துவானது அத்வைதமாய் சுஜாதீய விஜாதீய ஸ்வகதபேத ரஹிதமாய் இருக்குமோ, எந்த வஸ்துவில் ரஜ்ஜுவில் சர்ப்பம்போல இப் பிரபஞ்சமானது தோன்று கிறதோ, அந்த வஸ்துவே சத்தியம், சத்தியம், சத்தியம்.

எந்த வஸ்துவானது சதானந்தப் பேற்றிற்கு ஊற்று யிருக்குமோ, எந்த வஸ்துவில் யானும், எந்த வஸ்து என் னிலும் இரண்டறக் கலந்து ஏகபோகமாயிருக்குமோ, அந்த வஸ்துவே சத்தியம், சத்தியம், சத்தியம்.

உலகத்தில் சகலரும் சுகத்தையே இச்சிக்கின்றனர். ஆனந்தப் பிராப்தியும் துக்க நிவர்த்தியுமே சகலருடைய கருத்தாகும்.

துக்கத்தையடைய முயற்சிப்பவர் ஒருவரும் இலர். ஒவ்வொருவருக்கும், அவரவருடைய பூர்வ வாசனையை யொத்தும், சங்கத்தின்படிக்கும், ஆனந்தத்திற்குக் காரண மாக அவர் கருதும் வஸ்துக்கள் வெவ்வேறு யிருக்கின்றன. எந்த வஸ்துவில் மனமானது வாசனையால் தள்ளப்பட்டும் சங்கத்தால் இழுக்கப்பட்டும், ஆனந்தத்தை யடையலா மென்று கட்டுப்பட்டு விட்டதோ அந்த வஸ்துவை யடைந்து அனுபவிக்கும் பொருட்டு மற்ற வஸ்துக்களெல்லாம் தியா கம் செய்யப்படுகின்றன. ஸ்திரீ சுகத்தை மேலென்று கருதினால் ஸ்திரீயின் பொருட்டு சகல தேயங்கட்கும் அதி பதியாகிய சார்வ பௌமனும் நாடு நகரம் அதிகாரம் செல்

வம் முதலியவை யிழந்து தெருக்கள் தோறும் பிச்சை யேற்றுண்ணும் பெருந்தரித்திர னவதைக் கேட்டும் பார்த்தும் இருக்கிறோம். தான் சகலருக்கும் எஜமானனா யிருப்பதை விட்டு மாதர்களின் ஊழியக்காரனாகிறான். மதுபானத்தில் விருப்புற்றவனுக்கு அம்மதுபானம் தவிர மற்றவை யெல்லாம் கவனிக்கத் தகாதவையாய்க் காணப்படுகின்றன. யுத்தப் பிரியனுக்கு உடல் பொருள் ஆவி மூன்றும், திரணமாய்த் தோன்றுகின்றன. ஈஸ்வர நியதிபரிபாலகனுக்குச் சிறைச்சாலையும், சித்திரவதையும் அலக்ஷியமாம்.

இவ்வாறே நன்மையென்றும் தீமை யென்றும் உலகத்தில் சொல்லப்படுவனவாகிய ஒவ்வோர் வஸ்துவின்சுகத்தையு மடையும் பொருட்டு மற்ற வஸ்துக்கள் தள்ளப்படுகின்றன. ஒரே மனிதன் ஒருகாலத்தில் எதை சுகமென்று கருதினானோ, அதையே மற்றொரு காலத்தில் தள்ளி, மற்றொரு வஸ்துவில் சுகத்தை யிச்சிக்கிறான். இவ்வித சுகத்தையே லக்ஷியமாகவைத்து அதன் பொருட்டு ஒரு வஸ்துவைக் கடைப்பிடித்தும், மற்ற வஸ்துக்களை வெறுத்தும், என்ன செய்தும், சுகத்தை யடைகின்றனரா? இல்லையா? சுகமடைகின்றன ரென்றால்இக்கேள்வி முடிவடைகின்றது. இல்லையேல், 'ஏன்? ஐம்புலன்களால் அறியப்படும் இவ்வஸ்துக்களில் சுகம் இல்லையென்றால் எவ்வஸ்துவில் உளது? அதையடையும் வழிஎன்ன?' என்பனவாய கேள்விகள் உண்டாகின்றன. நாம் இப்பொழுது இக்கேள்விகட்கு உத்தரம் கூற முயற்சிப்பாம். இவ்வஸ்துக்களிலெல்லாம் சுகம் இல்லையென்பதே சகல மதஸ்தர்களுடையவும் சகல சாஸ்திரங்களுடையவும் அபிப்பிராயம். சகல ஜீவராசிகளுடைய அனுபவமும் இதுவேயாம். இவ்வஸ்துக்களில் கட்டுப்பட்டவர் பாராயினும் சரீபே, தைரியமாய் முன்வந்து

தம் மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் தாம் சுகி என்று கூறுவாராக. அங்ஙனம் கூற ஒருவரும் இலர். ஏனென்றால் இவ்வஸ்துக்களெல்லாம் அநித்தியமாகையால் ஆதாரவஸ்து விற்கு அழிவு நேரிட்டால், ஆதேயம் அழிய யாரையாவது கேட்கவேண்டுமோ? ஒரு மேஜையின்பேரில், ஒரு பீங்கான் கோப்பை இருப்பதாக வைத்துக்கொள்வோம். மேஜை ஆதாரமாம். பீங்கான்கோப்பை ஆதேயமாம். மேஜை யாகிய ஆதாரம் நிலைத்திருக்கும் வரை பீங்கான் கோப்பை யாகிய ஆதேயத்துக்கு அழிவு நேரிடாது. மேஜைக்கு அழிவு நேரிட்ட காலத்துப் பீங்கான் கோப்பையும் விழுந்து கெடும். அதுபோல நாம் நம்முடைய சுகமாகிய பீங்கான் கோப்பையை, ஸ்திரீயாகிய மேஜையின்பேரிலோ, தனமா கியமேஜையின்பேரிலோ, இவை போன்ற ஏதாவது மேஜை யின்பேரில் வைக்கிறோம். இம்மேஜைகளெல்லாம் ஒரு காலத்து அழிவுறுவன. ஆகையால், அக்காலத்து நம்மு டைய சுகத்துக்கும் அழிவு உண்டாகின்றது. என்றைக்கும் அழியாமல் நித்தியமாயுள்ளவஸ்து எதுவோ, அதனிடத்தில் நம்முடைய சுகத்தை வைத்தால் நாம் நித்தியாநந்தர்களா கலாம். தவிரவும், நாமரூபத்தால் கட்டப்பட்டிருக்கும் ஒவ்வொரு வஸ்துவும் காலதேச வர்த்தமானங்கட்கு உட்பட்டதென்று அறியவேண்டும். இளம் பிராயத்தில் சுகமாய்த் தோன்றின வஸ்து முதிர் பிராயத்தில் வெறுப் பிற்குக் காரணமாகும். ஒரு தேயத்தில் விரும்பப்பட்ட வஸ்து மற்றோர் தேயத்தில் வெறுக்கப் பட்டதாகும். ஒரு காரிய நிமித்தம் வேண்டிய வஸ்து மற்றோர் காரிய நிமித்தம் வேண்டாததாகும். உதாரணமாக, குழந்தைப் பருவத்தில் இச்சிக்கப்பட்ட பொம்மை முதலியவை பின்னர் விரும்பப் படுவனவல்ல. ஹிமோத்கிரி பர்வதத்தில் கெட்டியான கம்பளி விரும்புகிறோம். அதுவே சஹாரா என்னும் பாலை

வனத்தில் வெறுக்கப்படும். ஒரு பொய்யானது ஜீவஹிம்ஸையைநீக்குமானால் சத்தியமெனப் பேர்பெற்று விரும்பப்படும். ஒருமெய்யானது ஜீவஹிம்ஸையை உண்டாக்குமானால் பொய்யெனப் பேர்பெற்று வெறுக்கப்படும். இங்ஙனமாக இவ்வஸ்துக்களெல்லாம் அடிக்கடி மாறும்தன்மையுடையன. ஆகையால், ஒருவனும் இவ்வஸ்துக்களில் சுகத்தை எள்ளளவேனும் பெற்றுமிலன், பெறுகின்றவனுமிலன், பெறுபவனுமிலன்.

பின், எந்த வஸ்துவினிடத்தில் சுகத்தையடையலாம்? எப்படியாவதுசுகமே நமக்கு லக்ஷியம். ஆகையால் சதானந்தப்பேற்றிற்கு வழி என்ன என்பதை ஆராய்வோம்.

இன்னும் ஒன்று. அந்தகாரம் நீங்கியவிடத்துப் பிரகாசம் எங்ஙனம் நிச்சயமோ, அங்ஙனமே துக்க நிவர்த்தியுண்டானவிடத்து ஆனந்தப் பிராப்தி நிச்சயமாம். ஆகையால் இஜ்ஜீவனனவன் அனுபவிக்கும் துக்கத்திற்குக் காரணம் யாதென்று அறிந்து, அதைக்களைந் தெறிந்துவிட்டாலும் ஆனந்தோதய மாய்விடும்.

சாக்ஷாத்அகண்டசைதன்ய பிரம்மவஸ்துவானது மாயாசஹிதமாய் சமஷ்டியாகி ஈஸ்வரனெனப் பெயர்பெறும். அதே பிரம்மவஸ்துவானது அவித்யாசஹிதமாய் வியஷ்டியாகிஜீவனெனப் பெயர்பெறும். ஈஸ்வரனும் ஜீவனும் முறையே மாயையும் அவித்தையும் ரகிதமானால் சுத்தப்பிரம்ம வஸ்துவே. இஜ்ஜீவன் அவித்தியா சம்பந்தத்தால் பிரம்மஸ்தானத்திலிருந்து இழுக்கப்பட்டுக் காரணம், ஸூக்ஷமம், ஸ்தூலம்என்றுசொல்லப்பட்டமூவகைச்சரீரோபாதியுடையவனுய் ஜனனமரணச்சக்கரத்தில் குலாலன் திகிரியைப்போல் சுழன்று, அலைகடல் துரும்புபோல் சுகதுக்க வதைகளில் மொத்துண்பன். சம்பந்தப்பட்ட அவித்தையே இவனுக்குக்

காரண சரீரமாகும். இதுவே அஞ்ஞான மென்பதும். இவ்வஞ்ஞானத்தினின்றும் உண்டாகும் சங்கற்பம் மனம் எனப் பேர்பெற்று வாசனையாகிய விதைகளை அடக்கிய ஸூக்ஷ்மசரீரமாகும். இதினின்றும் வாசனையின் முதிர்ச்சியினால் கர சரணாதி அவயங்களுடன் ஸ்தூல சரீரமுண்டாகும். இந்த ஸ்தூல சரீரத்தையே 'நான்' என்று அகங்கரித்து அபிமானித்த ஜீவனானவன் இடைவிடாத் துக்கத்தை அனுபவிப்பன்.

அவித்தையாகிய காரண சரீரமே ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களுக்கு விதைபோன்றிருப்பதாலும், துக்கத்திற்குக் காரணமாயிருப்பதாலும், அவ்வவித்தியா நாசமே ஆனந்தத்திற்கு விதையாம்.

பிரம்மவஸ்துவினுடன் அவித்தையானது 'எப்பொழுது கலந்தது? ஏன் கலந்தது?' என்று அநேக வினாக்கள் உதிக்கின்றன. இவ்வவித்தையானது எப்போழுது பிரம்மவஸ்துவினுடன் சம்பந்தப்பட்டது என்பதை நாம் அறியோம். இதுவே நம்முடைய நிஷ்கபடமான விடை. அவித்தையை, அநாதி அதாவது ஆதியில்லாதது எனப் பெரியோர் கூறுவர். ஆதிபற்ற வஸ்துவிற்கு அந்தமுண்டாக்கத் துணிவது அசம்பாவித மன்றோ? எந்த வஸ்துவிற்கு ஆதியில்லையோ, அதற்கு அந்தமுமில்லை என்பது சிருஷ்டி நீதிகளில் ஒன்று. ஆகையால், அவித்தை அநாதியென்றால் நாசாகிதமா யிருக்க வேண்டும். ஆனால் அவித்தியாநாசமானது, சுருதி, யுக்தி, அநுபவம் இவைகளின் துணிவு. எதுபோலென்றால் ஒரு தேசத்தில் மண்பாத்திரமே சகல விஷயத்திற்கும் உபயோகப்படுத்தபட்டு வந்தது. அந்தத் தேயத்தில் ஒரு அரசனானவன் தன் ராஜ்யத்தில் மண்பாத்திரம் உபயோகப்படுத்துவது தனக்கு இழிவென்றும், இனி

மேல் பொன் பாத்திரமே உபயோகப்படுத்த வேண்டுமென்றும் பறையறைவித்தான். அரசனது ஆக்கினையினுல் காலக்கிரமத்தில் மண்பாத்திரம் மருந்துக்குக்கூடக் கிடையாமல் பொன்பாத்திரமே வழங்கின. மண் பாத்திரமானது அத்தேயத்தில் எக்காலத்தில் நூதனமாகச் செய்யப்பட்டதோ அது ஒருவருக்கும் தெரியாது. மண்பாத்திரத்திற்கு ஆதியறியாமலிருந்தும் அந்தம் எங்ஙனம் உண்டாயிற்றே அங்ஙனமே அவித்தையின் ஆதி அறிவுக்கொட்டாவிடினும் அந்தம் உண்டாதல் சம்பாவிதமே. தவிரவும் திடீரென்று ஒரு ஆழமான கிணற்றுக்குள் விழுந்த ஒருவன், தான் மூச்சுவிட முடியாமல் தண்ணீரில் மூழ்கித் தத்தளித்துப் பிராணனுக்கே ஆபத்து விளைந்திருக்கும் சமயத்தில், தான் கரையிலிருந்து எங்ஙனம் வீழ்ந்தான், என் வீழ்ந்தான் என்று சிந்தித்து நடந்தவற்றை ஞாபகத்திற்குக் கொண்டுவந்து கொண்டிருப்பானே? அல்லது தான் தப்பிப் பிழைக்க வழி தேடுவானே? அதுபோல் சம்சார சாகரத்தில் வீழ்ந்து அதன் பயங்கரமான அலைகளால் மோதப்பட்டுச் சிதறுண்டு கரைகாண இச்சிப்பவனுக்கு அவித்தியா நாசமே லக்ஷியம் ஒழிய அவித்தைக்கு ஆதியுளதா அல்லது அநாதியா என்று ஆராய்வது அல்ல. இதெல்லாம் பிரபஞ்சசக்தவருக்கே.

ஆகையால் ஜீவனனவன், பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்கள் ஒன்றிலாவது சுகத்தைக் காணுதவனுய் அநேக கோடி ஜன்மங்கள் எடுத்தலுத்து, மிகவும் துக்காக்கிராந்தனுப் சுகத்தையே கருதினவனுய் ஏங்கிப் பரிதவித்து, அனுபவித்த வஸ்துக்களில் சுகமின்மையால் வெறுப்பன். எப்பொழுது பிரபஞ்ச வெறுப்புண்டானதோ அப்பொழுது முமுக்ஷுவானுன். பிரவர்த்தி மார்க்கமென்னும் அதோ முகத்தினின்னும் நிவர்த்தி மார்க்கமென்னும் ஊர்த்துவ முகம் நோக்கி விட்டான். முமுக்ஷு-

வானவன் மோக்ஷ இச்சையுடைய நூதன அப்பியாசி. முமுக்ஷுவினுடைய நிலைமையானது மிகவும் பரிதபிக்கத் தக்கது. பூர்வஜன்ம வாசனைகளும் பிரபஞ்சாகிருஷ்ணை மும், பின்னுக்குப் பலமாக இழுக்க, தீவிர ஆத்திரமானது முன்னுக்கிழுக்க இடையில் ஜீவனானவன் படும்பாடு சொல்லி முடியாது. முமுக்ஷுவானவன், சதா சற்குரு சந்நிதியில் இருக்கக் கடவன். சற்குரு கடாக்ஷத்தாலும் தரிசனத்தாலும் உபதேசத்தாலுமே முமுக்ஷுவானவன் தனக்குநேரிடும் இடையூறுகளை ஜெயிக்கவல்லவன் ஆவான். குருபக்தியைத் தவிர வேறெவ்வித பாசமும் மனதிலிருக்க லாகாது. சற்குருவை ஸ்தானம், சத்பாவம், அங்கம், ஆப்தம் என்ற நான்கு விதங்களாலும் சிசுருஷை செய்யக் கடவன். முமுக்ஷுவுக்கு நேரிடும் சில இடையூறுகளைக் கூறுவாம். உலக விஷயத்தில் வெறுப்புத் தோன்றிய உடன் மனமானது திருப்திகரமாயிராமல் வருத்தமுறும். பெற்றோர், சிநேகர், மனைவி, செல்வம் முதலியவற்றிற் பற்று நீங்கும். யாதொருவிதத் தொழிலும் செய்ய விருப்பற்றவனாய்த் தாயை நாடும் குழவியைப்போல் தன் ரக்ஷையின் நிமித்தம் குரு சந்நிதானத்தையே நாடுவன். சிற்சில சமயங்களில் தாயார் வந்து கட்டியணைத்து முத்த மிட்டு “இச்சிறுபிராயத்தில் உனக்கிது தகாது. என்னைக் கைவிட்டால்,என்சொற்படி கேளாவிட்டால்,சமுத்திரத்தில் விழுந்து மாணமடைவேன். நாக்கைப் பிடுங்கிக்கொண்டு இறப்பேன்” என்று பலவிதத்திலும் கண்ணீர் ஆறாக விட் டழுது பிரலாபித்து உருகும்போது, முமுக்ஷுவானவன் மனங்கரைந்து ‘ஐயகோ! பத்துமாதம் சுமந்துபெற்று என் னைச் சீராட்டித் தாராட்டி எறும்பு கடிக்கவும் மனம் பொறாமல் வளர்த்ததாயை எப்படி வெறுக்கத்துணிவேன்!’ சர்வ சங்கப் பரித்யாகம் செய்த பட்டினத்தடிகள்கூட

மாதாவின் மரணந்தரம் புலம்பி யழுதார். அவதார புருஷ ஞகிய ஸ்ரீசங்கரரும் தன் மாதாவிற்குரிய தகனக்கிரியையை நடத்தினர். சைதன்னியரும் மாதாவை மறவாமல் அன்பு பாராட்டி வந்தார். பெற்றோரிடத்தில் பக்தி பாராட்டி வந்த புண்டரீக பக்தனுக்காக வன்றோ சாஷாத் பகவா னும் பாண்டுரங்கனெனப் பேர்பெற்று ஓர்கால் ஆற்றிலும் ஓர்கால் செங்கலின் பேரிலுமாகப் பண்டரிபுரத்தில் இன் றைக்கும் விளங்குகிறார். வயிற்றிலிருந்து சதையை அறுத் துக் கொடுத்தது போலன்றோ நம்மைப்பெற்றாள். அவளது ரக்தம் நமது தேகத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. மாதா வை மறப்பவனைக் காட்டிலும் நன்றிகெட்ட மிருகம் யார்? எவ்வளவோ பொறுக்கவொண்ணாத துன்பம் வந்த காலங் களிலும் நமதுமுகத்தைப்பார்த்துப் பிள்ளைகலி தீர்க்கவந்த பெருமானேயென்று சந்தோஷப்பட்டுத் தன் மனதை ஒரு வாறு தேற்றிக்கொள்ளுவாள். புத்திரன் சிறையில்பட்டான் என்று கேள்விப்பட்ட தினமுதல் ரக்தமும் சதையுமாக அறுத்துத் தள்ளுகிற தீராத கொடிய மூலவியாதியினால் வருந்துவாள். இங்ஙனம் என்னையே நம்பியிருக்கும் தாயை எப்படி மறப்பேன்' என்று தனக்குள் தானே உளறுவான். அவன் மனதானது தாயினிடத்தில் பற்றும்.

பின்னர் தான் விவாகஞ்செய்த மனைவியைப்பற்றி நினைப்பான். 'முன்னும் பின்னும் அறியாத அன்னியர் வீட்டில் பிறந்து மிகுசெல்வமாய் வளர்ந்து, பின் என்னை மணந்து பெற்றோர் சகோதரர் முதலியவர்களை விட்டு நீங்கி என்னையே கதியாக அடைந்திருப்பவளை எப்படி வெறுக்கலாம். நாம் கைவிட்டால் அவளுக்கு ஆதரவு யார்? அக்கினி சாக்ஷியாக நான் கைவிடேனென்று கைப்பிடித் தேனே. ஆகையால் சத்தியம் தவறிய மகாபாவியாவேன். அவள் இச்சிக்கப்பட்ட போகங்களை நல்காமல் நான்துறப்

பதால் அவளுடைய கற்பிற்குப் பங்கம் நேரிடுமாகில், நான் உத்தரவாதியாவேன் அல்லவா? பெண்ணென்றால் பேயும் இரங்குமென்று சொல்லுவார்கள். ஸ்திரீகளுடைய கண்ணீரானது பூமியில் சிந்தினால் அதற்குக் காரணமாயிருப்பவர்களுக்கு அதிசீக்கிரத்தில் நாசம் உண்டாகுமென்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றனவே. இன்னும் புத்திரோற்பத்தி யில்லாவிடில் புத் என்னும் நாகத்தினின்று விடுபட முடியாதென்று சாஸ்திரம் இருக்கின்றதே. ஆகையால் சிறிது நாள் மனைவியுடன் வாழ்ந்து அவளுடைய சம்ரக்ஷணைக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து, சில புத்திரர்கள் உண்டானபின்னர் பார்த்துக்கொள்வோம்' என்று ஓர் மெலிந்த தீர்மானம் செய்வான். அப்படியே ஒருகாலத்தில் தீரத்துவத்துடன் வெறுப்பானாயின், மனைவியானவள் தெருவில் முச்சந்தியில் போகும்பொழுது மடியில் கை போட்டு 'எனக்கென்ன வழி' என்று கேட்பாள். ஊர் ஜனங்கள் பார்த்து நிந்தித்துக் கையாலாகாதவன் என்று ஏளனம் செய்வார்கள். சம்பாதித்து ரக்ஷிக்கப் பயந்து கை விடுகிறான் என்பார்கள். ஆகையால் முமூக்ஷுவானவன் முமூக்ஷுத்துவத்தினின்றும் தவறுவான். அருமையாகிய புத்திரர்களையும், பந்து ஜனங்களையும் பிரிய மனமில்லாதவனாய் ஏக்கமுறுவான். தன்னுடைய செல்வத்தை நினைந்து நினைந்து 'நமக்கு என்ன குறையிருக்கின்றது? நமக்கு ஏன் இம்மனக் குழப்பம்' என்று பலவாறாகச் சிந்திப்பான். 'நமக்கு நல்ல புத்தி யுக்திகள் இருக்கின்றன. அதை அபிவிர்த்தி செய்து நூதன சாஸ்திரங்களைக் கண்டுபிடித்து மகா பண்டிதன் எனப் பேர்பெறலாம். கடவுள் இவ்வுலக வஸ்துக்களை நமக்காக சிருஷ்டித்திருக்க நாம் வெறுப்பது நியாயமன்று.' என்றிவ்வாறு நினைப்பான்.

2

இன்னும் சிநேகிதர்களைப் பார்க்கும்பொழுதோ,மனம் உருகி 'ஸ்நேக வாத்சல்யமானது விடப்படாதது. இருவர் மனமும் ஒத்து ஏகமனதாய் பால்யப்பருவ முதல் கட்டி யுருண்டு விளையாடி வளர்த்த ஸ்நேகத்தை எங்ஙனம் விடு தல் கூடும்? ஸ்நேகிதர்களுடைய சுகமும் துக்கமும் நம் மையும் பொறுத்தவன்றோ? ஆழ்ந்த சமுத்திரத்தில் மூழ்கி மரணமடைவதற் கொப்பான அதிகொடூர துன்பங்கள் நேரிட்ட காலத்தும் ஸ்நேகிதர்களால் நிவர்த்தியுண்டாகின் றது. ஸ்நேகிதர்களால் துன்பங்கள் மறக்கப்படுகின்றன. இன்பமே எங்கும் உலாவுகின்றது. நம்முடைய ஸ்நேகிதர் கள் எல்லோரும் அழகிய பட்டாடையுடுத்து, விலையுயர்ந்த ரத்தினாபரணங்கள் பூண்டு, அதி சௌந்தர்ய வதிகளான ஸ்திரீகளைப்புணர்ந்து, அதிகாரங்கள், கௌரவப்பட்டங்கள் வகித்து சிமான்களாய் வாழ்கின்றனரே! நமக்கு மாத்திரம் ஏன் இந்த மனக்குழப்பம்' என்று வெவ்வேறு விதமாக எண்ணி, முன்வைத்த காலைப் பின்வாங்குவான். இவ்வாறே உலகத்திலுள்ள ஒவ்வோர் விஷய சுகத்திலும் மனமானது அடிக்கடி நாடவும், இவ்விஷய சுகங்களிலெல்லாம் அநந்த கோடி ஜன்மங்களாய் அடிபட்டுத் தேர்ந்தவனாகையால் விரக்தி யுண்டாகவும், இவ்விதமாகச் சிறிது நாட்செல்ல சூரிய சந்நிதானத்தில் பனிபோல் சாக்ஷாத் சற்குரு தரி சனத்தாலும் கடாக்ஷத்தாலும் உளறிக்குழறிக் கொண் டிருந்த மனமானது திடப்பட்டு, வைராக்கியம் முதிரும். சற்குருலாபம் இல்லாவிடில் ஜீவனானவன் கடைத்தேறுவது மிகவும் கஷ்டம். முமுக்ஷு என்னும் நாமத்திற்கு அருக னாக முடியாது. வீழ்ந்திருக்கும் பாழ்ங்கிணற்றினின்றும் கைதூக்கி விடுவதற்கு குருவே அதிகாரம் பெற்றவர். சைதன்ய வஸ்துவே மானிடச்சட்டை சாத்திவந்து ஜீவ காருண்ய ஸ்வரூபியாய் குருமூர்த்தி எனப் பேர் வகிக்கும்.

புருஷன் இல்லாவிடில் ஒரு ஸ்திரீயானவள் எப்படிக் கர்ப்பம் தரியாளோ, அதுபோலவே குருவில்லாவிடில் முமுக்ஷு வுக்கு ஞானம் உண்டாதல் அரிது. அறிவுக்கறிவாய் நின் றுணர்த்துவதும் குருவேயாகும். குரு ஸ்வரூபத்தைத் தவிர வேறொன்றும் இல்லை. எவ்வளவு சாஸ்திரங்கள் அறிந்தாலும், எவ்வளவு புத்திமானு யிருந்தாலும், குரு வுபதேசம் இல்லாவிடில் மோக்ஷம் சித்தியாது. அதிகத் தாகத்தினுல் தவித்துக் கொண்டிருக்கும் ஒருவன் சமுத்தி ரத்தின் ஜலத்தைக் குடம் குடமாய் அருந்தினுலும் தாகம் தணியுமோ? தணியாது. ஆனுல், அதேசமுத்திர ஜலத்தை சூரியன் தன் கிரணங்களால் மேகரூபமாய்க் கிரகித்துக் கொடுக்க, ஒரு கையளவு ஜலமும் போதும். அதுபோலவே மோக்ஷ தாகத்தையுடைய ஒரு முமுக்ஷுவானவன் எவ் வளவோ அளவற்ற சாஸ்திரங்களை ஆராய்ந்திருந்தாலும் திருப்தியடையான். ஆனுல், சற்குருவானவர் தன் அப்பி யாசமாகிற கிரணங்களால் சாஸ்திரங்களாகிய சமுத்திர ஜலத்தை ஸ்வானுபவரூபமாகக் கிரகித்து முமுக்ஷுவுக்குக் கொடுக்க, அவருடைய ஒரு வார்த்தையே அவனைத் திருப் திப்படுத்தும். ஆகையால் ஜனன மரண வியாதியை சொஸ் தப்படுத்த சற்குருவே வைத்தியநாதன். பவசாகரத்தைத் தாண்டுவதற்கு அவரே படகுபோன்றவர். பிரபஞ்சப் பேய் ஓட்டுவதற்கு அவரே மந்திரவாதி. பிரபஞ்சத்தைப் பிரம்ம வஸ்துவாக்க அவரே ரசவாதி. தக்ஷிணு மூர்த்தி ஸ்வரூப மாய் வந்து, சனக சனந்தனுதியர்க் குபதேசித்ததும் அவரே. கால தேசங்கட்குத் தக்க பிரகாரம் ஸ்ரீ கிருஷ்ணனுகவும் ஸ்ரீ சங்கரராகவும், மத்வராகவும், ராமானுஜராகவும், மக மத் ஆகவும், இயேசு கிறிஸ்துவாகவும், புத்தராகவும் அவதாரம் செய்ததும் அவரே. அவரவரது பரிபாகத்தை முன்னிட்டு சற்குருவானவர் ஸ்நேகிதன் போலவும், பெற்

ரோர் போலவும், புத்திரர் போலவும், மனைவியாகவும், அடிமையாகவும் வந்து உபதேசிப்பர். ஜன்ம சத்துருவாகவும் மோக்ஷத்தை அளிப்பார். ஆகையால் குருபக்தியே முமுக்ஷுவுக் கணியத்தக்க கவசமாகும். ஏகலைவன் என்னும் வேடனானவன் தநுர்வித்தையைக் கற்கவேண்டி பஞ்ச பாண்டவ துரியோதனாதியருக்கு ஆசாரியராகிய துரோணரிடம் வேண்டிக்கொள்ள, அவர் மறுக்க, உடனே அவருடைய படம்செய்து, அதனிடத்தில் பக்திபாராட்டித் தானே யாவர்க்கும் அரிதாகிய வித்தையைக் கற்றுக்கொண்டான். கபீர்தாசரும் குருபக்தியினால் கோரக்ஷநாதனை வென்றார். ஸ்ரீ சங்கரரானவர் கங்கையின் அக்கரையிலிருந்து இக்கரையிலிருக்கும் தனது சிஷ்யராகிய சுரேஸ்வராசாரியரைக் கூப்பிட, உடனே அவர் கங்கையிலிறங்கி, குருபக்தி மகாத்மியத்தால் கங்கையினிடத்தில் பத்மதளங்களைப் பாதம் வைக்கும் இடங்களில் பெற்று, பத்மபாதர் எனப் பெயர்பெற்றுப் பிரகாசித்தார். எல்லோராலும் மூடன் எனக் கருதப்பெற்ற ஆனந்த கிரியார் ஸ்ரீசங்கரரது நான்கு மடங்களுள் ஒன்றிற்கு ஆசாரியரானார். இங்ஙனமே குரு பக்தியினால் சித்தி முத்தி யடைந்தவர் அனந்தகோடி. சாதன சதுஷ்டய அதிகாரியாகிய சிஷ்யன் குருவைத் தேடுகிறான். வேளாண்மைக்காரன் தகுந்த நிலத்தைத் தேடுவதுபோல குருவும் சிஷ்யனைத்தேடுகிறார். இருவருடைய ஆத்திரமும் முதிருங்கால் ஒருவரை யொருவர் சந்திக்கிறார்கள். சூரிய தரிசனத்தால் தாமரை மலர்வதுபோல் குரு தரிசனத்தால் சிஷ்யன் பிரகாசிப்பான். குருவின் உபதேசமின்றி அஞ்ஞானாந்தகாரம் நீங்காது. நாமதேவருக்கு சாக்ஷாத் ஈஸ்வரன் நேரே வந்து தரிசனம் கொடுப்பதும், ஊட்டுவதும், கூட உண்பதுமாயிருந்தும், வேகாத சட்டி என்றன்றோ கோராகும்பர் நீக்கிவிட்டார்? ஏனென்றால், சற்குரு லாபம் இல்லாததால்.

நிற்க, குருக்களென்றும், மடாதிபதிகளென்றும் ஒவ்வோர் காரிய நிமித்தம் நடிக்கும் வேஷதாரிகளை மிகவும் கவனிக்க. இவர்களைக் குரங்குகளென்றும், மடமைக்கு அதிபதிகளென்றும் நினைக்கவேண்டும். இவர்களை நம்பினுல் குருடும்குருடும்கூடிக் குருட்டாட்டமாடிக் குழியில் விழுந்த கதைபோல் முடியும். இவர்களுக்கு சிஷ்யராவோர், கஞ்சா அபின், கள்ளு, சாராயம் முதலிய சாதன சதுஷ்டயத்தில் அந்தரங்க அப்பியாசிகளா யிருக்கவேணும். ஒருகாலத்தில் ஒரு திருடன் திருடப்போன விடத்தில் பிடிபட்டான். இருட்டாயிருந்தபடியால் அந்த வீட்டுக்காரன் அந்தத் திருடனுடைய மூக்கையறுத்து, மறுநாட்காலையில் அவனை அடையாளம் கண்டுகொள்ளலாம் என்று விட்டு விட்டான். திருடன் ஊரிலிருந்தால் சங்கதி வெளியாகும் என்று பயந்தும், மூக்கறுபட்டிருப்பதால் வெட்கப்பட்டும், காட்டிற்கு ஓடி, காஷாயம் தரித்து சந்நியாசி வேடம் பூண்டான். ஒருவரையும் காணுவிடில், காய், கனி, பழங்களைப்பறித்து உண்பதும், யாரையாவது கண்டுவிட்டால், தான் கட்டிவைத்திருக்கும் குடிசைக்குள் நுழைந்து, கண்மூடி நிஷ்டையிலிருப்பதாகப்பாவனை பண்ணுவதுமாயிருந்தான். இரண்டு மூன்று தினத்திற்குள் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக மூக்கறுபட்ட சாமியாரைப் பார்க்கவரத் தலைப்பட்டார்கள். பால் பழங்கள் தாராளமாகிவிட்டது. சாமியார் மௌனம் சாதித்தார். இப்படிச் சின்னுட்செல்ல, சிலர் சாமியாரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்ள இச்சைப்பட்டார்கள். அதில் ஒருவன் பால்,பழம்,மதிப்பு முதலியவற்றில் தீவிரதரஇச்சையுடையவனுப், தினந்தோறும் மூக்கறுபட்ட சாமியாரை உபதேசத்திற்குத் தொந்தரவு செய்து வந்தான். ஒருநாள் மூக்கில்லாச்சாமியார் அவனைக்கூப்பிட்டு, கூர்மையான கத்தி யொன்று கொண்டுவந்து கொடுத்தால், உப

தேசம் செய்வதாக மௌனவாயைத் திறந்து சொன்னார். அவன் அப்படியே ஒரு கத்தியுடன் மறுநாட் காலையில் குருவின் எதிரே நின்றான். சாமியார் அவனைத் தனியே வெகுதூரம் கொண்டுபோய்க் கத்தியை வாங்கிக்கொண்டு கீழே உட்கார்ந்து கண்ணை மூடச்சொன்னார். அவன் அப்படியேசெய்ய, சாமியார் தனக்குக்கிடைத்த உபதேசத்தைக் கத்தியால் அவன் மூக்கின்பேரில் கொடுத்து விட்டார். மூக்கறுந்தவன் அழ,சாமியார்“என்னுடையகுருவினிடத்தி லிருந்து எனக்குக் கிடைத்த உபதேசம் இதுவேயாகும். நான் எப்படிக் காப்பாற்றி வருகிறேனோ அப்படியே நீயும் செய்வாய்” என்று சொல்லிவிட்டார். அவனும் அவமானத் திற்குப்பயந்து இன்னொரு காட்டிற்குப்போய் மூக்கில்லாச் சாமியாரானான். அவனும்அநேகருக்குஇவ்வாறேஉபதேசம் செய்தான். இம்மாதிரி நாடெல்லாம் மூக்கில்லாச் சாமியார் கூட்டமாயிற்று என்பதாக ஒரு கதையுண்டு. அதுபோன்ற மகான்களும் குருக்களுமே இப்பொழுது அதிகமாகக் காணப்படுவார்கள். ஆகையால், வெகு ஜாக்கிறதையா யிருக்கவேணும். சற்குருவானவர் அதிகாரத்துடன் விளங் குவார். ஒருவர்க்கொருவர் அடித்துக் கலகம் செய்து கொண்டிருக்கும் கும்பல் ஜனங்கள் எப்படி சாதாரண ஜனங்கள் விலக்கினால் விலகாமல் சர்க்கார் அதிகாரம்பெற்ற ஒரு போலீசுக்காரனுடைய வார்த்தைக்குச் செவி சாய்ப் பார்களோ, அப்படியே பிரபஞ்சக் கலகத்திற்குட்பட்ட ஜனங்கள் சாதாரண வேஷதாரிகளுடைய கபட வார்த்தை களுக்குச் செவி சாய்க்காமல் வாஸ்தவ குருவிற்குப் பணிவார்கள். மகான்கள் உலகத்தவாது பழிப்பிற்குக் காரணமாவார்கள். சத்தியோத் தாரணத்தின்பொருட்டு வெகு ஹிம்சைக்குள்ளாவார்கள். அப்பேர்ப்பட்ட ஞானி களாகிய குருக்களை முமுக்ஷுவானவன் அடையக்

கடவன். யாருடைய சந்நிதானத்து முமுக்ஷுவுக்குப் பயமின்மையும், மனத்தெளிவும், சந்தோஷமும் உண்டாகின்றதோ அவரே அவனுக்குக் குரு. எப்படிச்சிற்றின்பப் பிரியர்களுக்கு ஸ்திரீ ஸம்போகத்தில் சுகம் உண்டாகுமோ அப்படியே பேரின்பப்பிரியனாகிய முமுக்ஷுவுக்குக் குரு உபதேச ஸம்போகத்தில் ஆனந்தம் ஜனிக்கும். ஆகையால் முமுக்ஷுவானவன் குருவைத்தேடி, எதிர்வரும் அவரைக் கண்டு அவருடன் குருகுலவாசம் செய்யவேணும். சதா சர்வதா காலமும் குரு சந்நிதானத்திலேயே இருந்து தன் களங்கத்தை மாற்றவேணும். அவர் உண்டு மிகுந்த சேஷத்தைப்புசித்து, அவரது சரீரத்தைத் தன்னுடையதாகப் பாவித்துக்காப்பாற்றக்கடவன். அவரைஉயிர்க்குயிராய்ஸ்நேகித்து அவர் பொருட்டுத்திரிலோகங்களையும் திரணீகரிக்கக் கடவன். அவரது ஸ்தானத்திற்குத் தினந்தோறும் பூஜை செய்யக்கடவன். அவரை சாக்ஷாத் சச்சிதானந்தசொரூபமாகவே கருதக்கடவன். இவ்விதமாகவே குருகுலவாசம்செய்யும் காலையில், நாம் முன்னர் கூறியுள்ள பிரவர்த்தி நினைவுகள் மனதில் அடிக்கடி தோன்றும். அநேக சந்தேகங்கள் உண்டாகும். அவைகளைக் குருவினிடத்தில் கூறுவான். குருவானவர் அவன் மனதில் உண்டாகும் சந்தேகங்களை உடனுடன் நிவர்த்திசெய்து அவனுடைய மனதைத் திடப்படுத்தி, சர்வசங்கப் பரித்தியாகம் செய்யும்படியாய்ச் செய்து, கடைசியாய் அவனைக் கேவலம் தனித்த ஆத்மானுபூதியி லிருத்திவைப்பார். இவற்றைக் குருசிஷ்ய சம்பாஷணை ரூபமாக வெளியிடுவோம். கரைதெரியாமல் கப்பல் மாலுமியின் மனம் நிலைதடுமாறித் தத்தளிப்பதுபோல, முமுக்ஷுவானவன் ஆண்டி பரதேசிகளைத்தேடி அடிபணிபவும், காஷாய வஸ்திரதாரிகளின் பின்னே அலைந்து காத்திருப்பதுமா யிருப்பான். ஆனால்

ஒருவரிடத்தும் அவன் மனம் திருப்திப் படுகிற தில்லே. ஒருநாள் ஒரு மகான் தான் கட்டியிருக்கும் கோவணம் தவிர வேறு உலக உடைமையில்லாதவராய் ஒரு தடாகத்தின் கரையில் சதா ராமநிஷ்டாபரராய் விளங்கு கிருர். சில ஜனங்கள் அங்கு கூடுகிருர்கள். கண்விழித்து மனமானது பகிர்முகப்பட்டு உலக உணர்ச்சிபெற, சிறிது நேரம் வேதாந்த விஷயங்களேப் பற்றிப் பிரசங்கிக்கிருர். பேசிக்கொண்டிருக்கும்பொழுதே மனமானது லக்ஷ்யத்தை நாடிவிடுகிறது. சமாதியில் கூடிவிடுகிருர். இதைக் கேள்வி யுற்ற முமுக்ஷுவானவன் தானும்போய்ப் பார்த்துவரலா மென்று அங்குசெல்கிருன். அப்பொழுது அவர் தனது அநு பவாநந்தத்தைப் பகிர்ந்து கொடுத்துக்கொண்டிருக்கிருர். அவனேக் கண்டவுடன் தலேயை யசைத்து உட்காரும்படி சைகை காட்டுகிருர். ராஜாதிபிரபுக்கள் வந்தபோதிலும் இவர் தலேயை யசைப்பதில்லே. நிமிர்ந்துகூடப் பார்ப்பதில்லே. இவனேக் கண்டவுடன்தான் சைகை செய்தார். இது ஜனங் களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது. கடைசிவரையிலிருந்து விட்டு,ஜனங்கள் கலேயும்பொழுது இவனும் போய்விடுகிருன். இங்ஙனமே தினம் வந்துபோய்க்கொண்டிருக்கிருன். அவ ராவது இவனுவது ஒருவர்க்கொருவர் நேரேபேசுகிறதில்லே. ஆனல், இவன் வந்தவுடன் அவர் தலேயை யசைப்பது வழக் கமாய்விட்டது. அவரது நிர்ப்பயமான தத்துவஞானப் பிரசங்கங்களே இவன் அறியமுடியாதவனுயிருந்தபோதிலும் ஒரு குழந்தையானது எப்படி வாழைப்பழத்தின் பேர் லக்ஷணம் முதலியவற்றை அறியாமலிருந்தபோதிலும் அப் பழத்தினிடத்தில் பிரியப்படுமோ, அதுபோலவே இவ னுக்கு அம்மகானது வசனங்கள் அமிர்த சமானமாயிருக் கின்றன. ஆகையால், தினம்போய்ச் சித்திரப் பதுமைபோல் நின்றுவிட்டு வருகிருன். அவரைத் தனியேகண்டு தன்

குறைகளேயும் ஆசைகளேயும் சொல்லி நிவர்த்தி பெறவேணு மென்று மிகவும் இச்சிக்கிருன். இதற்காக ஒருநாட் காலே 9-மணிக்கு அவரை தரிசனம் செய்யச் செல்கிருன். அவரைச்சுற்றி ஒருவருமில்லே. தனியே சதானந்தராயிருக் கிருர். அவரது பாதபத்மங்களில் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தெழுந்து மிகவும் பயபக்தியுடன் ஒதுங்கிநிற்கி ருன். அவரும் உடனே சமாதியினின்றும் கண்விழித்துப் பார்த்து, தலேயையசைத்து உட்காரும்படி சைகைசெய்தார். ஆனல், இவன் உட்காராமல் அவரது இருபாதங்களேயும் கட்டித்தழுவி முத்தமிட்டு, "ஸ்வாமி! என்னே ஈடேற்ற எழுந்தருளி வந்த குருமூர்த்தி! நான் மிகவும் தவிக்கிறேன். இப்பிரபஞ்சத்தினின்றும் பயமும் துக்கமுமே உண்டாகின் றன. மனதோ சுகத்தையே நாடுகின்றது. அதற்கு ஒரு வழியும் காணேன். உலகவஸ்துக்கள் அழிவுறுவன என் றும், துக்காஸ்பதம் என்றும் நன்ருக அறிந்தும், இவை களேயே மறுபடியும் மறுபடியும் நம்பித் தத்தளிக்கிறேன். ஏதோ துக்கமானது என்னப்பனே! என்னிடம் குடிகொண் டிருக்கிறது! வேருென்றும் சொல்லத் தோன்றவில்லே. என்னே எப்படியாவது ரக்ஷிக்கவேணும். ஸ்வாமி! தங்களு டைய சந்நிதானத்தில் நான் குதூகலமடைகின்றேன். தைரி யம், பலம், பராக்கிரமம்—இவை மென்மேலும் என்னிடம் வளர்கின்றன. உலகத்தை வெறுப்பதற்கு மனமும் உண்டு. ஆனல், பாவத்தை யடைவேனென்று பயப்படுகின்றேன். பித்துப் பிடித்தவன்போல் விழிக்கின்றேன்." என்று இரு கண்களிலும் கண்ணீரானது தாரை தாரையாய்ப் பொழியத் தேம்பி யழுதுநின்ருன்.

குரு:—புத்திரா! பயப்படாதே. நான் அபயாஸ்தம் கொடுத்தேன். அரியஞான விஷயங்களேக் கிரகிக்க தற்காலத் தில் நீ வல்லவனன்ருயினும் உன்னிடம் நிரம்ப நம்பிக்கையும்

விஸ்வாசமும் குடிகொண்டிருப்பதால், நீ சற்றும் கிலேசிக்க வேண்டாம். ததீசிமகரிஷி யானவர் தேவர்களுடைய அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் விழுங்கிவைத்திருந்து மறுபடியும் அத்தேவர்களின் ரக்ஷையின் நிமித்தமே (கொடிய அசுரர்களை ஸம்ஹரிக்கும் பொருட்டு) தன் முதுகெலும்பு ரூபமாக வஜ்ராயுதத்தைத் தேவேந்திரனுக்கு அளித்தன ரன்றோ? அதுபோலவேதான் ஆத்மவஸ்துவானது. உனது யதார்த்த சொரூபத்தை நான் கிரகித்து, மறுபடியும் உன்னுடைய ரக்ஷையின் நிமித்தம் ஸ்வானுபவ ரூபமாகத் திரட்டி யுருட்டிக் கடைந் தெடுத்த ஆத்மஞானத்தை இதோ உனக்கு அளிக்கின்றேன். நீ இவ்வஜ்ராயுதமான ஆத்மஞானத்தால் கொடிய அசுரர்களாகிய பிரபஞ்ச விஷயங்களை ஸம்ஹாரம் செய்து ஸ்வராஜ்ய பதவியிலிருப்பாய்.

சிஷ்யன்:—ஸ்வாமி! தாங்கள் சொல்லிய வெல்லாம் அமிர்த சமானமாயிருக்கின்றன. ஆனால் ‘நம்பிக்கை’ என்றும், ‘விஸ்வாசம்’ என்றும், ‘உனது’ என்றும், ‘உனது ஆத்ம ஞானத்தை உன் ரக்ஷையின் நிமித்தம் நான் கொடுக்கிறேன்’ என்றும் பலவாறாகச் சொன்ன விவரம் விளங்கவில்லை. ஆகையால் கருணை புரிந்து தெளிவாகக் கூறவேண்டுகிறேன்.

குரு:—அப்பனே! சொல்வதைச் சிரத்தையுடன் கேட்பாய். சகல விஷயங்களுக்கும் நம்பிக்கையே காரணம். நம்பிக்கையாலே உலகம் கட்டப்பட்டிருக்கின்றது. நம்பிக்கையில்லாமல் போகுங்காலத்து, துக்கமும் துன்பமும் மேலிடுகின்றன. களங்கமற்ற மனத்தினிடத்திலேயே நம்பிக்கை யுதயமாம். சாதாரணமாக உலகவழக்கத்தில்கூட நம்பிக்கை மோசம் என்பது பெருங்குற்றமாகக் கேட்டிலையோ? நம்பிக்கையின் முதிர்ச்சியே பக்தியெனப்படும். ஸ்திரமான நம்பிக்கையை உடைத்தாயிருக்கும் ஒருவனுக்கு அபஜயம் ஸ்வப்பனத்திலும் கிடையாது.

"True hope is swift and flies with swallow's wings,
Kings it makes gods and meaner creatures kings."
என்றபடி பரிபூரண நம்பிக்கையே ஒருமனிதனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாயிருக்கின்றது. மகம்மதிய மதத்திற்கு நம்பிக்கையே ஆணிவேர் போன்றது. சாதாரண நம்பிக்கையாலன்றோ கோடானுகோடி ஜனங்கள் மகமதியர்களாய் மகாவைராக்கிய சாலிகளாய் விளங்குகிறார்கள்? மகானாகிய இயேசு கிறிஸ்துவினுடைய மகாவாக்கியோபதேசமாவது "என்னை நன்றாய்நம்பு. நானும் என் பிதாவும் ஒன்றே. நம்பினால் மோக்ஷமடைவாய்." என்பதே. நம்பிக்கையே கிறிஸ்துமதத்திற்குப் பிரதான அங்கமாயுள்ளது. சுருங்கச்சொல்லில், நம்பிக்கையே சகலமதங்கட்கும் ஆதாரமாயுள்ளது. நம்பிக்கை யென்னும் அஸ்திவாரம் இடிபட்டால் மதங்களும் தூளாய் விடும். நம்பிக்கையே அறிவென்றும், ஞானமென்றும், ஜீவகாருண்ணிய மென்றும் பற்பல நாமரூப பேதத்துடன் விளங்குகின்றது. வான்மீக முனிவர் நாரதருடைய "மராமரம்" என்னும் வார்த்தையில் அதிநம்பிக்கையால் திரிகால ஞானியாகி, வான்மீகர் எனப் பேர்பெற்று ராமாயணம் என்னும் சிறந்த இதிகாசத்தைத் தீர்க்கதரிசிபோல் வெளியிட்டார். கபீர்தாசரும் சாதாரண நம்பிக்கையாலே அணிமாதி அஷ்ட சித்திகளைப் பெற்றார். நாமதேவருக்குக் குழந்தைப் பருவத்தில் சாதாரணமாக உண்டாகப்பட்ட நம்பிக்கையா லன்றோ சாக்ஷாத் பகவானும்விக்கிரகத்தினின்று வெளிப்பட்டு,ஊட்டுதல்,கூட உண்ணுதல், கொஞ்சுதல் முதலிய திருவிளையாடல்களைச் செய்தார். நம்பிக்கையான தத்துவமே உலகத்தில் அரசு செலுத்துகின்றது. பிசாசென்பதும் பேயென்பதும் நம்பிக்கையிலேயே உற்பத்தியாகின்றன. ஏன்? இப்பிரபஞ்சமே நம்பிக்கையாகிற பிராதிபாசிகாவஸ்தையில் உற்பத்தி

யாகி, நம்பிக்கையாகிற வியாவகாரிகாவஸ்தையில் ஸ்திதி செய்யப்பட்டு, நம்பிக்கையாகிற பாரமார்த்திகாவஸ்தையில் ஸம்ஹாரம் செய்யப்படுகின்றது. ஜீவனை அதோகதியில் தள்ளுவதும் நம்பிக்கையே. கரையேற்றிச் சதாநந்தானுபவனுக்குவதும் நம்பிக்கையே. ஒரு ராஜ்பத்தில் ஜனங்கள் நம்பிக்கையால் எக்காலம்வரை கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறார்களோ, அக்காலம்வரை ராஜாங்கச் சட்டங்கள் அவசியமில்லை. எக்காலத்தில் ஒருவரோடொருவரைப் பிணைத்துக் கட்டியிருக்கும் நம்பிக்கைக் கயிறு அறுந்துவிடுமோ அக்காலமுதல் அந்தராஜ்பத்தில் நாசம் தொடங்கிவிடுமென்றறியவும். நீ என்னிடத்தில் நிறைந்த நம்பிக்கையுள்ளவனுகையால் உனக்கு வெற்றி கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை என்று சொன்னேன். சிஷ்யா! நம்பிக்கையென்னும் விஷயத்தைப் பற்றி இன்னும் ஏதேனும் சந்தேகங்கள் உண்டானுல் கேள்.

சிஷ்யன்:—"நம்பிக்கை" என்பதைப் பற்றி நன்ருக அறிந்து கொண்டேன். ஆனுல், குருமூர்த்தியே! ஒரு சந்தேகம் உண்டாகிவிட்டது. வெறும் நம்பிக்கையே நான் ரக்ஷைப்படுவதற்குப் போதும் என்பது எங்ஙனம் கூடும்?

குரு:—புத்திரா! நம்பிக்கையின் முதிர்ச்சியே பக்தியெனப்படும் என்று நான் சொல்லியதை ஞாபகப்படுத்திக் கொள். என்னைத் திரிகாணங்களும் ஒத்து நம்பிவிட்டதால் உன் மனத்தில் என்னிடம் விஸ்வாசம் ஏற்பட்டுவிட்டது. அந்த விஸ்வாசமானது பழுத்து குருபக்தி யுண்டாகும். அப்பொழுது நான் சொல்வதையெல்லாம் வேதவாக்கியமெனக்கொண்டு நீ என் முறைபிறழாமல் நடப்பாய். பலனும் கைகூடும். மங்கிய அறிவுடையவர்களுக்கு நம்பிக்கையே வழிகாட்டும் தீபமாகும். நம்பிக்கையாகிற புஷ்பம் தோன்றி, அதினின்று விஸ்வாசம் என்ற பிஞ்சுவிட்டுப்

பழுத்து, பக்தியென்னும் கனியுண்டானல், அது ஜீவனது துக்கநிவர்த்திக்கும் ஆனந்தப் பிராப்திக்கும் காரணமாகும். களங்கமற்ற பக்தியுண்டானல் ஞானம் ஒருவருடைய முயற்சியே யின்றிப் பிரகாசிக்கும். மகமதியர்களுக்கு மகம்மது என்னும் தீர்க்கதரிசியிடத்தில் முழு நம்பிக்கை யேற்பட்டுவிட்டதாலும், அவருடைய உபதேசங்களே வேதமென்று அவர்கள் பரிபூரணமாய்க் கைக்கொண்டதாலும் அவர்களுடைய சக்தி பிரகாசிக்கிறது. நம்பாதவர்களை சிக்ஷை செய்தாவது நம்பச்செய்யவேணும் என்ற கருத்துடன் மகம்மதியர்கள் ஒவ்வோர் காலங்களில் ரக்தஆறு ஓடும்படி செய்து, உலகத்தில் பயங்கரத்தை உண்டாக்கினர்களல்லவா? ஆழ்ந்து ஆலோசிக்கும் அறிவில்லாத வெறும் நம்பிக்கையாலேயே அம்மதமும், அதை அனுசரிப்பவர்களும் சூரியன் ஒளிபோல் விளங்குகிறார்கள். உனக்கும் நம்பிக்கையும் விஸ்வாசமும் இருப்பதால் நீயும் ஞானவஸ்துவாய்ப் பிரகாசிப்பாய்.

சிஷ்யன் :—குரு மஹாராஜ்! வீண் நம்பிக்கையானது மூடபக்தியில் கொண்டு விடாதோ? அறிவு சற்றுமில்லாத மூடபக்தியினல் ஆபத்தல்லவா விளையும்? ‘ ஒரு தாய்க்காடியானது இறக்க, அதன் இளங்குட்டி பக்கத்தில் நின்று பரிதவிக்க, அதைப்பார்த்து ஒரு வழிப்போக்கன் அக்குட்டியைக் கூட இட்டுக்கொண்டுபோய் அதன் தாயைப்போல் வளர்த்துக்கொண்டு வருகையில் காடியும் மனிதனும், மகனும் தகப்பனும் போலவே அந்யோந்யம் நம்பிக்கையுடையவர்களா யிருந்தார்கள். ஒருநாள் காடி உட்கார்ந்திருக்க அதன் மடியில் மனிதன் தலைவைத்து உறங்கினன். ஒரு ஈயானது அம்மனிதன் முகத்தில் உட்கார, காடியானது ஈயைக் கொல்லக் கருதி அறிவின்மையால் கையை ஓங்கி மனிதனது முகத்திலறைய, ஈயும் மனிதனும் ஆக இரு

வரும் மடிந்தார்கள்.' என்று ஒரு கதை கேட்டிருக்கிறேன். அறிவில்லா விஸ்வாசத்தால் இவ்விதமல்லவா நேரிடும்? ஆகையால், இன்னும் தெளிவிக்கக் கோருகிறேன்.

குரு:—மகனே! நம்பிக்கையானது ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாகும் என்று கூறினேனன்றோ? மித்தையாகிய பிரபஞ்சவிஷயத்தில் நம்பிக்கை வைத்தால் துக்கத்திற்கும், எதார்த்த வஸ்துவினிடத்தில் நம்பிக்கை வைத்தால் ஆனந்தத்திற்கும் காரணமாகும். எங்ஙனமெனின், தீக்குச்சியானது தீபம் ஏற்றுதல், சமயல் செய்ய அடுப்புமூட்டுதல் முதலிய நன்மையான காரியங்களுக்கும், வீடுகளுக்கு நெருப்பு வைத்தலாதிய கெட்ட காரியங்களுக்கும் உபயோகப்படுவதுபோலாம். ஆகையால் உபயோகிக்கும் தன்மையிலிருக்கிறது உபயோகிக்கப்பட்ட வஸ்துவின் குணம். காடியினிடத்து நம்பிக்கையும் விஸ்வாசமும் முதிர்ந்து கனியவில்லை மிருகமாகையால். பிரபஞ்ச நம்பிக்கையில்தான் துன்பமும் துக்கமும் உள்ளன. உனக்குப் பிரபஞ்சவிஷய வெறுப்புத் தோன்றி வருவதால், பக்தியாகிற கனி உண்டாகும் என்பதில் சந்தேகம் இல்லை. அன்றியும், உனது நம்பிக்கையும் விஸ்வாசமும் பூர்ணமாயிருக்கிறதை அறிந்தே, தானே கனியாவிட்டாலும் கனியவைக்கலாம் என்று நிச்சயித்தேன். ஆகையால்தான் உன்னைக் கண்டவுடன் என் அன்பையும் நிச்சயத்தையும் வெளியிட்டேன். குருவானவர் சிஷ்யனைத் தேடுகிறார். சிஷ்யன் குருவைத் தேடுகிறான். நான் உன்னைத் தேடினேன். நீ என்னைத்தேடினாய். இருவரும் சந்தித்தோம். நிலமானது அவ்வளவு தகுந்ததாயில்லாவிடினும் எங்ஙனம் உடையவனது எரு விடுதல், கவனித்தல் முதலிய சாமர்த்தியத்தால் நல்ல விளைவைக் கொடுக்குமோ அங்ஙனமே குருவினது போதிக்கும் திறமையால் சிஷ்யன் பக்குவப்படுவான். மகம்மது

என்னும் மகானது 'நம்பிக்கை நிச்சயம்' என்னும் தத்துவத்தை உண்மையான வழியில் செலுத்தினால், ஞானம் பிரகாசிக்கும். முக்தி கைகூடும். தப்பானவழியில் செலுத்தினால், முன் கண்டதும் இப்பொழுது காண்பதும் போல அனந்தகோடி ஜீவஹிம்சைக்கும் இரக்தவெள்ளப் பெருக்குக்கும் காரணமாகும். இயேசுகிறிஸ்து என்னும் பிரம்ம ஞானியின் 'நம்பிக்கை நிச்சயம்' என்னும் உபதேசத்தை யதார்த்தமாக அறிந்து அநுசரித்து நடந்தால் அவருடைய பிரதம சிஷ்யர்களைப்போல் பேரானந்தத்தையடையலாம். பிரபஞ்ச விஷயத்தில் செலுத்தினால், இப்பொழுது அநேகமாய்க் காண்பதுபோல் சூது, வாது, மோசம் முதலிய நரகசாதனங்களை ஆபரணமாக அணியலாம்.

சிஷ்யன்:—ஆ! என் உயிர்க்குயிராகிய கடவுளே! என்னைத் தடுத்தாளவந்த குருநாதா! நம்பிக்கையால் சித்தி பெறலாமென்று நன்றாயறிந்தேன். இப்பொழுது "உனது ஞானத்தை உன் ரக்ஷையின் நிமித்தம் உனக்கே கொடுக்கின்றேன்" என்று தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய விவரம் தெரியவில்லை.

குரு:—எந்தன் ஞானபுத்திரா! இது அரிய பெரிய விஷயம். இதை நீ நன்றாய், சிரவண, மநந, நிதித்தியாசனாதிகளால் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்தால், இப்பேற்றைவிட நீ அடையும் பேறு வேறொன்றும் இல்லை. இதுவே மனுஷ்ய ஜன்மப் பிரயோஜனமாகும். கர்மம், பக்தி யோகம், ஞானம் என்னும் பலமார்க்கங்களால் அடையும் லக்ஷ்யம் ஆகும். சகலரும் இச்சிக்கிற சுகமுமாகும். இதுவே சகலவேதாந்த சித்தாந்தங்களின் முடிவு. இதுவே ஸ்வராஜ்ய மென்று ராஜரிஷிகளால் குறிக்கப்பட்ட லக்ஷ்யம். இதுவே நிர்வாண பதமாகும். ஆகையால்,கவன

மாய்க் கேட்பாய். “ நீயே அகண்ட சச்சிதானந்த ஸ்வரூப மாய்ப் பாவிக்கப்பட்ட சுத்தப் பிரம்மவஸ்து. ஆத்மவஸ்து வென்பதும் நீயே. பிரம்மவஸ்து வென்றாலும் ஆத்மவஸ்து வென்றாலும் ஒன்றே. துரியாதீதமான ஞானப்பிரகாசமே உனது ஸ்வரூபம். “ தத்வமஸி ” (நீ அதுவாயிருக்கிறாய்) என்பதே சாமவேத மகாவாக்கியத்தின் முடிவு. உன்னைத் தவிர வேறே வஸ்து கிடையாது. நீ தன்னந்தனியனாயிருக் கிறாய். நீ ஏகமாயிருக்கிறாய். அதாவது, இரண்டற்றிருக் கிறாய். சுஜாதீய விஜாதீய ஸ்வகத பேதரஹித வஸ்து நீ. மரம் ஒன்றிருக்கிறது. வேறொரு மரமிருந்தால் சுஜா தீயம். வேறொரு ஜாதியாகிய மாடு அல்லது ஏதாவது இருந்தால் விஜாதீயம்; மரத்திற்குக் கிளைகள் ஸ்வகதம். இதுபோல பிரம்ம வஸ்துவாகிய உனக்கு உன்னைப்போல வேறொரு பிரம்மவஸ்து வில்லை. உன்னைத்தவிர வேறொரு வஸ்துவும் இல்லை. உனக்குப் பிரிவுகளாகவும் ஒன்றும் இல்லை. நீ பரந்த ஆகாயம்போ லிருக்கிறாய். நிஷ்களங்கமாயும் நிர்மலமாயும் இருக்கிறாய். நீ சர்வவியாபகன், சர்வசக்தன், சர்வாந்தர்யாமி. சுகதுக்கங்களாகிய ஆண்பெண் அலைக ளால் சதா கோஷித்துக் கொண்டிருக்கும் இப்பிரபஞ்ச சமுத்திரமும் நீயே யாகும். உனக்கு சத்து, சித்து, ஆனந்த மே ஸ்வரூபமாகும். அதாவது, நீ திரிகாலத்திலும் அழி வற்றவஸ்து; நீ ஸ்வயம் பிரகாசவஸ்து; நீ சதானந்தவஸ்து.

சிஷ்யன்:—என்னைத்தவிர வேறொன்றும் இல்லையென்று சொல்லுகிறீர்கள். நான் என்னைத்தவிர அநந்த கோடி வஸ்துக்களைப் பார்க்கிறேன். இது எனக்கு அனுபவ சித்தமாயிருக்க, இதை மறுப்பதெங்ஙனம்? தெளிவிக்கக் கோருகிறேன்.

குரு:—ஞானபுத்திரா! நீ அனாதி யவித்தியாவாசனை யால் உன் யதார்த்த ஸ்வரூபத்தை மறந்து, வியஷ்டியாகிய

ஜீவனெனப் பெயர் பெற்ருய். நீயே வீண்பிரமையாகிய மாயையால் இப்பிரபஞ்ச மானுய். இம்மாயையால் நீயே சகலமு மானுய். இம்மாயையால் உன்னேயே வேறு வேறு ரூபமாகப் பார்க்கிருய். அவித்தையை நீக்கினுலும் பிரம்ம வஸ்துவானுய். மாயையை ஒழித்தாலும் பிரம்மவஸ்து வானுய்.

சிஷ்யன் :—முதலில் பிரபஞ்சத் திற்கும் பிரம்மத் திற்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

குரு:—ஆகட்டும். நீயே பிரபஞ்சமாயிருப்பதையும்,ஜீவனுயிருப்பதையும், ஈசுவரனெனப் படுவதையும் ஒவ்வொன்ருய்க் கூறுகிறேன். கவனித்துக் கேட்பாய். சந்தேகம் ஏற்படும் பொழுது, கேட்டுத் தெரிந்து கொள். சந்தேக நிவர்த்தி செய்யாமல் என்னுடைய இரண்டொரு வார்த்தைகளே மாத்திரம் கேட்டு, அதன்படி மூடத்தனமாய் நடக்க விரும்பினுல் கேடு சம்பவிக்கும். ஆகையால், உன்மனதில் அவ்வபோது உண்டாகும் சந்தேகங்களே, அவை அற்பமாயினும் அரியதாயினும், தாராளமாய்க் கேட்டு நிவர்த்தி செய்து கொள். ஒரு மகான் ஒரு ஊரில் தினந்தோறும் வேதாந்த விஷயங்களேப் பற்றிப் பிரசங்கம் செய்து வருவதுண்டு. ஒரு நாள் பிரசங்கத்தின் முடிவில்“சர்வம் பிரம்மமயம், சகலரும் பிரம்மவஸ்துவே” என்று சொன்னுர். இதை ஒருவன் கேட்டுக் கொண்டு ‘நானும் பிரம்மம், மரமும் பிரம்மம், எல்லாம் பிரம்மம்’ என்று சென்ருன். இன்னெருநாள் அவர் பிரசங்கத்தில், “இப்பிரபஞ்சம் மித்தை; சகலமும் மித்தை” என்று கூறி முடித்தார். இதை இன்னெருவன் கேட்டுச் சென்ருன். ஒரு நாள் அவ்வூரில் ஒரு யானேயானது மதம் பொழிந்து மேலிருக்

கும் யானைப்பாகனது சாமர்த்தியத்திற் கடங்காமல், கண்டவற்றை யெல்லாம் தூள்செய்து கொண்டு வந்தது. அப்பொழுது எல்லாம் பிரம்மம் என்று கேட்டுப் போன மனிதன் யானையை லக்ஷ்யம் பண்ணுமல் எதிர்ப்பட்டான். யானைப்பாகனுனவன் வெகுஉரத்த சத்தத்துடன் "ஆரடா அது? விலகிப்போ. யானையானது மதம்பிடித்து வருகிறது, கொன்றுவிடும்; விலகிப்போ" என்று சொன்னுன். அதற்கவன் "யானையும் பிரம்மம், யானும் பிரம்மம், பிரமத்தை பிரம்மம்என்ன செய்யும்" என்றுசொல்லி லக்ஷ்யம் செய்யாமலிருக்க, யானைப்பாகன் மறுபடியும் அவனைப்பார்த்து "உன் பிரம்மவேதாந்தம் மத யானையிடத்தில் செல்லாது. மரியாதையாய் விலகிப்போ" என்று சொல்லியும் கேளாமலிருக்க, யானையானது அவனைத் துதிக்கையால் வாரித் தூரத்தில் எறிந்துவிட்டது. அவன் உடம்பெல்லாம் புண்ணுகக் காயம்பட்டுப் பிராணன் தப்பினது தம்பிரான் புண்ணியம் ஆக, தனக்குபதேசித்த குருவைத் தேடிச் சென்ருன். சகலமும் மித்தையென்று கேட்டுச் சென்றவனும் யானையின் எதிரில் வர யானைப்பாகன் முறையே எச்சரிக்கை செய்ய "யானையும் மித்தை; நீயும் மித்தை" என்று கூறி லக்ஷ்யம் செய்திலன். யானையானது இவனையும் வாரியெறிந்துவிட்டுச் சென்றது. இவனும் அந்தக்குருவைத்தேடிச் சென்ருன். இருவரும்அம்மகானைக் கண்டு, தங்கள் விருத்தாந்தங்களைச்சொல்லி, இனிமேல் ஒருவருக்கும் அப்பேர்ப்பட்ட கேடு விளைவிக்கும் பிரசங்கங்கள் செய்யக்கூடாதென்று சொல்லி, அம்மகானை வாய்கொண்டமட்டும் திட்டினுர்கள். அதற்கு அம்மகான் அவர்களின் அறிவீனத்திற் கிரக்கமுற்று "நான் சொன்னதில் யாதொரு தப்பும் இல்லை. நீ அறிந்தபடியே யானைப்பாகப் பிரம்மமானது நீயாகிய பிரம்மத்தை விலகிப்போம்படி சொல்லியும்

நீயாகிய பிரம்மம் கேளாதபடியால் யானைப் பிரம்மமானது தூக்கியெறிந்துவிட்டது. பிரம்மம் பிரம்மத்துக்குச் சொன்னால் கேட்க வேண்டாமோ? நீயும் மித்தை, யானையும் மித்தை, யானைப் பாகனும் மித்தை, அவன் உன்னை விலகச் சொன்னதும் மித்தை, யானை உன்னை வாரி யெறிந்ததும் மித்தை, நீ என்னிடம் வந்து சொன்னதும் மித்தை, சகலமும் மித்தை" என்று இருவருக்கும் முறையே சொல்லியனுப்பிவிட்டார். அதுபோல் கேடு சம்பவிக்கா வண்ணம் ஐயமின்றிக் கேட்டுத் தெரிந்துகொள்.

இப்படிச் சொல்லிக்கொண்டே யிருக்கையில் அம்மகானது மனம் அந்தர்முகப்பட்டுவிட்டது. சித்திரப் பாவைபோ லிருந்துவிட்டார். சிஷ்யனும் வெகு ஆச்சரியப்பட்டுத் தனக்குள் தானே அவரது அமிர்தவசனங்களைக் குறித்து மகிழ்ந்து, அங்கு மிங்கு மசையாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். அவரது முகத்தில் ரௌத்திராகாரம் விளங்கி அக்கினி ஜ்வாலைபோல் தேஜஸ் ஜ்வலித்தது. வெகுநேரம் வரையில் சமாதியிலிருந்தார். மத்தியானம் மூன்றுயணியாகி விட்டது. கண்ணைவிழித்தார். ஒருவன் அவரைப் பரிசோதிக்க வேண்டிச் சரிசமானமாய்ச் சோறும் உப்பும் கலந்து பிசைந்து கொண்டுவந்து எதிரே வைத்தான். நெடுநேரம் நிஷ்டையி லிருந்தபடியால் மிகவும் பசியுடனிருந்தார். ஆகையால், அவ்வளவையும் சாப்பிட்டுவிட்டு, கடைசியில் கொஞ்சம் எடுத்து நூதன சிஷ்யனைக்கூப்பிட்டு, அவனது வாயில் இட்டுச் சாப்பிடும்படி சொன்னார். அவனுக்கு உப்பு அளவுமிஞ்சி யிருந்ததால் அருவருப்பா யிருந்தாலும் குருவுக்குப் பயந்து சாப்பிட்டான். குருவானவர் சாப்பிட்டவுடன் கையைத் தலையில் துடைத்துக்கொண்டு மறுபடியும் கண்ணைமூடிச் சமாதியி

விருந்துவிட்டார். சிஷ்யன் புறப்பட்டுத் தன்வீடுவந்து சேர்ந்து, குருவின் வசனங்களை மாறிமாறிச் சிந்தித்து மனங்கலங்கித் தெளிவடையாமல் மறுநாட்காலமே அவரைக்கண்டு தரிசித்தான். அவ்விடத்தில் யாருமில்லை.

குரு:—புத்திரா! பிரபஞ்சமானது பிரம்மத்தினின்றும் எங்ஙனம் உண்டானது என்பதைக் கேட்பாய். அநேக வித நியாயங்களில் மூன்றே பிரபலமாய் எடுக்கப் பட்டிருக்கின்றன. அம்மூன்றில் இரண்டு அடிபட்டு ஒன்றே பிரகாசித்துள்ளது. இவைமுறையே ஆரம்பவாதம், பரிணாமவாதம், விவர்த்தவாதம் எனப்படும்.

ஆரம்பவாதமாவது, நூலினின்று வஸ்திரம் எங்ஙனம் உண்டாகின்றதோ, அங்ஙனமே பிரம்மத்தினின்று பிரபஞ்சம் உண்டாயிற்று என்பதாம். இது கூடாது. ஏனெனில் ஒரு நூலால் வஸ்திரம் உண்டாவது அசம்பாவிதம். பல நூற்கள் சேர்ந்தேவஸ்திரம்உண்டாகின்றது. ஆகையால்,பலபிரம்மங்கள் கூடியே இப்பிரபஞ்சம் உண்டாதல் கூடும். ஆனால் பிரம்மவஸ்து ஏகம் என்றும், சுஜாதிய, விஜாதிய, ஸ்வகத பேத ரஹிதம் என்றும் சுருதிகள் கோஷிக்கின்றன. தவிர பலநூற்கள் சேர்க்கைக்கு ஒரு நெசவுகாரனது முயற்சி அவசியமாகும். அதுபோல் பிரபஞ்சத்தையும் பிரம்மத்தையும் தவிர வேறொருவரது முயற்சி அவசியமாகிறது. எப்பொழுது இரண்டு மூன்று வஸ்துக்களின் அவசியம் உண்டாயிற்றோ, அப்பொழுதே அகண்டமானவஸ்து இருத்தல் கூடாது. தவிர, நூலினது லக்ஷணமும் வஸ்திரத்தினது லக்ஷணமும் ஒன்றாவதுபோல (அதாவது நூல் சிவப்பாயிருந்தால் வஸ்திரம் சிவப்பாயிருத்தல்போல) பிரம்மத்தினது லக்ஷணமும் பிரபஞ்சத்தின் லக்ஷணமும் ஒன்றாகவேண்டும்.

ஆனல் பிரம்மவஸ்துவானது சத்து,சித்து,ஆனந்தம்,-இவை களை லக்ஷணங்களாய் உடைத்தாயிருக்கிறது. பிரபஞ்ச மானது அதற்கு நேரெதிரிடையான அநிர்த, ஜட, துக்கம் இவைகளை லக்ஷணங்களாய் உடைத்தா யிருக்கிறது. ஆகை யால் நூலிலிருந்து வஸ்திரம் உண்டாவதுபோல் பிரம்மத் திலிருந்து பிரபஞ்சம்உண்டாயிற்று என்று சொல்லும் இவ் வாரம்பவாதமானது அடிபட்டு விடுகின்றது. இனிமேல் பரி ணமவாதத்தைப்பற்றிக் கூறுவாம். பாலினின்று தயிர் எங் ஙனம் பரிணமிக்கிறதோ, அங்ஙனமே பிரம்மத்தினின்றும் பிரபஞ்சம் பரிணமித்துளது என்பது. இது கூடாது. ஏனெ னில் சாதாரணம் பாலானது தயிராகாமல் முன்னிருந்த மோ ரின்சம்பந்தத்தால்தயிராவதுபோல்இப்பிரம்மமும் பிரபஞ்ச மாகாமல் முன்னிருந்த பிரபஞ் சாம்சத்தால் பிரபஞ்சமா யிருக்கவேண்டும். ஆதலால் பிரம்மத்தினின்று பிரபஞ்சம் பரிணமித்தற்குமுன்னமே பிரபஞ்சாம்சம் தேவை. தவிர பால் தயிராகி, பின் அதினின்றும் மோர், வெண்ணெய், நெய் எடுப்பதுபோல பிரம்மம் பிரபஞ்சமாகிப் பின் அதினின்றும் வேறுவஸ்துக்கள் உண்டாதல் வேண்டும். ஆனல், பிரபஞ் சம் வேறொன்ருகக் கண்டிலம். இன்னும், தயிர் பாலாக மாறவோ, தயிரினின்றும் பால்திரும்ப எடுக்கவோ முடியா ததுபோல பிரபஞ்சத்தினின்றும் பிரம்மம் உண்டாகவே முடியாது. ஆனல், பிரம்மானுபூதியே சகல சுருதி,ஸ்மிருதி ஆகம,இதிகாச, புராணுதிகளின் ஜயபேரிகையாகும். இது மகான்களது துணிவும் ஆகும். ஆகையால் பாலினின்று தயி ருண்டாவதுபோல, பிரம்மத்தினின்று பிரபஞ்சம் உண்டா தல் அசம்பாவிதம். இனிமேல் வெற்றிக்கொடி படைத்த விவர்த்தவாதத்தைப் பற்றிப் பேசுவோம். ஒருமனிதன் இருட்டும் வெளிச்சமும் சந்திக்கும் மந்தாந்தகாரத்தில்

வழியே போய்க்கொண்டிருக்கிறான். வழியில் ஒருகயிற்றைக் கண்டு அரவமாகப் பிரமித்து மூன்றரைக்கோடி ரோமங்களும் சிலிர்த்து, வெயர்த்து, மூர்ச்சை போய்விடுகிறான். கொஞ்ச நேரத்திற்குப் பின்னர், சிலர் இவன் இட்ட பயக் கூச்சலைக் கேட்டு, விளக்கெடுத்துக்கொண்டு ஓடிவந்து கயிற்றை, வெளிச்சத்தில் காண்பித்து, "நீ வீண் பிரமையாலழுது கூச்சலிட்டாய், நீ பார்த்தது அரவமல்ல கயிறு" என்று சொல்ல, இவன் பார்த்து மனந்தேறி, சந்தோஷமாகி, தனது மூடத்திற்குத் தானே இரங்கிக் கொள்கிறான். ரஜ்ஜுவைக் காணுமுன் சர்ப்பப் பிரமை யில்லை. ரஜ்ஜுவைக் கண்ட விடத்தில்தான் வியாவகாரிகத்தில் சர்ப்பப் பிரமை உண்டாயிற்று. ஆனால், பாரமார்த்திகத்தி லில்லை; கண்டு தெளிந்த பின்னர் வியாவ காரிகத்திலு மில்லை. அதுபோலவே பிரபஞ்சத்தின் தோற்றமும் என்பதே விவர்த்த பக்ஷமாம். நல்ல சூரிய வெளிச்சத்தில் கயிறு கயிறென்று நன்றாய்ப் புலப்படும். ஆகையால், பயத்திற்குக் காரணமில்லை. நல்ல இருட்டில் கயிற்றி னிருப்பே தெரியாதாகையால் சர்ப்ப பிரதீதி யுண்டாகவே யுண்டாகாது. இங்ஙனம் ஒளியும் அந்தகாரமும் கிலேசத்திற் கேதுவாகாமல் மந்தாந்தகாரமே மயக்கத்திற்குக் காரணமாகின்றது. அதுபோலவே பூர்ண ஞானிகளும் முழு அஞ்ஞானிகளும் கிலேசப் படுவதில்லை. இரண்டிற்கும் மத்தியிலுள்ளார்க்கே இப்பிரபஞ்சம் சர்ப்பமாக இருக்கிறது. இப்பிரமையே மாயையெனப்படும். "யாமா ஸாமாயா." எது இல்லாததோ அது மாயை என்றனர். அதன் லக்ஷணம் என்னவென்று விசாரிப்பாம். சத்தோ என்றால், அது திரிகாலத்திலும் உள்ளதா யிருக்கவேண்டும். அது இல்லாததே யாகையால் சத்துமல்ல. அசத்தோ என்றால், இல்லாததா

யிருக்கவேண்டும். இல்லாவிடில், பயத்திற்கேது என்னை? ஆகையால், அசத்துமல்ல. சதசத்தோ என்றால், அசம்பாவிதம். வெளிச்சமும் அந்தகாரமும் சேர்ந்திருப்பதெங்ஙனம்? ஆகையால், சதசத்துமல்ல. பின், அதன் லக்ஷணமென்னவென்றால் வாக்கினால் சொல்லும் தரமன்று. இப்பேர்ப்பட்ட இந்திரஜால மகேந்திரஜால முடையது மாயை. இதையே மூலப்பிரகிருதி யென்றும் அவித்தை யென்றும் பலவிதமாய்க் கூறுவர் சான்றோர். இம்மாயையானது சுத்தப் பிரம்மவஸ்துவில் நெருப்பில் சூடுபோலிருக்கும். இச்சக்தியின் சலனமே மாயை யெனப்படும். இதுவே மனமெனவும் படும். நிச்சலனமே பிரம்மானந்த மாகும். வெளிச்சம்கொண்டுவந்து பிரமையைத்தெளிவித்தவர்களே ஆசாரியராகிய குருக்கள்; ஞானதீபத்தால் அஞ்ஞானந்தகாரத்தை நீக்குவார்கள். அவர்களுடைய உதவியன்றித் தெளிதலரிது. அவர்களே மாயையாகிய சர்ப்பத்திற்கு இடியேறு போன்றவர்கள். அனுபவ முகமாகப் பிரபஞ்சப் பிரமையைக் காட்ட வல்லவர்கள். அஞ்ஞான மென்பதும் மாயையே; மாயையிலேயேதான் வித்வானும் மூடனும் காண்பது. மாயையிலேயேதான் ஈஸ்வரனும் ஜீவனும் உளர். மாயையிலேயேதான் ஜனனமும் மரணமும்.

என்றிவ்வாறு சொல்லிக்கொண்டே குருவானவர் அந்தர்முகப்பட்டுவிட்டார்.

குருவானவர் வெகுநேரம் வரையில் உலக உணர்ச்சி பெறாமையால், சிஷ்யன் பின் திரும்பிவரலாமென்று வீடு நோக்கிச் சென்றான். அங்கு பெற்றோர்களின் உபத்திரவத்தால் திரும்பிப் போகமுடியவில்லை. மறுநாள் விடிந்தவுடன் குருவைக்கண்டு தரிசித்தான். குருவின் தேகத்தில் சிவப்பு நிறமுள்ள சில தடிப்புகள் காணப்பட்டன. அவை

களைக் கண்டவுடன் சிஷ்யன் மனங்கலங்கி உயிர் சோர்ந்து 'என்னப்பனே! ஞானப்பிரகாசமே! நினது திரேகத்தில் இப்பேர்ப்பட்ட தடிப்புகள்விழக் காரணமென்ன? இவைகளினால் எவ்வளவு வருத்தம் நேரிட்டதோ! வியாதிகள் சகலவற்றிற்கும் வித்தா யிருக்கப்பட்ட ஜனன மரண வியாதியே நின்னால் நீருக்கப்படுமானால், இவ்வியாதிக் கேதுவென்னை?' என்று பிரலாபித்து, அவரது உபய பாதங்களையும் கட்டித்தழுவி அவரது தேகம் முழுவதையும் மெல்லென வருடலுற்றான்.

குரு:—(புன்சிரிப்புடன்) ஞானபுத்திரனே! கேட்பாய். இந்தத் திரேகமானது சோற்றாலடித்த சுவர் என்று சொல்லக் கேட்டிலையோ? சரீரத்தின் சௌக்கியா சௌக்கியங்கள் ஆகாரத்தைப் பொறுத்திருக்கின்றன. ஆகார விஷயத்தில் பின்னங்கள் நேரிட்டால் அவை சரீரத்தில் பிரதிபலிக்கும். சரிசமானமான உப்பும் சோறும் உட்கொண்டதின் பலனாகு மிது. சரீரமானது அடிக்கடி தோன்றி அழிவதாகும். பிரதி நிமிஷமும் மாறுதலடைந்து கொண்டே யிருக்கும். கிரமமாக ஆகாரத்தைக் கொடுத்துவந்தால் வளரும், பருக்கும். ஒரு நாள் குறைந்துவிட்டால் வாடும். ஒரு நாள் அதிகமாய்விட்டால், வியாதியால் வருந்தும். வழக்கம் பேதப்பட்டால் வியாதி உற்பத்தியாம். இப்பேர்ப்பட்ட சரீரத்தை நான் என்றபிமானித்ததாலன்றோ உலகத்தவர் வருந்துகின்றனர்? 'என்னுடையது' என்று அபிமானித்தலும் மடமையாம். 'என்னுடையது' என்றதாலேயே துக்கம் உண்டாகின்றது. 'என்னுடைய பெற்றோரை நிந்திக்க நான் பொறுப்பேனா? என்னுடைய சகோதரருக்கு இப்பொல்லாங்கு விளைந்ததே! என்னுடைய சிநேகிதர் தரித்திரத்தால் வருந்துகின்றனரே!

என்னுடைய வீடு தீப்பட்டு விட்டதே! என்னுடைய மனைவியுடன் இன்னொருவன் பேச நான் சம்மதிப்பேனா?' என்ற இந்த 'என்னுடைய'தினா லல்லவோ கோபம், குரோதம், பொறாமை, கொலை முதலிய துர்க்குண துர்ச்செய்கைகள் உண்டாகின்றன? அருமையான வீரப் புதல் வனே! எப்பொழுது நீ உன்னிடத்தினின்றும் 'என்னுடைய'தை அகற்றுகிறாயோ, அப்பொழுதே சுகமடைவாய். எக்காலம்வரை 'என்னுடைய' என்பது உன்னிடம் குடிகொண்டிருக்குமோ அக்காலம் வரை நீங்காத்துன்பம் அனுபவிப்பாய். உடைமைகளினாலேயே பயமும் துன்பமும் துக்கமும் உண்டாகின்றன. ஓர் காட்டு வழியில் நீ ஆபரணங்கள், பட்டு, பட்டாவளிகள், ஸ்திரீகள், சொத்து— இவைகளைக் கொண்டுபோனால் திருடரால் பயப்படவேண்டி வரும். திருடர் வந்துவிட்டால் உயிர்க்கும் சேதம் வரும். உடைமையினாலன்றோ பயமும், துன்பமும், துக்கமும் உனக்கேற்பட்டன? யாதோர் உடைமையும் இல்லாமல் கோவணமும் தரித்து வெறுங்கையனாய்க் கையைத் தட்டிவிட்டுப் புறப்பட்டால் நீ எங்கு சென்றாலென்ன? பயம் எது? துன்பம் எது? துக்கம் எது? திருடர் உன்னிடம் ஏன் வருகிறார்கள்? அடிக்கடி அழிந்து மாறிவரும் வஸ்துக்களின் சுகம் அற்பமன்றோ? இப்பிரபஞ்சமே அநித்திய மாகையால் பிரபஞ்ச வஸ்துக்கள் எங்ஙனம் நித்தியமாம்? ஆகையால், அழிவுறும் வஸ்துக்களில் பிரியம் வைத்து உடைமை பாராட்டினால் அவை அழியுங்காலத்து, துக்கத்திற்குக் காரணமன்றோ? ஆகையால், உடைமை, துக்கபீஜமாம். நீ துக்கத்தை ஜயிக்க விரும்பினால், 'என்னுடைய' என்பதை உடனே அகற்று. நெடுங்காலம் தண்டனை விதிக்கப்பட்ட ஒருவன் சிறைச்சாலையில் தா

னிருக்கு மிடத்தில் சில பூச்செடிகளை வைத்து அதன்மேல் அதிகப் பிரியம் வைத்து வருகையில், அங்கிருந்து வேறி டத்திற்கு மாற்றப்பட்டால் பூச்செடிகளாகிய உடைமை களைப்பற்றி வருந்துவது நியாயமோ? அறிவுடைமையோ! பார்த்த இடம் எங்கும் கட்டுப்பாடுகளுக் குட்படுத்தப் பட்ட அவன் அச் சிறைச்சாலைக்குள் பூச்செடிகளில் உடை மைபாராட்டுவது எவ்வளவு அறிவுடைமையோ, அவ்வளவு அறிவுடைமையே தோற்றல் மாத்திரமாகிய இப்பிரபஞ்ச வஸ்துக்களில் உடைமைபாராட்டுதல். 'என்னுடைய' என்று சொல்லப்பட்ட உடைமைக ளொன்றும் இறுதிகாலத்தில் கூடவரக் கண்டிலேம். நீயே உனக்கு உடைமையே ஒழிய வேறொன்றும் இல்லை. எப்பொழுது 'என்னு டைய' என்று சங்கற்பிக்கிறாயோ, அப்பொழுது உலகமா னது, கடுகளவு சிறுவித்தினின்றும் கொப்புக் கிளைகளோடு அடர்ந்து படர்ந்த மரம் எங்ஙனம் உண்டாகின்றதோ அங்ஙனமே அனந்தங்கோடி பேதங்களுடன் உன் சங்கற் பத்தி னின்றும் உண்டாகின்றது. உடனே காமம், குரோ தம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், டம்பம், அசூயை, பொறாமை, ஈரிஷை முதலாய பேய் பிசாசுகள் உண்டாகி உன்னிடம் விளையாடுகின்றன. உன்னைக் கைவ சப் படுத்துகின்றன. உன்னைச் சூத்திரத்தில் பொம்மை போல் ஆட்டுகின்றன. ஆகையால் நீ 'என்னுடைய' தை வேரறுப்பாய். இச்சரீரத்திலுண்டான தடிப்புகளினால் எனக்குச் சிறிதும் வருத்தம் இல்லை. 'என்னுடைய' என்று நீ சற்றும் எண்ணாத ஓர்மனிதன் இறந்துவிட்டால் உனக்கு என்ன வருத்தம்? அதுபோன்று இச்சரீரத்தை என்னு டைய தல்லவென்று குரு, சுருதி, யுக்தி, அநுபவங்களினால் தள்ளிவிட்டேன். ஆகையால், சிறிதும் துக்கம் உண்டாக

வில்லை. சரிசமானமாய் உப்பும் சோறும் கலந்து சாப்பிட்ட ஆகாரத்தின் சக்தி எவ்வளவோ அவ்வளவு நாள் இத்தடிப்புகள் இருக்கும். பின்பு தானேமாறும். ஆகையால், மகனே! எனக்கு துக்க மிருந்தாலன்றோ நீ துக்கிக்கக் காரணம்? எனக் கச்ச மிருந்தாலல்லவோ மாயையாகிய கண்ணாடியில் பிரதி பலிக்கப்பட்ட உனக்கு மச்ச மிருக்கலாம்? மாயையாகிய கண்ணாடியை உடைத்துவிட்டால், நீயும் நானும் ஒன்றே. மகனே! நீ பயப்படாதே? துக்கப்படாதே.

சிஷ்யன்:—ஞானசிம்ஹமே! உனது கர்ச்சனையினால் 'என்னுடைய' என்னும் மதயானையானது இறந்துவிட்டது. நான் 'என்னுடைய' என்று பாராட்டாவிட்டாலும், உலகம் என்னைப் பாராட்டுகின்றதே! 'என்னுடைய புத்திரன்' 'என்னுடைய புருஷன்' 'என்னுடைய சகோதரன்' என்று என்னிடத்தில் எவ்வளவோ அருமைபாராட்டி என்னுடைய சுகதுக்கங்களில் கலந்து கொள்ளுகிறார்களே. அப்படியிருக்க நானும் அதேமாதிரி பாராட்டாமல் போனால் நன்றிகெட்டவனன்றோ?

குரு:—குழந்தாய்! இராத்திரி காலத்தில் பட்சிகள் ஓர் மரத்தில் கூடியிருந்து, பொழுது விடிந்தவுடன் 'கா' 'கூ' என்று சத்த மிட்டு மூலைக்கொன்றாய்ப் பறக்கின்றனபோல் சிலநாட்களுக்கு இங்குகூடி உறவுபாராட்டி யிருந்து, போங் காலத்தில் பிரிந்து போகின்றோம். நமது சுற்றம் சந்தைக் கூட்டம் போல்வதாகும். தவிர ஒருவர்க் கொருவர் பாராட்டும் அன்பானது வாஸ்தவமானதன்று. நீ இங்கிருந்து அமெரிக்காவிற்கு வித்தியா விர்த்தியின் பொருட்டுச் செல்கின்றாய். சின்னாட்களுக்குப் பின்னர் திடீரென்று

மரணமடைகின்றாய். ஆகையால், உன் கடிதப் போக்கு வரவு நின்றுவிடுகிறது. உன்னுடைய மரண சமாச்சாரம் உன் பெற்றோருக்குத் தெரியாது. இரண்டு வருஷங்களுக்குப்பின், அமெரிக்காவிலிருந்து இங்குவந்த உன் ஸ்நேகிதன் ஒருவன் உன் மரணத்தைத் தெரிவிக்கிறான். உடனே உன்பெற்றோரும் மற்றுமுள்ள சுற்றத்தினரும் அடித்தும் புரண்டும் அழுகின்றார்கள். உன்மேல் உள்ள அவர்களது அன்பு வாஸ்தவமானால், நீ எந்த நிமிஷத்தில் இறந்தாயோ அப்பொழுதே அவர்களுக்குத் துக்கம் உண்டாயிருக்க வேணும். கேட்டபின்னரே துக்கம் உண்டாகின்றது. இந்த துக்கமும் நாளடைவில் குறைந்து மறைந்து போகின்றது. அவர்களது அன்பு வாஸ்தவமானால் உன் மரணத்திற்குப் பின் துக்கம் எப்பொழுதும் இருக்கவேணும். ஆகையால் அவர்களது அன்பு நாடகரூபமே. இங்ஙனம் நாடகம் என்றறிந்து கூத்தாடி வேஷம் போட்டு உன்னை நீ யேன் மறக்கிறாய். அவர்கள் உன்னை 'என்னுடைய' என்ற சங்கிலியிட்டுக் கட்டினால், நீயும் பதில் சங்கிலியிட்டுப் பலமாய்க் கட்டிக்கொள்ள வேண்டுமோ? நீ பதில் சங்கிலியிடாமலிருப்பதன்றியும் அவர்களுடைய 'என்னுடைய' என்னும் சங்கிலியையும் அறுத்தெறிவாய். ஒலிக்கு எதிரொலி கேட்பதுபோல அவர்களுடைய சங்கிலியே உன்சங்கிலியாயிற்று. ஆகையால், மகனே! சகலபற்றுக்களையும் நீக்குவாய்.

சிஷ்யன்:—எந்தன் குருநாதா! அப்படியாயின், எனக்கொரு சங்கை உதித்துளது. தங்களது அமிர்த வசனங்களை வேதவாக்கியமாகக்கொண்டேன். ஆயினும், ஸ்ரீ சங்கரர், சைதன்னியர், பட்டினத்தடிகள் முதலிய மகான்கள் தாயாரிடத்தில் உடைமை பாராட்டின விதமென்ன? பட்டினத்தடிகள் சிறு குழந்தைபோல் பாடிப்பாடி யழு

தார். சங்கரர் தகனக்கிரியை நடத்தினர். சைதன்னியர் மாதாவின் அந்தியகாலம் வரை பக்திபாராட்டி வந்தார். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.' என்னும் ஆன்றோர் வாக்கு என்ன பெருமை யுடைத்து?

குரு :—புத்திரா! அம்மகான்களது நூல்களையும் அனுபவத்தையும் நாம் கூர்மையாய்ப் பார்ப்போமானல், அவர்களுக்குப் பற்று இல்லவே யில்லையென்பது நன்றாய்த் தெரிய வரும். குழந்தைப் பருவத்திலுள்ள உலகத்தவருக்குச் சித்த சுத்தியும் பக்தியும் உண்டாகும் பொருட்டு அங்ஙனம் பாவனை பண்ணினர்களே ஒழிய வேறில்லை. 'பெரியோர் எவ்வழி, அவ்வழி உலகம்.' முள்ளினல் முள்ளை எடுத்துப் பின் இரண்டு முள்ளையும் தூர எறிந்துவிடுவதுபோல, கர்ம காரணமாகிய ஜனன மரணத்தை நிவர்த்திக்கக் கர்மத்தை உபதேசம் செய்து, பின் சகல கர்மங்களையும் தியாகம் செய்து ஞான ஸ்வரூபமா யிருக்கவே அவர்களது விருப்பம். உனக்கு நான் இப்பொழுது கொடுக்கும் கூரிய ஆயுதத்தினல் சகல பற்றுக்களையும் ஜயிப்பாய். முதலாவது சிறிது நேரம் உனது சரீரத்தைப் பற்றி சிந்தனை செய்து பார்.

இந்தச் சரீரமானது நரம்பு, எலும்பு, தோல், மஜ்ஜை மாம்சம், இரக்தம் முதலியவைகளால் கட்டப்பட்டுள்ளது. இவைகளைக் கூறு கூறாக நாம் பிரித்து வைத்தோமானல் ஐந்து நிமிஷத்தில் துர்நாற்றம் வீசும். தேகத்தினின்றும் ஓர் பாகத்தை அறுத்துத் தனியே கொஞ்சநேரம் வைத்துப் பார்ப்போம். யாரும் சமீபத்தில் போக வொண்ணுதபடி கெட்ட நாற்றம் உண்டாய் விடும். சகல வியாதிகளுக்கும் இருப்பிடமா யுள்ளது. பால்யம், யௌவனம் ஜரா முதலிய மாறுதல்களடையப் பெறுவது. ஜீவன் பிரிந்து போனவுடன் நாய், நரி, காக்கை, கழுகு, பூதப்பிரேதப்

பைசாச முதலியவைகளுக்கு ஆகாரமாயுள்ளது. எவ்வளவோ பாடுபட்டுப் புண்ணியவான்களுக்கும் மகான்களுக்கும் இயன்ற உதவி புரியாமல், நாம் இந்தச் சரீரத்தை ஈற்றில் இழிந்த ஜன்மங்களாகிய நாய், நரி, முதலியவைகளுக்காக பலிக்குக் கடா வளர்ப்பதுபோல் வளர்க்கிறோம். இந்தச் சரீரமானது நவத்துவாரங்களாலும் சதா மலஜலம் போகப் பெற்றது. மூன்றரைக் கோடி ரோமத் துவாரங்களாலும் மலஜலம் கசியப்பெற்றது. கண்ணில் பீளையாகவும், காதில் குறும்பையாகவும், மூக்கில் மலமாகவும், வாயில் ஊத்தையாகவும், ரோமத்துவாரங்களில் வெயர்வையாகவும் கழிவது என்னை? ஆழ்ந்து பார்க்கில், இச் சரீரமானது ஓர் பெருத்த மல மூட்டையாகவே காணப்படும். நாம் குதத்துவாரத்தினின்று கழியும் மலத்தை வெறுத்தும், அத் துவாரத்தை ஜலத்தினல் சுத்திசெய்தும் பயன் என்னை? மலமே நமக்குச் சரீரமாகஇருக்க,நாம் குதத்துவாரத்தை வெறுப்பதென்னை? ஓர் நாள் இச்சரீரத்தை ஸ்நானம் என்னும் கைங்கரியத்தால் ஜலங்கொண்டு கழுவாவிடில், மறுநாள் அவலக்ஷணமாகக் காரணம் என்ன? நாகரீகம் அதிகரிக்க அதிகரிக்க, தெரிந்தோ தெரியாமலோ, தேகம் முழுவதையும் வஸ்திரத்தாலும் பலவிதச் சட்டைகளாலும் மூடுவது ஏன்? அவலட்சணயானதும், அரோசிகமானதும், யாவரும் வெறுக்கத் தக்கதுமான இச்சரீரத்தை மறைப்பதற்கன்றே? அழுகிச் சீழ்வடியும் ஓர் பழம்புண்ணை ரோஜாப்புஷ்பங்களினல் மறைத்தல் போலும், இச்சரீரத்தைப் பாதுகாத்தல். தேகம் முழுவதும் அழுகிச் சதா ஈமொய்த்துக்கொண் டிருக்கும் ஓர் குஷ்டரோகி அந்நியர் அறியாம லிருக்கும்படி விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்களாலும் சால்வைகளாலும் சரீரத்தைமூடியது போலும், நாம் சட்டையணிவது. ஆ! ஆ! ஆச்சர்யம்! ஆச்

சர்யம்! இப்பேர்ப்பட்ட சரீரத்தை அலங்காரம் செய்கின்றோம். மல மூட்டையைத் தூக்கிக் கொண்டிருக்கும் ஒருவன் கீழே எவ்விடத்திலாவது எறிந்துவிடுவதற்கு எவ்வளவு ஆத்திரப்படுவானோ, அவ்வளவு அறிவுள்ள முமூட்சுவானவன் அத்தியந்தம் சரீர நாசத்தை இச்சிப்பான். மலத்தைக் கண்டால் ஒருவன் பார்க்க விரும்பாமல் எப்படி விலகித் தூரப்போவானோ, அப்படியே அறிவுள்ள முமூட்சுவானவன் எந்தச் சரீரத்தைக் கண்டாலும் வெறுப்பான். சரீரத்தைக் காண விருப்பற்றவனுப் மிகவும் அருவருப்படைவான். ஆகையால், மாதா, பிதா, மனைவி என்று சொல்லப்பட்ட எச் சரீரமாயினும் அவனுக்கு அத்தியந்தம் விஷமாம். நீயும் இப்படியே அடிக்கடி சிந்தனைசெய்து, உனது சரீரத்தில் எப்பொழுது அருவருப் படைந்தாயோ அப்பொழுதுதான் நீ வைராக்கியம் என்னும் வஜ்ராயுதத்தைக் கையில் எடுத்தாய். காலில் மலம் ஒட்டி அதைக் கழுவ வேண்டுமென்று தண்ணீர் தேடிக்கொண் டிருக்கும் ஒருவன் மலமே ஜலமாக உடைய ஓர் குளத்தைக் கண்டானாயின், அதில் இறங்கிக் காலைக் கழுவுவானா? உடம்பெல்லாம் மலமாய் விடும் என்று பயந்து அம்மலக் குளத்தில் இறங்கமாட்டான். அதுபோலவே, இச்சரீரத்தையே மலம் என்று கருதிய ஒருவன் ஸ்திரீயாகிய இன்னொரு சரீரத்தைக் கட்டியணைவானா? நீ அதிதீவிர முமூட்சு வாகையால், சரீர தோஷமானது உனக்குத் தெளிவாய் விளங்கும். முன்னதாகச் சரீரவெறுப்பு உண்டாய் விட்டால் புண் ணாறியபின் மேல் ஒட்டியிருக்கும் பொருக்கானது தானே விழுவதுபோல, பற்றுக்கள் அனைத்தும் தாமே நீங்கும். இவ்வைராக்கியமே துறவுக்குக் காரணமாகும். சட்டைகளை யெல்லாம் கழற்றிவிட்டு உன் சரீரத்தையாவது

நிர்வாணமாக நீ பார்த்து உன்மனதில் உண்டாகும் பிரியத்தையோ அப்பிரியத்தையோ அறிந்துகொள். உண்மையான முமுட்சுவானவன் இச்சரீரத்தில் நிச்சயமாய் தோஷ திருஷ்டி வைப்பான். உடனே ஐம்புலன்களையும் உள்ளுக்கு இழுத்து விடுவான். அவன்முக்தியடைவது நிச்சயம்; சத்தியம்.

சிஷ்யன்:—ஸ்வாமி! நேற்றையதினம் 'மாயை' என்னும் விஷயத்தைப் பற்றி உபதேசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் நிஷ்டை கூடி விட்டீர்கள். பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்களிடத்திலும் 'மாயை' என்னும் வார்த்தையானது கொஞ்சமும் பஞ்சமின்றி வழங்குவதால் அதைப்பற்றி அறிய விரும்புகிறேன். நானும் 'மாயை' என்னும் வார்த்தையை அர்த்தம் தெரியாமல் அடிக்கடி உபயோகிக்கிறேன். நாயேனிடத்தில் கிருபை கூர்ந்து தெளிவிக்கப் பிரார்த்திக்கிறேன்.

குரு:—புதல்வனே! கேள். மாயையின் லட்சணம் இன்னதென்று குறிக்கப்படாத தென்றும், ஆகையால் அநிர்வசனீயம் என்றும் சொன்னதுஉனக்கு ஞாபகம் இருக்கிறதா? சுருக்கமாய்ச் சிலவிஷயங்களைத் திருஷ்டாந்தமாக உரைத்து மாயையை இன்னதென்று கூறுவாம். நான்கு பக்கத்திலும் ஆகாயமானது பூமியுடன் கூடி ஒன்று சேர்ந்திருப்பது போல நமக்குத் தோன்றுகிறது. ஆனல், நாம் ஆகாயமும் பூமியும் ஒன்று சேர்ந்திருக்கும் இடத்தைப் பார்க்க விரும்பிச் சென்றால் செல்லச் செல்ல விலகிப்போகின்றது. ஆகாயமும் பூமியும் ஒன்று சேர்ந்திருக்கும் இடத்தைக் காணவேணுமென்ற விருப்பமும், ஆனல் காண முடியாத அனுபவமுமே மாயை என்னப்படும்.

பெற்றோ ராகிய சுற்றத்தினர் ஓர்காலத்தில் நம்மை விட்டுப் பிரிபவர் என்ற நிச்சயம் நமக்கு மனப் பூர்வமா யிருந்தும் நம்மைவிட்டுப் பிரியாதவர் என்ற எண்ணமே நமக்கு உண்டாகின்றது. இதுவும் மாயையே. ஸ்திரீ சுக மானது அசுசிகாமானதும் அரோசிகமானதும் என்று நமக்கு நன்றாய்த் தெரியும். சரீரமானது நரம்பு, எலும்பு தோல், சதை, மாம்சம், மஜ்ஜை முதலியவைகளால் கட் டப்பட்ட கூடு என்று நன்றாய்த் தெரியும். பேய்கள் கூடி ஆட்ட பாட்டத்துடன் சஞ்சரிக்கும் இராக் காலங்களில் ஆணும் பெண்ணும் புணர்ந்து அனுபவிக்கும் சுகம் பேய்ச் சுகம் என்றும் தெரியும். யாருடைய பார்வையிலும் உட் படாமல் தனியே ஸ்திரீ புருஷர்கள் நிர்வாணமாய் மறைவு ஸ்தலங்களில் அனுபவிக்கும் சுகமானது குற்றத்திற்குக் காரணமானதும், வெட்கத்திற் கிடமானதும் அன்றோ? இல்லாவிடில் ஏன் மறைந்து ஒளிந்து புணரவேண்டும். குற் றச் செய்கைகளும் அவமானகாமான செய்கைகளுமே ஒளிவுமறைவில்செய்யப்படுவன. ஸ்திரீயினது எந்த அங்கத் தினிடம் புருஷன் சுகத்தை இச்சிக்கிறானோ அந்த அங்கத் தைக் கூர்ந்து இருகண்களாலும் பார்ப்பானாக. பிறகு சுகத் தை அடையட்டும்; (குழந்தாய்! விஸ்வாசமும் நம்பிக்கை யும் இன்றி வீண் கர்வம் குடிகொண்டு, குயுக்திகள் பேசிக் குதர்க்கம் செய்யும் பாமரர்களுக்கு நாம் சொல்லவில்லை. அறிவுடையவர்களுக்கே நமது உபதேசம். குதர்க்கவாதி களுக்கு நாம் சொன்னால் மழை வெய்யில் முதலிய தொந் தரவுகளுக்கு ஆதரவாய்க் கூடுகட்டி வாசஞ் செய்துகொண் டிருந்த தூக்கணங்குருவியானது குரங்குகளுக்குப் புத்தி சொன்னதுபோலாம். இன்னமும் குதர்க்கவாதிகளை நாம் ஜயிக்கவல்லோ மல்லேம் என்று ஒப்புக்கொள்வோம்.

ஓர் ஊரில் சகல சாஸ்திர ஸம்பன்னராகியும், பிரம்மக்ஞானியாயும் உள்ள ஓர் பிராமணருக்கு 'தேகமே ஆத்மா, போகமே மோட்சம்' என்ற நிச்சயத்தை உடையவனாய், பரஸ்திரீகளே கதியென்று நம்பி, பரத்தையர் வசமான ஓர் புத்திரன் இருந்தான். பிதாவானவர் புத்திரனது துர்ச்செயல்களைப் பற்றி வருத்தமுற்று அடிக்கடி புத்திரனுக்குவேண்டிய ஹிதோபதேசங்களைச் செய்துபார்த்தார். ஆயினும், புத்திரனது மனமானது ஸ்திரீகளை விட்டிலது. ஆகையால், புத்திரனுக்கு ஸ்திரீ சரீரத்தின் அவலட்சணத்தைப் பிரத்தியட்சமாய் நிரூபிக்கவெண்ணி, அவனதுபிரியமுள்ள ஓர் தாசி இறந்த சமயம் பார்த்து, அவளது தாயினிடத்தில் சென்று பிரேதத்தை 100 பொன் கொடுத்து வாங்கி, தம் வீட்டுக் கொல்லைப்புறத்திலுள்ள ஓர் அறையில்வைத்துப் பூட்டிவிட்டார். தாசியினது தாயாரிடத்திலும் புத்திரன்வந்து கேட்பானாயின் அவள் அடுத்த ஊருக்குப்போயிருப்பதாகச்சொல்லிவிடும்படி ஏற்பாடு செய்துவிட்டார். அவரது புத்திரனானவன் அத்தாசியின் வீட்டுக்குச் சென்று அவளைக் காணாதவனாய்த்தாய்க்கிழவியைக்கேட்க, "அடுத்தஊருக்குப்போயிருக்கிறாள்" என்று சொல்லக்கேட்டு, எப்பொழுது திரும்பி வருவாளோ என்று வழியையே பார்த்து ஏக்கமுற்றிருந்தான். இங்ஙனம் இரண்டு மூன்று தினங்கள் செல்ல, அவனது தேகம் மெலிவடைந்து ஆகார நித்திரைகளில் விருப்பற்றவனாய்ப் பித்துப்பிடித்தவன் போலிருந்தான். பிதாவானவர் புத்திரனை அழைத்து அவனது உண்மையான மனவருத்தத்தை அவன் வாயாலேயே கேள்வியுற்று, "அப்பனே! விசனப்படாதே. அந்தத் தாசி இல்லாவிடில் என்ன? தேவகன்னிகைகளைப்போன்ற ஸ்திரீகளை நான் சேர்த்து வைக்கிறேன்" என்று தேறுதல் சொல்லவும், பிதாவின் நாவி

விருந்து ஓர் நாளும் எதிர்பாராத வார்த்தைகளைக் கேட்ட வுடனே சிறிது சந்தோஷமடைந்தான். பின், பிதாவானவர் புத்திரனை அழைத்துக்கொண்டு கொல்லைப்புறத்தில் பிரேதம் மூடிவைத்திருக்கும் அறையினிடம்சென்று கதவைத் திறந் தார். பிரேதத்தினது அழுகிய துர்நாற்றமானது இவர் களது சரீரத்துட் புகவும், புத்திரன், "பிதாவே! இங்கு ஏன் கூட்டிவந்தீர்கள்? இக்கெட்ட நாற்றத்திற்குக் காரண மென்ன?" என்று கேட்டான். மகனை அருகே உட்கார வைத்து வெகு பிரியத்துடன் அச்சரீரமானது அவனது பிரிய தாசியினுடையதென்றும், சரீரத்திலுள்ள ஒவ்வொரு அவயவங்களையும் தனித்தனியே பகுத்துக்காட்டி, அவை களின் துர்க்கந்தத்தை முகரவும், ஸ்திரீ சரீரத்தில் சுகத்தை யிச்சிப்பது மடமையென்றும் சொல்லி, கடைசி யில் அப்பிரேத சரீரத்தில் சிற்றின்ப காரணமாகிய மறைவு அங்கத்தைச் சுட்டிக்காட்டி, "இதோ! பார். நீ எந்த அங்கத் தினிடத்தில் உனது மனதை ஒரே முகமாய்ச் செலுத்தி சுகத்தை விரும்பினதாயும் அடைந்ததாயும் மயங்கினையோ அந்த அங்கத்தினிடத்தில் ஈ, எறும்பு முதலியவை கூடி அரிக்கின்றன பார்த்தாயா?" என்று வினவ, புத்திரனானவன் பிதாவை நோக்கி, "தலையெல்லாம் நரைத்து எழுபது வயதாகியும் உமக்குச் சிறிதும் புத்தியில்லை. ஈ, எறும்பு முதலியவை எவ்விடத்தில் மொய்க்கும்? மிட்டாய் முதலிய இனிப்பான பண்டங்கள் இருக்கும் இடத்திலன்றோ? ஜீவன் பிரிந்துபோய் இரண்டு மூன்று நாட்களாகி அழுகிப்போயும் இவ்வளவு தித்திப்பிருந்தால் ஜீவனிருக்கும்போது அதன் ருசியைச் சொல்லத்தரமோ" என்றான். இப்பேர்ப்பட்ட குதர்க்கவாதிகளுக்கு எங்ஙனம் உபதேசித்தல் கூடும்).

இந்த விதமாய் ஸ்திரீ சுகமானது துச்சம் என்றும்

மிருகத்துவம் என்றும் நன்ருய்த் தெரிந்தும், ஸ்திரீகளைக் கண்டால் பரம புருஷார்த்தம் என்றெண்ணி அவர்களது சரீரத்திலுள்ள ஒவ்வொரு அவயவத்தையும் ஒப்புவமையின்றி வர்ணித்துத் தாம்வந்த நரகத்துவாரத்தின் வழியே உலகம் அபிவிர்த்தியாகட்டும் என்று ஸ்திரீகளுக்குத் திக்கு நோக்கித் தெண்டனிட்டு ஊழியம் செய்கிருர்கள். இது தான்மாயை.

பொன் வெள்ளி முதலிய லோகங்கள் மண்ணிலிருந்து வெட்டி யெடுக்கப்படுவன வாகையால் மண்ணினது வேறு ரூபமென்று நன்ருய்த் தெரியும். அதுபோலவே வைரம், வைடூரியம் முதலிய ரத்தினங்களும் பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படுவன வாகையால் சாதாரணக் கற்களின் வேறு ரூபமே என்று நன்ருய்த் தெரியும். ஆனுலும், பொன், வெள்ளி, வைரம், வைடூரியம் முதலியவைகளை உயர்வாக விலை மதித்துக் காதிலும், மூக்கிலும் ஒவ்வொரு அவயவங்களிலும் பொம்மைக்குச் சிங்காரிப்பது போல அணிய விரும்புகிருர்கள். இதுதான் மாயை.

ஆகையால், ஞானபுதல்வனே! ஏககாலத்தில் வெறுப்பிற்கும் விருப்பிற்கும் இடங்கொடுத்து, உருட்டிப் புரட்டி ஒன்றிற்கும் இடங்கொடாமல் விளையாடும்சக்திதான் மாயை. இம்மாயையில்தான் ஞானிகளாயும் அஞ்ஞானிகளாயும் ஆகிருர்கள். இம்மாயையில்தான் பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்கள் முறையே சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாராதித் தொழில்களை நடத்துகிருர்கள். இம்மாயையில்தான் ஜனனமும் மரணமும். இம்மாயையில்தான் உஸ்வாச நிஸ்வாசங்கள். இம்மாயையில்தான் பந்தம், மோட்சம். இம்மாயையில்தான் சுகமும் துக்கமும். இம்மாயையில்தான் ஸ்வராஜ்யமும் பர

ராஜ்யமும். இம்மாயையில்தான் ஜீவனும் ஈஸ்வரனும். இம் மாயையிலேயே வெளிச்சமும் இருட்டும். இம்மாயையிலே யே விதியும் நிஷேதமும். இம்மாயையிலேயே நன்மையும் தீமையும். இம்மாயையிலேயே புண்ணியமும் பாவமும். இம்மாயையிலேயே ஆணும் பெண்ணும். இம்மாயையில் தான் காலனானவன் தன்தொழிலைநடத்துவன். ஆகையால், குழந்தாய்! சுற்றிச்சுற்றிப் புறப்பட்ட இடத்திற்கே திரும்பி வரும்ஓர்மரத்தில் கட்டப்பட்ட எருதுபோல,மாயையானது லீலைசெய்யும். மாயையின் சக்திகளை அளவிடுதல் அரிது. எல்லைபற்றதாய்த் தோன்றும். ஆனால், எல்லையுள்ளது. ஸ்வயம் பிரகாசம்போல் தோன்றும். ஆனால், ஜடமே. எல்லாம் செய்யவல்லதாய்த் தோன்றும். ஆனால், ஒன்றை யும் செய்யும் திறமையுடையதல்ல. சூரியகாந்தக் கண்ணா டியானது எங்ஙனம் தனக்குஸ்வசக்தியில்லாமல் சூரிய சந்நி தானத்தில் எதிர்ப்பட்ட பஞ்சை எரிப்பதுபோல், மாயை யானது யாதொருவித ஸ்வசக்தியும் இல்லாமல் பிரம்ம சந்நிதானத்தில் சகலகாரியங்களையும் நடத்தும். ஏதோ ரூபமுடையதுபோல் தோன்றும். ஆனால்,அருகே சென்றால் நழுவிவிடும். பிரம்மஞானமாகிய வலைக்குளன்றிக் கட்டுப் படாது. ஒரேயிடத்தில் ஒரே நதியில் ஒன்றுக்கொன்று எதிர்த்து ஓடித்ததத்தளிக்கும் ஆறுகள்போல மாயையினது தன்மை. நேர்விரோதமாய் எதிரிடையான சக்திகள் ஒன்றுக்கொன்று ஊடுருவி நிலைகலங்கச் செய்வதே மாயை யின் தன்மை. பண்டிதன் என்றும், பாமரன் என்றும், பிராமணன் என்றும், பறையன் என்றும், பர்வதம் என்றும் துரும்பு என்றும் சொல்வது மாயையில்தான். ஆகையால், குழந்தாய்! இம்மாயையைக் கடந்து விட்டால் நீ சிவமே. சிவம் என்பது உனது ஸ்வபாவநாமம். நீ எத்தொழிலைச்

செய்தாலும் சிவமே. நீ எந்த அவஸ்தையிலிருந்தாலும் சிவமே. ஜீவன் பிரிந்தவுடன் சவமாகாமல் ஜீவன் என்னும் நாமம் பிரிந்து சிவமாவாய். ஆகையால் சிவமே. மாயையானது, சமுத்திரத்தில் அலைகள்போல உன்னிடத்தில் உண்டான சலனமே. நீ மாயையாகிற சர்ப்பத்திற்கு இடியேறு போன்றவன். மாயையாகிற மகாமேருவுக்கு வஜ்ராயுதம் போன்றவன். மாயையாகிய மதயானைக்குச் சிங்கம் போன்றவன் இரவும் பகலும் எந்தநிமிஷமும் "சிவோகம்" என்று சொல். நீ சிவமாவாய். மாயையானது கண்டு பிடிக்கப்பட்ட திருடன்போல சொல்லாமல் ஓடும்.

என்று குருவானவர் சொல்லிக்கொண் டிருக்கையில் சிலஜனங்கள் கூடி விட்டார்கள். இவர்களுடைய ஆத்மானுபவ அந்யோந்ய சரச சல்லாபங்களுக்குப் பங்கம்நேரிட்டது. ஆகையால் சிஷ்யன் விடைபெற்றுச் சென்றான். இம்மூன்று நாட்களுக்குள்ளாக சிஷ்யன் ஜீவசொரூபத்தை நீக்கிச் சிவமாகஎத்தனித்தான். வரவர குருவே சரணம்என்று தன்வீட்டுக்குப்போகாமலும், பந்துக்கள் ஸ்நேகிதர்களை எடுத்துப் பாராமலும், குருவின் உச்சிஷ்டத்தைப் புசித்துஅவரது நிர்ப்பயமான ஆனந்தாமிர்த வசனங்களினால் மகிழ்வுற் றிருந்தான். குருவினிடமே இவனதுஉடல் பொருள் ஆவிமூன்றையும் ஒப்புவித்துவிட்டான். குருவானவர் ஜீவகாருண்ய நிமித்தம் மடங்கள் ஏற்படுத்தி, கால தேசவர்த்தமானங்களுக்குத் தக்கவாறு லௌகிக வைதீக விஷயங்களைச் சீர்திருத்தி வருகிறார். ஆயினும் இவன் அவரது தனிமையான நேரங்களில் அவருடன் ஆத்ம புணர்ச்சி செய்து, ஆனந்தம் அனுபவிப்பதில் தினம் தவறுவதில்லை. ஓர்நாள் இராத்திரி சிஷ்யன் நித்திரை வராமல் தாழ்வாரத்தில் குருவினது தத்துவோபதேசங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு இங்கும் அங்கும்

உலாத்திக்கொண்டிருந்தான். குருவானவர் சமாதியினின்றும் நீங்கி, ஜல ஸ்பரிசத்தின் பொருட்டு வெளியே சென்ருர். இவன் கவனித்திலன். பின், திரும்பி இவன் இருக்கும் தாழ்வாரத்தின் வழியாகவே இவனைப் பார்த்துக்கொண்டே உட்புகுந்தார். கதவுதிறந்த சப்தமும் போய்த்திரும்பிவந்ததும் இவனுக்குத் தெரியாது. தனது மான்தோல் ஆசனத்தி லிருந்துகொண்டு சிஷ்யனைக் கூப்பிட்டார். சிஷ்யன் குருவின் சப்தத்தைக் கேட்டு, பயந்து நடுங்கி உட்புகுந்து கைகட்டி வாய்பொத்தி ஒருபக்கமாய் நின்ருன்.

குரு:—எனது ஞானக்கண்மணியே! உனது ஏகாக்கிர சித்தத்தைப்பற்றி மிகவும் வியக்கின்றேன். நான் வெளியே சென்று திரும்பிவந்ததை நீ பார்க்கவில்லை. உன்மனமானது ஏதோ ஓர் விஷயத்தில் பற்றி யிருந்ததினுல் உனக்குத் தெரியவில்லை. அருகேவந்து உட்கார். நீ இரண்டு கண்களையும் நன்ருய் விழித்துக் கொண்டே இருந்தாய். ஆயினும், என் போக்கு வரவு உனக்குத் தென்படவில்லை. ஏனென்ருல் உனது மனமானது ஏதோ ஒன்றைப் பற்றிக் கொண்டது.

நொடி நேரமேனும் ஓர் நிலையிலிராமல் விநாடிக்கு அனந்தங்கோடிசுற்றுச் சுற்றிவரும் இந்த மனதை ஓர் முகப்படுத்தி ஓர் நிலையில் கட்டுதலே யோகம் எனப்படும். இந்தயோகமானது சித்தியாய் விட்டால், சிருஷ்டி, ஸ்திதி சம்ஹாராதி சர்வசக்திகளும் உன்னிடத்தி னின்று வெளிக்கிளம்பும். ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களையும் பூமியில் உள்ள மணலையும் எண்ணினுலும் எண்ணலாம். ஜலஸ்தம்பம், வாயுஸ்தம்பம் முதலியவை செய்யலாம். எதுவும் பெரிதல்ல. இந்த நகர்நாய் போன்ற மனதைக் கட்டுதல் வெகு அரிது. மனம் குரங்கு போன்றது. குரங்கின்

இயற்கையே சேஷ்டை. அதோடுகூடக் கொஞ்சம் கள்ளும் குடித்தது ; ஓர் தேளும் கொட்டிற்று ; போதாததற்கு ஓர் பேயும் பிடித்தது ; என்றால் குரங்கின் சுவபாம் எப்படியிருக்கும்? அதுபோலவே, மனக் குரங்கு ஏற்கனவே சலன சுபாவ முடையது. பூர்வஜன்ம வாசனையாகிய கள்ளையும் குடித்து, சகவாசமாகிற தேளும் கொட்டி, ஆசையாகிற பேயும் பிடித்ததென்றால், மனதின் சுபாவத்தை நீயே யோசித்துப்பார். இப்படி ஓடுகின்றமனதைக் கட்டிவசப் படுத்துபவனே தீரன் ; அவனேவீரன் ; அவனேஞானி ; அவனே முக்தன் ; அவனே புருஷன். மனதைக் கட்டி வசப்படுத்துவதே யோகம். இதுவேஞானம். இதுவே ஸ்வதந்தாம். பிரபஞ்சத்தை ஜயிக்க விரும்புவோன், ஸ்வ ராஜ்யம் ஸ்தாபிக்க விரும்புவோன், மனதை ஜயித்துத் தன் கீழ் அடக்கட்டும் ; இதுவே ஏகசக்ராதிபத்தியம். இதுவே ஸ்வராஜ்யம். கணக்கற்ற சேனைகளைக் கொண்டுபோய்ப் போர்க்களத்தில் மடியச்செய்து உயிர்வதை செய்யவேண்டாம். பரிசுத்த புண்ணிய நதிகளுக்குப் பதிலாக இரக்தப் பிரவாகம் ஓடும்படி செய்யவேண்டாம். மணிமந்திராவுஷதங்களுக்கு உற்பத்தி ஸ்தானமாய், மகான்களது வாசத்திற்கிருப்பிடமா யிராநின்ற உன்னத பர்வதங்களுக்குப்பதிலாகப் பிணமலைகுவிக்க வேண்டாம். தன்மனதை யடக்கியாள அறியாதவன் உலகத்தை ஜயித்து அடக்கியாள விரும்புவது, தானும் கெட்டு உலகத்தவரையும் கெடுப்பதற்கே. மனதை ஜயித்தால் மாயையை ஜயித்ததே. சூரியனது அதி உக்கிரமான வெய்யிலில் நடக்க விரும்புவோன் போகுமிடந்தோறும் பந்தலிடும்படி ஏற்பாடு செய்யவேண்டுமோ ? பூமியில் தோல்விரிக்க வேண்டுமோ ? கையில் ஒருகுடை போதாதோ ? இதுபோலவே பிரபஞ்ச ஜயத்தை விரும்பு

வோன் மனதை ஜயித்தால் போதும். விதையைவறுத்து விட்டால் முளை யெப்படிக் கிளம்பும்? மரம் எப்படி யுண்டாகும்? குழந்தாய்! மனமே சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாராதித் தொழில்களை நடத்திக் கொண்டு வருகின்றது. மனமே பிரபஞ்சமாம். ஆகையால் ஞானபுத்திரனே! நீ மனதை ஜயிப்பாய். மனமாகிற காட்டு மதயானையைச் சர்வசங்கப் பரித்தியாகமாகிய படுகுழியில் வீழ்த்தி, வைராக்கிய மாகிய பட்டினியிட்டு, ஞானமாகிற அங்குசத்தினல் வசப்படுத்தி யோகமாகிற வைரவிலங்கிட்டு நீ பாகனுயிருந்து உன்கீழ் அடக்குவாய். இப்படியாயின் வெள்ளை நிறமுள்ள ஐராவதத்தின்மேல் வஜ்ராயுதனுகிய தேவேந்திரன் என்று சொல்வது போல், சர்வ வர்ண முள்ளதும், சூட்சுமத்திலும் சூட்சுமமாயிருந்து பிரமாண்டாதிகளைச் சிருஷ்டி செய்வதும், சித்தோ, ஜடமோ, சித்ஜடமோ என்று சான்ருேரது அபிப்பிராய பேதங்களுக்கிடமா யுள்ளதுமான மனம் என்னும் யானையின்மேல் ஞானுயுதனுகி நீ சர்வேந்திரனுயிருப்பாய்.

சிஷ்யன்:—எனது அமிர்த சஞ்சீவியே! எனது மடமையை நிர்த்தூளிபடச் செய்து எங்கும் நீயாக ஆனந்த நிர்த்தனம் செய்யும் நடராஜ மூர்த்தி! மனதின் சொரூபம் என்ன? சித்தா? ஜடா? மனமானது சிருஷ்டியாதித் தொழில்கள்செய்ய வல்லதென்ருல்,சித்தாகுமே? ஆயின், சித்லட்சண முள்ள வஸ்துக்கள் இரண்டுளவோ? ஆயின், எங்ஙனமிருத்தல் கூடும்?

குரு:—மகனே! கேட்பாய். மனமானது ஜடம் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. சித்ஜடம் என்று சிலர் கூறுவர். நாம் அங்ஙனம் கூறேம். சித்தும் ஜடமும்

ஒரே வஸ்துவாயிருப்ப தெங்ஙனம் கூடும்? அந்தகார மும் பிரகாசமும் எங்ஙனம் ஒன்றாயிருக்கக் கூடும்? அசம் பாவிதமே. மனமானது நசிக்கத்தக்கது; ஆத்மசந்நிதானத் திலன்றித் தானே ஒன்றும் செய்ய வியலாதது; சமுத்திரத் தையன்றி அலைக்கிருப்பிடமுண்டோ? அடிக்கடி சலிக்கும் ஸ்வபாவ முடையதாகையால், சித்தென்னல் கூடாது. மன மானதுஜடமே. ஜடவஸ்துக்களே அடிக்கடி தோன்றுவதும் அழிவதுமான நியதிக் குட்பட்டவை. மனமும் அப்ப டியே; ஆனல், அதிசூட்சும மானது; பூர்வஜன்ம வாசனை களடங்கப்பெற்றது; கட்டுக் கடங்காப் பட்டி மாடுபோல் திரியப்பட்டது நீ இந்த மனதை ஜயிக்கப்பெற்றால் மாயையை ஜயித்தாய். உனது ஸ்வரூபம் சிவமாகையா லும், மனதின் ஸ்வரூபம் ஜடமாகையாலும் இப்பொழுதே மனமானது உனக்குக் கிழடங்கினதுதான் வீட்டுக்கு எஜமானனா யிருக்கப்பட்டவன் மனைவியின் ஆக்ஞைக்குட் பட்டு நடப்பதுபோல, நீ மனதின் வசப்பட்டாய்; கண்ணை விழித்துப்பார்; நீயே எஜமானன்; நித்திய ஸ்வதந்தரன்; மயங்கி விட்டாய்; மயக்கத்துக் குட்பட்டாய்; சங்கிலிகளைக் கொண்டு நீயே உன்னைப்பிணைத்து கட்டிக்கொண்டாய்; நீயே செய்து கட்டிக்கொண்ட சங்கிலிகளின் நுட்பமான முடிச்சு களும், நூதனப் பின்னல்களும் உனக்கே தெரியும். ஆகை யால், நீயே அவைகளை அறுத்து உதறி யெறிய வேணும். வேறுவழி யில்லை.

சிஷ்யன்:—அண்டபிண்ட சராசரங்கள் யாவற்றையும் தனது வயிற்றிற்குள் வைத்திருப்பதாகச் சொல்லப்படும் விநாயகரைப்போல, எனது குருநாதா! தாங்கள் தங்களது நாக்கின் நுனியில் அகண்ட சச்சிதானந்த சாட்சாத்கார ஞானத்தை வைத்திருக்கிறீர்கள். ஆனந்தபரவசமானேன்;

அடியேனது பாக்கியத்தை யார்பெற்றிருக்கிறார்கள்? குழந்தைப் பருவத்தில் எனது ஜாதகத்தைப் பார்த்து, 18 வயதில் புதையல் கிடைக்கும் என்று ஜோசியர்கள் சொன்னார்கள். அப்படியே இப்பொழுது எப்பொழுதும் அட்சயமான ஞானநிட்சேபம் நினது அனுக்கிரகத்தால் கிடைக்கப் பெற்றேன். இறுமாப்படைந்தேன். ஸ்வாமி!

என்று சொல்லிக்கொண்டிருக்கும் அளவில் அதிகாலையாகியபடியால், ஓர் பாகவத கோஷ்டியானது பகவத் பஜனை செய்துகொண்டு ஸ்வாமிகளிடத்திற்கு வந்தது. உடனே அம்மகானும் எழுந்து, ஆடினார், பாடினார், ஆனந்தக்கூத்தாடினார். தன்னை மறந்தார். பக்தி ஸ்வரூபமாய் விளங்கினார். கண்ணீர் உதிர்த்தார், உருண்டார், புரண்டார், விதம் விதமான நடனங்கள் செய்தார். சிஷ்யனும் அங்ஙனமே. இவ்விதமாக நெடுநேரம்வரை பஜனை செய்துகொண்டிருந்த பின்னர், க்ஷுத்பாதை நிவர்த்தியின் நிமித்தம் பக்தசிரேஷ்டர்கள் கலைந்தனர். இதுநிற்க, ஓர் தினம் குருவும்சிஷ்யனும் இன்னும் சில அடியார்களுமாக ஓர் படகிலேறி தண்ணீர் மார்க்கமாய் யாத்திரை போகின்றனர்.

குரு:—சற்புத்திரா! கேட்பாய். எல்லையற்ற இந்த ஏரியைப்பார். திசைகள் தெரியவில்லை. முதலைகள் முதலிய துஷ்ட ஜந்துக்கள் துள்ளிக் குதிப்பதைப்பார். ஆழமோ காணமுடியாது. பயங்கரமான சுழல்காற்று அடிக்கின்றது. ஆகாயம் கறுத்து சப்தமேகங்களும் ஒன்றுசேர்ந்து பர்வத சிகரங்களிலிருந்து விழும் அருவிகளைப்போல் மழை பொழிகின்றது. அண்டகோளகை இடிந்ததுபோல இடி இடிக்கின்றது. பயங்கரமான வாள்யுத்தம் நேரிட்டால்போல் மின்னல் வெட்டுகின்றது. எங்குபார்த்தாலும்

யாதோர் ஆதரவும் இல்லை. நிச்சப்தமாயிருகின்றது. நமது படகின் மாலுமியானவன் இப்படியிருப்பது இந்த ஏரியின் சுபாவம் என்றும், ஆகையால் பயப்படவேண்டாம் என்றும் தான் நிச்சயமாய் கரை சேர்ப்பதாயும், உறுதிமொழி கூறுகிறான். நாம் இவ்வேரியில் அனுபவசாலியாகிய அவனை நம்பி, அவன் சொற்படி கேட்டு, இருக்கச்சொல்லும் வண்ணம் இருக்க உடன்படுகிறோம். நாம் நிச்சயமாய்க் கரை சேர்வோம். ஆனால், அவன் உறுதிமொழியை நம்பாமல் இப்பொழுது நடுங்கிப் பயந்து, ஏங்கி, கீழே குதித்துத் தப்பிப் பிழைக்கப் பார்ப்போமானால், நாம் மரணமடைவது நிச்சயம். அப்பனே! இதுபோன்றே இப்பிரபஞ்சமும்.

சிஷ்யன்:—ஸ்வாமி! தெளியவில்லை.

குரு:—இப்பிரபஞ்சமாகிற கரைகாணாத ஏரியில் மண் பெண் பொன் என்னும் பயங்கரமான முதலைகள் துள்ளிக் குதித்து விளையாடுகின்றன. இப்பிரபஞ்சத்தின் லட்சணமோ அநிர்வசநீயம். ஓயாத ஆசையாகிற சுழல்காற்றடிக்கின்றது. பிரம்மசொரூபமானது மறைபட்டு, மாயா மேகமானது மீளாமல் அமிழ்ந்துபோகும்படியாகக் காமக்குரோதாதியாகிய கொடூர மழையைப் பொழிகின்றது. பயத்தினால் கலக்கமுறும்படியான கஷ்ட நஷ்டங்களாகிற இடியானது உண்டாகிறது. ஏதோ சில விநாடி நேரங்களுக்கு மின்னல் வெட்டுப்போல் கீர்த்தியடைகின்றோம். இப்பேர்ப்பட்ட பிரபஞ்சத்தில் அபயாஸ்தம்கொடுத்து ரட்சிப்பதற்கு ஒருவரும் இல்லை. மாலுமியாகிற குருவையும், தோணியாகிற சரீரத்தையும் தவிர வேறொருவராலும் ஒன்றும் முடியாது. மாலுமியானவன் இந்த ஏரியில் எங்ஙனம் அனுபவத்தாலே தேறி, சற்றும் பயப்படாயல் நமக்கும் தைரியம்சொல்லிக்

கரை சேர்க்கிருனே, அதுபோலவே குருவானவர் இப்பிர பஞ்சத்தில் ஸ்வானுபவத்தாலே தேறி, ஜீவகோடிகளுக்குத் தைரியம்சொல்லிக் கரைசேர்க்கிருர். மாலுமிக்கு இதுவே வேலையாகும். குருவுக்கு அதுவே வேலையாகும். ஸ்வானு பவசாலியாகிய சற்குரு கிடைத்துவிட்டால் பயமேயில்லை. இந்தச் சரீரமாகிய தோணியிலேறி இருக்கும் ஜீவனுகிய நீ சற்குருவாகிய மாலுமியாலேயே கரைசேர்க்கப்படவேண் டும். சிருஷ்டிகர்த்தாவும் குருவேயாகும். ஸ்திதிகர்த்தா வும் குருவேயாகும். கடைசியில் சர்வமும் மித்தையென்று சர்வ சம்ஹாரம்செய்து ஆனந்தநிர்த்தனம் செய்பவரும் குருவேயாகும். சற்குருவைச் சீஷனானவன் மர்க்கடமுஷ்டி போல் பிடித்துக்கொள்ள வேண்டும். உயர்ந்த கோபுர மேறிக் கீழே குதிக்கினும் குரங்குக் குட்டியானது பற்றி யிருக்கும் தாயை விடுமோ? அதுபோன்றே சீஷனானவன் இருக்கக் கடவன். குரு சொல்லியவண்ணம் இருக்கக் கட வன். மாலுமியின் சொல்மீறி அவன் இருக்கச் சொல்லும் வண்ணம் இராமல் நாம் தாறுமாருய் இருப்போமானுல், இந் தப் படகு கவிழ்வது எப்படி நிச்சயமோ, அப்படியே குரு வின் சொல்மீறி இஷ்டம்போல் இருப்பவன் சரீரமாகிற தோணி இப்பிரபஞ்சமாகிற ஏரியில்கவிழ்ந்து அதோகதிக்கு ஆளாவது நிச்சயம். ஆகையால், எந்தன் மைந்தனே! குரு வாகிய மாலுமியில்லாதான் தட்டுக்கெட்டுத் தடுமாறி மிகவும் தவிப்பான்.

சிஷ்யன்:—எனக்கு ஞானஸ்நானம் கொடுத்து என் னைச் சுத்தம் செய்விக்கும் பிதாவே! சரீரமானது தோணி என்று சொல்லுகிறீர்கள். முன்பொருதரம் சரீரம் அவலட் சண முடையதென்றும் வெறுக்கத்தக்கதென்றும் அறிந் தேன். இப்பொழுது விரும்பத்தக்கதென்று சொல்லுகிறீர்

கள். சரீரமானது விரும்பத்தக்கதோ, வெறுக்கத்தக்கதோ தெளிய உரைத்துத் திடப்படுத்தவேணும். ஸ்வாமி!

குரு :—அப்பனே! இச்சரீரமானது அவலட்சணமுடையதே; நசிக்கத்தக்கதே; அநித்தியமே. ஆயினும் அக்கினிப் பிரவேசத்தினாலோ, வேறு விதத்தினாலோ இச்சரீரத்தை விடத்துணிபவன் மூடனிலும் மூடன். தற்கொலை செய்துகொண்டால் இவ்வரிய ஜன்மம் தவறி, மிக இழிந்த வர்க்கங்களாகிய பேய், பிசாசு, முதலியவைகளாகத் திரியவேண்டும். சூன்யவாதிகள்கூட அங்ஙனம் செய்யத் துணியார். பர்வதாகாரமாய்ப் பருத்துத் தடித்த பாமர ஜடத்துவ வாதிகளாகிய லோகாயதர்கள்கூட அங்ஙனம் செய்யார். இந்தச் சரீரநாசம் ஜனன நாசமாமானால் விரும்பத்தக்கதே. ஆனால், அது அங்ஙனமன்று. இச்சரீரத்தைப் போல நாம் எத்தனையோ சரீரங்களை அடைந்துவிட்டோம். இன்னும் எத்தனையோ சரீரங்களை அடையப்போகின்றோம். வஸ்திரங்கள் கிழிந்தவுடன் அவைகளை எறிந்துவிட்டுப் புது வஸ்திரங்களை அடிக்கடி தரித்துக்கொள்வது போல, நமது கர்மங்களுக்குத் தக்கவாறு சரீரங்கள் மாறி மாறி உண்டாகின்றன. ஆகையால், இச்சரீர நாசம் ஜனன நாசம் ஆகாது. மாதாவின் கர்ப்பத்தில் 10-மாதக்காலம் வசித்தல் நரகவாசமேயாகும். மல மூத்திரங்களால் சூழப்பெற்று, கணக்கின்றிய புழுக்களால் அடிக்கடி கடிக்கப்பெற்று, சாட்சாத் ஈசுவரனை வேண்டி நிவர்த்திபெற விரும்பும் கெர்ப்பவாசம் மகா கொடூரமானது. கர்ப்பவாசம் பெறாமல் இருப்பதற்கு மார்க்கம் என்னையோ, அதுவே ஜனன நாசமார்க்கம். ஆகையால், ஜனனநாச தந்திரமாகிய ஜீவன்முக்திப் பதம் எய்தும்வரை இச்சரீரத்தை எவ்வளவு ஜாக்கிரதையாய்ப் பேணிரட்சிக்க முடியுமோ, அவ்வளவும்

செய்யவேணும். சரீரம் ஆரோக்கியமாயும் பலமாயும் இருந்தால் அறிவு சீக்கிரத்தில் விர்த்தி யடையும். ஜிதேந்திரியனும்,சற்றும் ஒட்டையில்லாத சரீரத்தை யுடையவனே சித்தி முக்திகளுக்கு அதிகாரி. தோணியில் ஒட்டைவிழுந்துவிட்டால் தண்ணீர் உள் நுழைந்து தோணியைக் கவிழ்த்து விடாதோ? அதுபோலவே இச்சரீரத்தில் ஆரோக்கியம் தவறி மூளை பலஹீனமாகி ஒட்டைகள் விழுந்துவிட்டால் பிரபஞ்சவெள்ளம் உட்புகுந்து சரீரத்தைக் கவிழ்த்து ஜீவனைத் தத்தளிக்கச் செய்யும். தோணியின்றி ஏரியைக் கடந்து கரைசேர முடியுமா? முடியாது. அதேமாதிரி சரீரமின்றிப் பிரபஞ்ச சாகரத்தைக் கடத்தல் முடியாது. கரைசேர்ந்த பிற்பாடு தோணி அவசியமில்லை; அதுபோல முக்தி கைகூடிவிட்டால் சரீரம் அவசியமில்லை. அதுவரை சரீரம் அவசியமே. சரீரத்தில் மிக்க விருப்பம் இல்லாமல் 'தேகமே ஆத்மா' என்ற நினைவைவிட்டு, யதார்த்த ஸ்வரூபத்தை அறிந்து, ஜன்மோத்தேசமாகிற முக்தி கைகூடும் வரை இச்சரீரத்தை அதற்கு நிமித்த மாத்திரமாய் நினைத்து ரட்சிக்க வேண்டும். இச்சரீரமானது முமுட்சுகளுக்கு ஜீவன்முக்தி நிமித்தமாய் ரக்ஷிகப்பட வேண்டியதும் பிரபஞ்ச நிமித்தம் வெறுக்கப்பட வேண்டியதுமாம். ஆகையால், அரியபுதல்வனே! சரீரமானது நன்றாய் போஷிக்கப்பட்டுப் பாதுகாக்கப் படவேண்டும். சரீரம் சௌக்கியமாயிருந்தாலன்றோ மூளையும் பலமாயும் தீட்சண்யமாயும் சுத்தமாயும் இருக்கும்? மூளை தீட்சண்ய மாயிருந்தாலன்றோ ஆன்றோரது ஆப்த மொழிகளைக் கிரகிக்கவும், ஞான சாஸ்திரங்களி னுட்புகுந்து உற்றுணரவும் முடியும்? ஆகையாலன்றோ வியாதியஸ்தர்கட்குச் சாஸ்திரோபதேசம் செய்யக் கூடாதென்று ஸ்மிருதி கூறுகின்றது? ஏன்? கிரகிக்

கும் சக்தியின்மையால். மகாபலிஷ்டனும் ஆரோக்கிய சரீரனுமான அர்ச்சுன னல்லாமல் வேறொருவரால் கொடிய பாரத யுத்தகளத்தில் சிரசுகள் தெறிபட்டு, அனந்தகோடி பந்துகள் ஆகாயத்தில் பறந்து விளையாடப் படுவனபோலிருக்கும் பயங்கரமான சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் தயா பூர்வமாய் அருளிய கீதாமிருதத்தின் சுவையை அறியத்தரமோ? வீராதி வீரனுப் ராட்சதப்பூண்டை அடியோடழித்த தீரனுகிய ஸ்ரீராமர் சுகசரீரனு யிருந்ததினுலன்றே வஜிஷ்டாது தத்துவோபதேசங்களை உடனே கிரகித்தார்? ஸ்ரீ சங்கரர் ஜிதேந்திரியனன்றே? ஞானிகளுடையவும் யோகிகளுடையவும் சரீரங்களைப் பார்த்தால் எவ்வளவு வசிகர மாகவும், லட்சணமாகவும், ஆரோக்கிய மாகவும் இருக்கின்றன. சுகசரீரிகளே யன்றி மற்றவர்கட்கு முக்தியாகிய கரை வெகுதூரமாம். ஆகையால், ஞானபுத்திரா! சற்குருவாகிய மாலுமியும் சுகசரீரமாகிய தோணியும் இல்லாவிடில், இப்பிரஞ்ச சாகரத்தைக் கடந்து பிரம்ம வஸ்துவாகிய கரைசேர்த லரிது.

சிஷ்யன்:—எந்தன் குருஸ்வாமியே! மார்க்கண்டேயருக்கு என்றும் பதினறு வயதளித்த பரமேசுவரனைப்போல் எனக்கும் என்றும் தெவிட்டாத ஞானமிர்தம் அளிக்கும் பரமேசுவரா! போற்றி, பேரூற்றி. நினது அடியிணைகள் போற்றி. சரீரத்தின் வெறுமையும் அருமையும் அறிந்தேன்.

என்று சொல்லிக்கொண்டே தான் கையில் வைத்துக் கொண்டிருந்த கிறிஸ்து வேதப் புஸ்தகத்தைத் திறந்தான். திறந்ததும் இயேசுநாதர் கடைக்காலத்தில் பிடிபட்டதும்

சிலுவையி லறையப்பட்டதுமாகிய பரிச்சேதம் தோன்றிற்று. குருவின் உத்தரவின் பிரகாரம் அதைப் படித்துவிட்டு, வினவுகிறுன்.

சிஷ்யன்:—ஸ்வாமி! மகான்களுக்கு அவமானமும் ஆபத்துகளும் நேரிட்ட காரணமென்ன? லோகோத்தாரணத்தின் பொருட்டு அவ்வப்போது அவதரிக்கும் மகாபுருஷர்கள் அவதிப்படக் காரணம் என்ன?

குரு:—எனது அரும்புதல்வனே! மகான்கள் இருவகையாம். அனந்த கோடி ஜன்மங்களாய் பிரபஞ்சிகர்களாக உழன்று பெரியோர் தர்சனத்தாலும், சற்குரு கடாட்சத்தாலும், சிறிது சிறிதாய்ச் சேர்க்கப்பட்ட புண்ணிய வசத்தாலும், பிரபஞ்ச வெறுப்படைந்து இவ்வெறுப்பானது மேலும் மேலும் விருத்தியாகி மகாதீவிரதரவிரக்தனைய் அவன் முக்திப் பதம் எய்துபவர் ஓர் வகை மகான்களாகும். இவர் கீழிருந்து ஸ்வயத்தனத்தால் மேல் செல்பவர். தன்னைத்தேடி யடைந்தவர்க்கு நிழலைத்தரும் அகன்ற ஆலவிருட்சத்தைப் போல, தன்னை நெருங்கி யடைந்தவர்க்கு உபதேசம் செய்து கரை சேர்ப்பிக்கு யவர்கள். இவர்கள் அநேகமாய் விதேக முக்திப் பதத்தில் திருப்தியுள்ளவர்கள். காசியில் கனேசப் பிரமம் இருந்ததுபோல இராப் பகலறியாமல் பிராரப்த தேகம் நசிக்குமளவும் நிர்விகற்ப சமாதியி லிருப்பவர்கள். பிரபஞ்ச ஸ்திதியை மறப்பவர்களாதலால் ஜீவகாருண்ணிய நிமித்தம் வெளிப்படார்.

இன்னெருவகை மகான்களைக் கூறக் கேட்பாய். உலகத்தவாது ஆவசியகத்தின் பொருட்டு அவர்களுடைய மனோதிட எண்ணங்கள் ஒற்றுமைப்பட அவர்களுடைய துக்க நிவர்த்தியின் நிமித்தம் காலதேச வர்த்தமானங்களை

அனுசரித்து அவ்வப்போது அவதரிக்கும் மகா புருஷர்களாகும். இவர்களே ஈஸ்வரனது அவதார புருஷர்கள். பகவத் கீதையில் 4-வது அத்தியாயம் 6, 7, 8 ஸ்லோகங்களில் கூறியிருக்கிறபடி பகவானே அவதாரம் செய்கிறார். காலதேச வர்த்தமானங்களை அனுசரித்து அவதார புருஷன் பகவானது அம்சத்தில் குறைந்தும் நிறைந்தும் இருப்பார். முன் சொல்லிய மகான்களைப்போல இவர்களுக்கு முக்தி லட்சணம் இல்லை. லோகோத்தாரணமே லட்சியமாகும். ஜீவகாருண்ணியமே இவர்களது கையில் கட்டிய கங்கணம் ஆகும். மின்னல் வெட்டுப்போல் தோன்றி மறைந்து விட்டாலும், அவர்களது தத்துவோபதேசங்கள் நீடூழி காலம் நிலைநின்று ஜீவகோடிகளை கடைத்தேறுவிக்கும். பிராமணருக்கும் சண்டாளருக்கும், வேண்டுவோருக்கும் வேண்டாதாருக்கும், சகலருக்கும் வெளிச்சம் கொடுக்கும் சூரியனைப் போலவும், யாதொரு கைம்மாறும் கருதாமல் பொழியும் மேக வருஷத்தைப் போலவும், பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்கட்கும் ஹிதோப தேசத்தை அருளிச்செய்து கரை தெரியாக் கப்பலுக்குத் தைரியங் கொடுக்கும் தீப ஸ்தம்பம்போல் விளங்குவார்கள். பரோபகாரமே இவர்களது கைங்கர்யம். கிடைக்கும் அன்னத்தைக் கூட்பிட்டுக் கொடுக்கும் காக்கையைப்போல, தங்களது ஆனந்தாமிர்தத்தைச் "சேரவாரும் ஜெகத்தீரே" என்று பறையோசை யிட்டு அழைத்து சகலர்க்கும் கொடுப்பவர்கள். ஸ்ரீ கிருஷ்ணர், சங்கரர், ராமானுஜர், மாத்வர், பௌத்தர், சைதன்னியர், மகம்மது, குரு நானக், இயேசுநாதர்—இவர்கள் எல்லோரும் அவதார புருஷர்களே. இவ்விரு வகையான மகான்களுக்கும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. முதலாவது வகுப்பு மகான்களுக்கு அவர்

களது பூர்வ ஜென்மங்களிற் செய்து இந்த ஜென்மத்தில் அனுபவிப்பதற்கு எடுத்து வைக்கப்பட்டுள்ள பிராரப்த கருமங்கள் சுகதுக்கங்களைக் கொடுக்கும். மகா பக்தனாகிய ராமதாஸர் சிறைவாசம் செய்ததும், மகானாகிய ஆணிமாண்டவ்யர் என்னும் ரிஷியை கழுகுமரத்தில் சேர்த்து ஆணியறையப் பெற்றதும் திருஷ்டாந்தங்களாம்.

இரண்டாவது வகுப்பு மகான்களுக்கு நேரிடும் துன்பங்கள் பொய்யாகிய பிரபஞ்சத்தில் மெய்யை ஸ்தாபிக்கக் கருதி, நிர்ப்பயமாய் அநிர்த ஜடதுக்க ரூபமான பிரபஞ்சத்தவருக்குச் சச்சிதானந்த சொரூபத்தை பிரத்தியட்சமாய் நிரூபிக்க எத்தனிப்பதாலும் அவர்களது தத்துவோபதேசங்களை அனுபவ பூர்வமாய் அவர்களே உலகத்தவர்க்கு காட்டவேண்டி யிருப்பதாலும், சாபானுக்கிரக சர்வ சக்திகளை யுடையவர்களா யிருந்தாலும், மிருகப் பிராயத்தை உடைத்தாகி, மிருகத்தன்மை வாய்ந்த மானிடர்களின் பேரிலுள்ள இரக்கத்தாலுமே. சிலுவையில் இயேசுநாதரின் மரணமும், மகம்மது என்பவரின் தப்பியோடிய ஓட்டமும், சங்கரரின் ஜாதிப் பிரஷ்டத்துவமும் திருஷ்டாந்தங்களாகும். அவதார புருஷர்களில் பூர்ணாம்சம் பெற்று விளங்கிய ஸ்ரீ கிருஷ்ணனே இடையனென்றும் மடையனென்றும் இகழப்பெற்றார். இன்னும் சிஷ்யனே! கேட்பாய். எவர் உலகத்தில் அதிகக் கஷ்டத்திற் குள்படுவாரோ, அவரே அவ்வளவு சுகத்திற்குப் பாத்திரவான் ஆவார். கஷ்டம் எவ்வளவோ, சுகம் அவ்வளவு. எப்படி ரோஜாப் புஷ்பமானது முட்களால் சூழப்பட்டிருக்குமோ, அப்படியே நித்திய சுகமானது துக்கத்தால் சூழப்பெற்றது. எப்படி கொடூர விஷத்தையுடைய கிருஷ்ண சர்ப்பத்தினிடத்தில் நாகரத்தினமான திருக்குமோ, அப்படியே துன்பங்களி

னிடத்தில் சுகம் இருக்கும். எவன் கஷ்டப்படுகிறுனே அவன் சுகத்தை நிச்சயமாய் அடைவான். இது சாதாரண நியதி. மகான்கள் சுகம் வந்த காலத்தும் துக்கம் வந்த காலத்தும் சுகத்தைத் தவிர வேறென்றையும் பாரார். சுகமே அவர்களது சரீரம். சுகமே அவர்களது எண்ணம். சுகமே அவர்களது வசனம். சுகமே அவர்களது ஆகாரம். அவர்களது உஸ்வாச நிஸ்வாசங்களும் சுகமே; அவர்கள் சுகப்பிரம்மமே. சிஷ்ய சிரோன்மணியே! இன்னும் கேட்பாய். யூதாஸ் இஸ்காரியோத் என்பவனுக்கு இயேசுநாதரின் விலை 30 வெள்ளிக்காசே. பீட்டர் என்னும் பிரதம சிஷ்யன்கூட சமயத்தில் அவரது மகிமையையும் அவரையும் மறுத்துவிட்டான். ஸாட்யூசி, பாரிசி, யூதர் முதலிய மூட ஜாதியார் அவரது முகாரவிந்தத்தில் காறித்துப்பி, அவரது ஞானப்பிரகாச சிரசில் முட்கிரீடத்தை வைத்து, வேண்டிய ஹிம்சைகளெல்லாம் செய்தபோதிலும், அவர் சுகஸ்வரூபியாக விளங்கி சுகபோகத்தையே நிரூபித்தார். கடைசியில் அவரைச் சிலுவையி லறைந்தார்கள். அப்பொழுது கூட அந்தச் சாந்த மூர்த்தியானவர், 'பிதாவே என்பொருட்டு இவர்கள் குற்றத்தை மன்னித்தருளும்' என்று பிரார்த்தனை செய்தார். இதல்லவோ தீரத்துவம். இவரல்லவோ ஞான சிம்ஹம். ஆகையாலல்லவோ 19-நூற்றுண்டுகளாகியும் அவரது தேஜஸ் ஜ்வலிக்கின்றது. ஈனர், எளியர், பாமரர், பறையர் முதலிய ஜாதியாருக்கு அபயாஸ்தம் கொடுத்து ரட்சித்து ஆதரித்து வருகிறுர். ஆகையால், அருமையான குமாரனே! நீ ஒரு கிறிஸ்தவனுயிருப்பாய். வாஸ்தவமாக நீ கிறிஸ்தவனுய்விட்டால் மோட்சலாபத்தில் சந்தேகம் இல்லை. ஜீவனுகிய நீயும் சிவமாகிய பிதாவும் ஒன்றே. நீயே சிவம், சிவமே நீ. 'சிவோ

ஹம்' 'சிவோ ஹம்' என்னும் ஜெயபேரிகையை நிர்ப்பய மாய் அடி.

சீஷ்யன்:—ஸ்வாமி நான் கிறிஸ்தவன் ஆவேன் ஆனல் நிச்சயமாய் மோக்ஷம் அடைவேன் என்றும் ஆசையால் நான் கிறிஸ்தவனுய் இருக்கத் தாங்கள் விரும்புவதாயும் கூறினீர்கள். ஜாதி மதாசார வருணுசிரம தருமங்கட்கே உள்படாமல் கேவலம் நீச்சர்களா யிருக்கப்பட்ட கிறிஸ் தவர்களுக்கு எங்ஙனம் மோக்ஷம் கிட்டும். இன்னும் தங்க ளது அத்தியாற்புதமான உபதேசங்களில் அடிக்கடி கிறிஸ் தவ மகமதியரெனத் தமது மதங்களையும் இன்னும் இவ்வுல கில் உள்ள பற்பல சில்லரை மதங்களையும் யாதொரு தார தம்மியம் இல்லாமல் சமரஸமாய் உரைக்க கேள்விப்படுகி றேன். ஹிந்துமதந்தான் ஸனுதன, அதாவது நித்தியமான மதமென்றும், மற்ற மதங்களெல்லாம் ஸ்தாபகர்கள் சம்சய ரகித மகான்களாயினும், வேறுபாடுகளை உண்டாக்கி, பிர பஞ்சவாசனை முத்துவதற்கே காரணமா யிருத்தலால் உப யோகமற்றவை யென்றும் அனேகர் சொல்ல நான் கேட் டிருக்கிறேன். ஆகையால் இச்சந்தேகத்தை தெளிவிக்கக் கோருகிறேன்.

குரு:—மாசற்ற மைந்தா! கேட்பாய். முதலாவது ஜாதி மதா சாரங்களைப்பற்றி சொல்லுவேன். ஜாதிக்கும்மோக்ஷத் திற்கும் யாதொரு பேத சம்பந்தமில்லை. ஜாதியானது, ஜன சமுதாயம் ஒழுங்கான வழியில் நடைபெற்று அந்நியோந் நிய ஹிம்சையில்லாமல் ஒற்றுமையாய் வாழவேண்டுமென் றே உண்டாயிற்று. இப்பிரபஞ்சவாழ்வாகிய மிருகப்பிராயத் திற்கே ஜாதிபேத திருஷ்டி அவசியமாம். நமது வேதாந்த சாஸ்திரங்களில் ஆடி ஓடித்தேடிப்பார்த்தாலும் முக்திக்கு, ஜாதியின் உயர்வு தாழ்வைப் பற்றி விசாரணையில்லை. பல

விடங்களில் மானிட ஜென்மங்கூட அவசியமென்று சொல்லப்படவில்லை. எச்சரீரத்திலும், எவ்வருணத்திலும், எப்பிறப்பிலும், எத்தேயத்திலும், மோக்ஷம் சித்திக்கலாம். ஸ்ருதியென்றும், ஸ்மிருதியென்றும் நமது ஞானம் இருவகைப்படுமோம். ஸ்ருதியென்று சொல்வது, கேவலம் சத்தாமாத்திரமாய், அகண்ட சச்சிதானந்த சைதன்ய வஸ்துவாகிய பிரம்மஸ்வரூபத்தைப் பற்றி பிரதிவாதிப்பது. இவை உபநிஷத்துக்களே ஸ்மிருதியென்று சொல்லப்படுவது. கால தேய வர்த்தமானங்கட்குத் தக்க பிரபஞ்ச வாழ்வை விரும்பியபடி ஜனசமுதாயத்தின் நல்லொழுக்கத்திற்குக் காரணமாய் அடிக்கடி மாறுதல்களும், சீர் திருத்தங்கட்கும் உட்பட்டு அமைக்கப்பட்டிருப்பது. ஸ்ருதியில் சமரசமே நிறைந்து சர்வம் ஆனந்தமயமாம். ஸ்மிருதியில் ஜாதி மதாசார வருணுசிரம தருமங்கள்விளக்கப்பட்டிருக்கின்றன. மோக்ஷ இச்சையுடைய முமுக்ஷுவுக்கு, பிரபஞ்ச வாழ்வைப் பற்றி கவனிக்க நியாயமில்லை; பிரபஞ்ச வெறுப்புற்று செல்கின்றவனுதலால் ஜாதி, மதாசாரங்கள் அவனைக்கட்டுப்படுத்தா. ஆகாயத்திலிருந்து கீழ் விழும் மழைத்துளிகள் எவ்விடத்தில் விழுந்தாலும் எல்லாம் சமுத்திரத்தையே அடைகின்றனபோல், சகல தேயத்தவரது, சகல மதஸ்தவரது, சகல பிராணிகளது ஸ்தோத்திரங்களும் ஏகமே. வாத்வீதியமாயிருக்கப்பட்ட பிரம்ம வஸ்துவுக்கே போய்ச் சேர்கின்றன. சூரியனது பிரகாசமானது, எங்ஙனம் பிராமணர்களுக்கும், பறையர்களுக்கும் சமமோ, அங்ஙனமே, பிர்மபதமாகிய மோட்சத்திற்குக் காரணமான ஞானமானது, சர்வ ஜீவ கோடிகளுக்கும் ஒரே மாதிரி லபிதமாகும். ஈஸ்வர சிருஷ்டியான சமரசானுபூதியைத் தந்து, சர்வ ஜீவராசிகளையும் கடைத்தேறுவிக்கும் ஜீவசிருஷ்டியே, வேறுபாடுகளை யுண்

டாக்கி, மேலும் மேலும் ஜெனன மரணசக்கரத்தில் சுழற்றும். இவ்வேறுபாடுகள் எல்லாம் ஜீவசிருஷ்டியே. பக்தி ஞான சாஸ்திரங்களைக் கூர்ந்து பார்த்தால் சாஸ்திரக்ஞர்கள் முதல் சண்டாளர் வரை சகலரும் பக்த சிரோன்மணிகளாகவும், மகா ரிஷிகளாகவும் கூடும் என்பது நன்கு விளங்கும். கோராகும்பர், சேனநாவிதர், கபீர்தாஸர், ரோஹிதாஸர் முதலிய பக்த சிரேஷ்டர்களும், வால்மீகர், பராசரர், புலஸ்தியர், காகபுசுண்டர், வேதவியாசர் முதலிய ஞானிகளும் சான்றோ. ஆகையால் அப்பனே! மோட்சவிஷயத்தில் எள்ளளவேனும் ஜாதி மத வித்தியாசங்கள் கிடையாது. தவிர, நமது பாரத வருஷமாகிய இவ்விந்தியா நாட்டில் தானே இவ்வித ஜாதி வேறுபாடுகளும், கட்டுப்பாடுகளும் இருப்பது. இவ்வேறுபாடுகளும், கட்டுப்பாடுகளும் உயர்ந்த ஜாதியார் என்னப்பட்ட பிராமணரால் அவர்களது வித்யா கர்வத்தினாலும், ஸ்வய நன்மையை உத்தேசித்து அந்தக்கர்ணத்திலிருந்து உற்பத்தியாகின்ற அகங்காரக் கிராந்தியினாலும் உண்டாக்கப்பட்டன. "Even the Devil quotes Scriptures for his purpose" என்று சொல்லியபடி, பகவத்கீதையில் 4-வது அத்தியாயம், 13-வது ஸ்லோகத்தையும் மற்றும் மேற்கோட்களாக உரைத்து, பிராமணர் என்போர், அவர்களது அகங்காரப் பெருமையை ஸ்தாபிக்கின்றனர். இவ்விந்தியா நாட்டுக்குட்புரமேயுள்ளபாரும் ஜாதி மதாசாரங்கட்குக் கட்டுப்படாததால், அவர்களுக்குமோக்ஷத்தில் அதிகாரம் இல்லை, என்று சொல்வது பூனையானது, தன் இரு கண்களையும் மூடிக்கொண்டு ஒருவரும் பார்க்கவில்லை என்று பாலைக் குடிப்பதுபோலும் குழந்தாய்! இன்னும் கேள்.

ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு பாத்திரம் போன்றது. பிர்மானந்தப் பாற்கடலில், ஒவ்வோர் மகான்கள் ஒவ்வோர்

பாத்திரத்தில் மொண்டு, அவர்களது சிஷ்ய பரம்பரைகளுக்கு கொடுத்தார்கள். பாத்திரங்கள் வெவ்வேறு அளவும், மாதிரியு முள்ளனவையாய் இருந்தபோதிலும், உண்பவர் சகலரும் அனுபவிக்கும் ருசி ஒன்றே. அதுபோலவே, வெவ்வேறு நாமரூபக் கொள்கைகளுடன் பலமதங்களும் தோற்றப்படினினும், அனுபவம் சதானந்தமே, தவிர, பச்சோந்தியை பலர் பார்த்து, பலவித நிறமுடையதாகக் கூறியதுபோல, பிரமஸ்வரூபத்தையும் பல மகான்களும் அவர்களது அனுபவத்திற்கு தக்கவாறே பற்பல விதமாகக் கூறினார்கள். ஆயினும், பச்சோந்தி ஒன்றேபோல பிர்ம வஸ்துவும் ஏகமே. ஞானபுத்திரா! நன்றாய் யோசித்துப்பார். உள்ளேபோனால் மூச்சு, வெளியேபோனால் போச்சு இதற்குள்ளே, என் மதம் பெரிது, உன் மதம் சிறிது என்று வாதாடுவோர் மதம் பிடித்துத் திரிபவர்களே. ஈற்றில் ஒரு பிடி சாம்பலுக்குக் கூட வகையில்லாமல் அழிந்துபோகும் இச்சரீரத்தை,அபிமானித்து அகங்காராதி கர்வத்தை மேற்கொண்டு, நாயைப்போல வாய்குலைத்து, மிஞ்சினால் மேல் விழுந்து கடித்து மதஸ்தாபனம் செய்ய விரும்புவர்களது ஞானம் எத்தகையதோ? அதை அவர்களுக்கு மனவருத்தமுண்டாக்குமென்று கருதி இவன்கூறாது விடுவோம். சர்வலோக சரண்யனாகிய ஈஸ்வரனை, எப்பேர் வைத்து அழைத்தாலென்ன?குழந்தைகள் பிதாவை அப்பா என்றும்,அண்ணா என்றும்,அடே என்றும் எப்படி அழைத்தாலும் பிதாவுக்கு சந்தோஷமே. அதுபோல, சாக்ஷாத் ஈஸ்வரனை, அல்லா என்றாலும், கிறிஸ்து வென்றாலும், புத்தன் என்றாலும் ஜிஹோவா என்றாலும், கிருஷ்ணன் என்றாலும் எப்படி அழைத்தாலும் சந்தோஷமே. மயானத்தில் பேய்களுடன் கூடி, கைகோர்த்து ஆனந்த நடனம்செய்யும் ஈஸ்வரனுக்கு,

மானிட ஜென்மம் எடுத்தோரிற் பலரும் அப்பேய் பிசாசங் களைப் பார்க்கிலும் இழிவானவர்களோ? தவிர ஒருவன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம்பண்ணுவான்; ஒருவன் (Soap) சோப்பு தேய்த்து ஸ்நானம் பண்ணுவான்; இன்னொருவன் வாசனைப் பொடி தேய்த்து ஸ்நானம் பண்ணுவான்; இன்னொருவன் சாதாரணமாக ஸ்நானம் பண்ணுவான். இவர்கள் அனுபவிக்கும் பலனும், சரீர சுத்தியும், சுகமுமொன்றே? இதுபோலவே மதங்கள் வெவ்வேறு இருந்தபோதிலும், எல்லாவற்றின் நோக்கமும், அடையும் பலனும் முக்தியாகிய ஒன்றே. ஆகையால், மகனே நீ சிறிதும் ஐயம் உற வேண்டாம். சகல மதங்களும், சகல சாஸ்திரங்களும், சகல ஜாதியும், சுருக்கமாய், சகல சிருஷ்டியும் சைதன்ய வஸ்துவில் மாயையில் பிரதி பலிக்கப்பட்ட வெவ்வேறு நன் சாயைகளாம். பல விசித்ர நிறமுள்ள ஸ்படிகக் கற்களால் கட்டப்பெற்ற ஓர் பளிங்குமா மண்டபத்திற்குள் ஓர் நாயானது போகும்படி நேரிட்டது. உட்சென்ற உடன் நான்கு பக்கமும் பார்த்தது; நாலாபக்கமும் உள்ள ஸ்படிகக் கற்களில் இதனது பிரதிபிம்பமானது அனந்தகோடி நாய்களாகத் தோன்றிற்று. இதுகுரைத்தது. அவைகளும் குரைத்தன போல் தோன்றின. உடனே அவைகளைக் கடித்தது. கடித்துத் தூரத்த விரும்பி ஸ்படிகத் தூண்களில்மேல் பாய்ந்து கடித்தது. விழுந்தும், குதித்தும், ஆடியும், ஓடியும், பாய்ந்தும், கடிக்க ஸ்படிகக் கற்கள் சில்லாகி சிதறுண்டு நாயின் தேகத்தில் எங்கும்தைக்கவும், நாயின், சரீரமெல்லாம் புண்ணாகி இரத்தம் பீறுண்டு வெயர்த்துக் களைத்துக் கீழ் விழுந்தது. அதுபோலவே, என் அருமையான புதல்வனே! சுத்தபுத்தி நித்திய வஸ்துவானது ஒன்றே. சகலமதங்களும், சகல சாஸ்திரங்களும் மாயையாகிற ஸ்படிக மண்டபத்தில்

பிரதிபலித்த பிம்பங்களாம். சத்திய வஸ்துவினது சாயைக் காக இவ்வுண்மையை அறியாமல் மேல்விழுந்து கடித்து நம்மைநாமே கெடுத்துக் கொள்கிறோம். ஆகையால் சகல வஸ்துக்களும் அவ் விவேக வஸ்துவினது நாமரூபாதிகளால் மாறுபட்ட தோற்றங்களாம். சர்வமதங்களும் ஒன்றே. அப்யாசம் வேறாயிருந்தாலும், முடிவில் அனுபவம் ஒன்றே. இனிமேல், நீசன் என்றும், மிலேச்சன் என்றும், பாமரன் என்றும், பறையன் என்றும், தாழ்வாக எண்ணாதே. இவ் விதமான நிச்சயத்துடன் நீ இயேசு கிறிஸ்துவினுடைய வேதவாக்கியங்களின் பிரகாரம் நடப்பாயானால் நிர்வாண பதம் பெறுவாய். நிச்சயம். சத்தியம்.

சிஷ்யன். எந்தன் குருநாதா! தாங்கள் கூறியதெல்லாம் சத்தியமென்று நன்றாய் அறிகிறேன். ஆனால் அனுபவத்தில் கொண்டுவருதல் பிரயாசமாயிருக்கின்றது. பறையனைக் கண் டால் எங்கிருந்தோ ஓர்மூட புத்தியானது, என் நல்லறிவைக் கீழ்மிதித்து, அவனை வெறுக்கும் படியாய்ச் செய்கின்றது. அன்னிய மதஸ்தரையோ, தேயத்தவரையோ கண்டால் துவேஷம் உண்டாகின்றது. இதன்காரணமென்ன? இது என்ன பிறவிக்குணம் போல் தோன்றுகிறது. நாயின்வா லானது, பிறவியில் வளைந்ததினால், எவ்வளவு நிமிர்த்திப் பார்த்தாலும் நிமிர்த்த முடியாது. அதுபோல, என் இப் பிறவிக் குணத்தை மாற்றுவது அரிதென்று எண்ணுகிறேன். அப்படியாயின், குருசொல்படி நடவாத துரோகியாவேன் என்று பயப்படுகின்றேன். இதற்கோர் உபாயம் சொல்லும் படியாக தங்களை பிரார்த்திக்கிறேன். குரு, ஞானபுத்திரா! இவ்விதமாக உன்மனதில் துவேஷமும் வெறுப்பும் எழு வது உனது பூர்வஜென்ம வாசனையாம். அனந்தகோடி ஜென்மங்களில் தாழ்ந்தவனென்றும், அன்னியனென்

றும், பழகிவந்த உன்பழக்கமே தடித்து, பருத்து வாசனு ரூபமாக உன்னை கைக்கொண்டது. நீ வாசனு வயத்தன னுய் நீ இப்பொழுது ஸ்வதந்திரனல்ல. ஆகையாலேயே நீ சரணத்துக் குள்பட்டு இடைவிடாத துக்கத்தை யனுபவிக் கிருய். இரவில் நன்ருய் நித்திரை செய்கிற நீ, நிசியில் இரண்டு மணிக்கு எழுந்திருக்க விரும்பி வெகு கஷ்டத்துடன் சில நாட்களில் எழுந்திருக்கிருய். வரவர, அது பழக்கமாய் விட்டால், நீ விரும்பாவிடினும், இரண்டு மணிக்கு விழித்துக் கொள்வாய். ஏனென்ருல், இப்பழக்கமானது வாசனையாக உன் சுபாவ மாய்விட்டது. சிலநாட்பழக்கமாகிய இவ்வாச னைக்கே உன்மேல் இவ்வளவு அதிகார சக்தியிருக்கு மானுல் கணக்கற்றப் பிறப்புக்களில் தடித்து வந்திருக்கிற வாசனை கட்கு எவ்வளவு அதிகாரசக்தி இருக்கவேண்டும். சில செம்ப டவ ஸ்திரீகள் அனேகம் கூடைகளில் மீன்சுமந்து கொண்டு போய் ஓர் சந்தையில் விக்கிரயம்செய்து, சில கூடைகளில் மீனுடன் திரும்பி அவர்களுடைய குடிசைகட்கு வரும் மார்க்கத்தில் பெரும் மழை பெய்தது. தங்குவதற்கு இட மில்லாமல் வெகு கஷ்டப்பட்டுக் கடைசியாக ஓர் பூவிற்கும் பண்டாரத்தினது குடிசையில் அவனது அனுமதியின் மேல் ஒதுங்கினுர்கள். இரவாகிய படியால் நித்திரைசெய்ய விரும்பி அவர்கள் படுத்தார்கள். அங்கு எங்குபார்த்தாலும் சுகந்த பரிமள புஷ்பங்கள் குடலைகளிலும், மாலைகளாகவும், செண்டுகளாகவும் தொங்கின. அங்கு படுத்த செம்படவ ஸ்திரீகளுக்கு சிறிதும் நித்திரை பிடிக்கவில்லை. மிகவும் மனக்கிலேசப்பட்டார்கள். அவர்களது நித்திரை வாராமைக் கும், மனக்கிலேசத்திற்கும் காரணம் ஒன்றையும் காணேம். அவர்களில் ஒருத்தி புத்தி நுட்பமுடைய வளாய் காரணத் தை அறிந்துகொண்டு, தனது மீன்கூடையைத் திறந்து

மழை ஜலத்தைத் தெளித்து அதில் தன்தலையை வைத்துக் கொண்டு, தனது இரண்டு நாசித்துவாரத்திலும் இரண்டு பெரிய மீன்களைச் சொருகிக்கொண்டு படுத்து நன்றாய் குறட்டை விட்டுத் தூங்கினாள். இதைப்பார்த்த மற்றவர்களும் அப்படியே செய்தார்கள். அவர்களுக்கு அதிக மனோகரமான புஷ்பங்கள் வெறுப்பிற்கும் மீன்வர்க்கங்கள் விருப்பிற்கும் காரணமானது. ஏனென்றால், அவர்கள் மீனினிடத்திதிலே பழகுவதால் அப்பழக்கம் வாசனையாகத் தடித்து அவர்களது பிறவிக் குணமென்று சொல்லும்படியாய் விட்டது. அதுபோலவே, உனக்கும் பூர்வஜென்மங்களிலோ, அல்லது இந்த ஜென்மத்திலோ உள்ள உனது பழக்கமே பிறவிக் குணமென்று சொல்லும்படியாய் விட்டது. இதை இதற்கு நேர் எதிரிடையான பழக்கத்தால் மாற்றி மெள்ள மெள்ள உனது ஸ்வப ஸ்வரூபத்தை அறிவாய். குழந்தைப் பருவமுதல் பள்ளனென்றும் பறையனென்றும் கற்பிக்கப் பட்டு வெறுப்பாகிய பழக்கத்தில் பட்டாய். அது உன்னைப் பற்றிக் கொண்டது. நீ நித்தியாநந்த முக்தியை விரும்புவது வாஸ்தவமானால் இந்த நிமிஷம் முதல் சர்வ சமரஸ திடநிச்சயத்தை பொருந்திருப்பாய்.

சிவோஹம், சிவோஹம் என்று இடைவிடாமல் சொல்லியும் சிந்தித்தும் ஈற்றில் சிவஸ்வரூபமாயிருப்பாய். நீ சிவமே. ஜீவன் என்று உன்னை நீ சொல்லிக் கொள்வது மயக்கத்தினால், மாயையினால், வீண்பிரமையினால், ஜீவனென்ற கற்பனையை விட்டு சிவமாக விளங்குவாய். இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் தோணியானது கரை சேர்ந்து விட்டது. குருவும் சிஷ்யனும் அடியார்களும் இறங்கினார்கள். கால்நடையாய் யாத்திரை போகிறார்கள். ஓர் தேசத்தில் ஓர் சாவடியில் குரு, சமாதியிலிருக்கிறார். அடுத்த பட்ட

ணத்து வியாபாரிகளாகிய இரண்டு தனவான்கள் இம்மகா
னின் தரிசனார்த்தம் வந்து காத்துக்கொண்டிருந்தார்கள்.
வெகுநேரம் கழித்து, உலக உணர்ச்சி பெற்றார். தனவான்
கள் இருவரும் ஓர் பெரியதட்டில் கற்கண்டு, சீனி, பழவர்க்
கங்களுடன் ஓர் பையில் 500 ரூபாயும் வைத்து அவரது
பாதத்தில் விழுந்து 'ஸ்வாமீ! எங்களது அருமையான
செல்வக் குழந்தையொன்று இறக்குந் தறுவாயில் இருக்
கின்றது. என்னசெய்தும் பிழைக்குமாறில்லை. நிவர்த்தி
சொல்லும் வள்ளுவர்களிடம் கேட்டோம். தங்கள் தரி
சனத்தாலன்றி வேறெவ்விதத்தாலும் பிழைக்காதென்றும்
சொல்லிவிட்டார்கள். ஆகையால்இந்தப்பையிலிருக்கும் 500
ரூபாயும் தாங்கள் அவ்விடம் வருவதற்காக. எங்களது
கிரகத்தில் தங்களது பாத தூளிபட்டவுடன் எதுகேட்டா
லும் தருவோம். எங்கள் உயிர்கள் கேட்டாலும் தரு
வோம். எங்கள் குழந்தைக்கு சஞ்சீவியே! அடியேன்கள்
மீது சற்று கிருபைபாவித்து எங்கள் கிரகத்துக்கு எழு
ந்தருளப் பிரார்த்திக்கின்றோம், என்றார்கள்.

குரு:—(புன்னகையுடன்) நீங்கள் இந்தப் பணமாகிய
சங்கிலியிட்டு என்னைப் பிணைத்துக் கட்டி ஈர்த்துக்கொண்டு
போய் விடலாமென்று இவ்விடம் வந்து மோசம் போய்விட்
டீர்கள். ஈரேழு பதினாலு உலகங்கட்கும் ஏகசக்ராதி பதி
யாய் யிருக்கப் பட்டவன் மகாமேரு பர்வதத்திற்கும்
மேலாக பொன் குவித்தாலும் இங்கிருந்து சரீர வியாதிக்கு
ஔஷதம் கொடுக்கும் பொருட்டு செல்லோம். சரீர சம்
மந்த மனவியாதிகள் நிவாரணார்த்தம் வைத்திய சாஸ்திரங்க
ளும் வைத்திய சாஸ்திரிகளும் இருக்கின்றனர். அங்குசெல்
லலாம். சுற்றத்துணியும் உண்ணச்சோறும் இல்லாமல் வறு
மையே கீர்த்தியாக கொண்டவர்களாயினும் சரி, ஆவுரித்

துத் தின்றுழலும் புலையரேனும் சரி, எவர்கள் ஜனன மாணமாகிய கொடிய வியாதியினுல் உண்மையாக வருந்து வார்களோ அவர்களது ஓட்டைக் குடிசைக்கு அவர்களைத் தேடி வெகு குதூகலத்துடன் வைத்தியம் செய்வதற்கு நான் எப்பொழுதும் தயாரா யிருக்கிறேன். "சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து தரணியோடு வானுள தருவரே னும் மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லேம்" என்று கண்ணை மூடிவிட்டார். அவர்கள் அவரது பக்கத்தில் இருந்த திருநீற்றுப் பையினின்றும் கொஞ்சம் திருநீறு எடுத்துக் கொண்டு மிகமனவருத்தத்துடன் திரும்பி விட் டார்கள்.

சிஷ்யன் :—இவைகளை யெல்லாம் கவனித்து குருவை வலம் வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து அவரது மகாத் மியத்தைப் புகழ்ந்து கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். ஓர் நாள் சிஷ்யனும் குருவுமாக தங்களது பூர்வ சரித்திரங் களை ஒருவர்க் கொருவர் ரகஸ்யமாக சம்பாஷித்து விட்டு பிறகு சிஷ்யன் :—

எந்த ஜனனமரண வியாதிக்கும் சஞ்சீவியாய் எழுந் தருளியிருக்கும் சற்குருவே! மேகசப்தத்தைக் கேட்டு உஷ் ணம் நீங்கி களிப்புற்று சிரகை விரித்தாடும் மயிலைப்போல தங்களது ஆனந்தாமிர்த வசனங்களைக் கேட்டு நான்மகிழ் ச்சி யடைகின்றேன். எந்தன் உள்ளம் பூரிக்கின்றது. அன் றைய தினம் ஜாதி மதாசாரங் கட்கும் மோட்சத்திற்கும் யாதொரு சம்மந்தம் இல்லை யென்று திருவாய் மலர்ந்தருளி னீர்கள். ஆயின் ஜாதி மதபேதம்முமூட்சுவுக்கு மாத்திரமே அவசியம் இல்லையோ? அல்லது உலகத்தவருக்கே பொது வாக அவசியம் இல்லையோ? இன்னும் பேதசகிதமே பிர

பஞ்சமென்றும் பேதாகிதமே பிரமவஸ்து வென்றும் தங்களிட மிருந்தே நான் கிரகித் திருக்கின்றேன். ஆதலால் வியவகாரம் இன்றி உலகம் எங்ஙன மிருத்தல் கூடும்?

குரு :—மனைவியானவள் கிள்ளியும் கடித்தும் இம்சை செய்ப இவ்விம்சைகள் அன்புள்ள கணவனுக்கு ஆனந்தமாம் போல, நினது நெருங்கிய கேள்விகளினால் நான் ஆனந்திக்கின்றேன். பேதாகிதமே பரமவஸ்து வென்று நீ உணர்ந்தாயன்றோ? ஆகையால்தான் பிரம வஸ்துவை யடைவதற்கு முயற்சிக்கும் முமுட்சுவாகிய உனக்கே ஜாதிமதாசார அத்தியந்த தூஷணம் கூறினேம். உலகத்தவர்க்கு அவ்வனமல்ல. இப்பிரபஞ்ச சிருஷ்டியில் ஒருமுகத்தைப் போல வேறோர்முகம் காணமுடியாது. ஒருவர் தொனியைப்போல் வேறொருவர் தொனியில்லை. ஒருவர் நடையைப் போல் வேறொருவர் நடையில்லை. பார்ப்ப தெல்லாம் வித்தியாசமே. ஆகையால் பேதானுஷ்டான மின்றி உலகத்தவர் யிருக்க முடியாது என்பது திண்ணம். உலகம் முழுவதும் பேதானுஷ்டானத்தை எப்பொழுது கைவிட்டார்களோ அப்பொழுதே பிரபஞ்சம் தூளாகி அழிந்துவிடும். பிரபஞ்சத்தின் உயிர்நிலை பேதானுஷ்டானத்திலேயே. பேதானுஷ்டான மிலதேல் பிரபஞ்சம் நிலைகலங்கும். கலக்கத்திற்கும் குழப்பத்திற்கும் காரணமாம். பலவகையான பேதத்திலேயே உலகத்தவர்க்கு இன்பமாம். பலவகைப் பட்ட ராகங்களே சங்கீதமெனப் பெயர் பெற்று இன்பங் கொடுக்கும். பலவகைப் பட்ட கறிபதார்த்தங்களே ருசியாம். பலவகைப் பட்ட செடி கொடிகளே காட்சியாம். பலவகைப்பட்ட நிறங்களே அழகாம். பேதமே உலகத்தைக் கட்டி பிரிந்து போகாமல் அடக்கி யாளுகின்றது. அமெரிக்கா, யூரோப்பு, என்ற நாகரீகத்தில் முதிர்ச்சி

யடைந்ததாக பாவிக்கப்பட்ட கண்டங்களில் ஜாதி பேத மில்லை யென்று அவர்கள் சொன்னபோதிலும், அவ்விடங் களில் தான் பெரும்பாலருடைய நிந்தனைக்குப் பாத்திரமாக பணத்தினுலும் நிறத்தினுலும் வகுக்கப்பட்டு ஜாதி பேத மானது மகா பயங்கர ரூபத்துடன் விளங்குகின்றது. பிர பஞ்ச திருஷ்டி யுள்ளவர்கள் பிரிவுபடாமல் இருக்க முடி யாது. இப்புண்ணிய பூமியாகிய பாரத வருஷத்தில் தற் காலத்தில் ஜாதி விஷயத்தைப் பற்றி இரண்டு கட்சிகள் இருக்கின்றன. ஒன்று ஜாதியின் ஆசாரங்கள் அவசியம் கவனிக்கப்பட வேண்டுமென்றும் எல்லா ஜாதியாரும் பிரா மணர் எனப்படுவோருக்கு முறையே படிப் படியாய் தாழ்ந் தவர்களென்றும் பிடிவாதம் செய்யும் புராதனக்கொள்கை களையுடையார். மற்றொரு ஜாதியாவது ஆசாரமாவது. இந்த ஜாதியாசாரமே நமது நாட்டை இன்னிலைக்குக் கொண்டுவந்து விட்டது. ஆகையால் ஜாதி யென்ற வார் த்தையைக் கூட நினையாமல் எல்லோரும் ஏகபோகமாய் ஒரே பந்தியில் உட்கார்ந்து (அதைவிட) ஒரே இலையில் உட் கார்ந்து சாப்பிட்டு நினைத்த பெண்டுகளை கைக்கொண்டு சுகமாய் வாழ்ந்தாலே (இது எத்தகையசுகமோ) நமது நாடு முன்னிலையில் வரும் என்று நவீனக்கொள்கைகளையுடை யோர் இங்ஙனம் இரண்டு கட்சிகள் ஏற்பட்டு நமது தேச மானது நிலை குலைந்து தத்தளித்து தடுமாறுகின்றது. இவ் விரண்டு கட்சிகளும் நமது ராஜ்ஜியத்தை இன்னும் கெடுக் கத்தான் முடியுமே யொழிய ஓர் பொழுதும் முன்னுக்குக் கொண்டுவர முடியாது. இரண்டு கட்சிகளும் பட்சவாதிகள். நடு நிலமையைச் சேராதவர்கள். காக்கைக்கு இரண்டு கண் களிருந்தும் ஒற்றை பார்வையே போல் யுள்ளவர்கள் ஜாதி பேதம் வேண்டுமென்று சொல்பவர்கள் தேசத்தை அசைய

வொட்டாமல் மூச்சை பிடித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். ஜாதிபேதம் வேண்டாமென்று சொல்பவர்கள் தேசத்தை ஒரே ஆட்டாய் ஆட்டி வேறுடன் பிடுங்கி எறிந்து விடப் பார்க்கிறார்கள். இவ்விருவர்களாலும் தேசம் நாசமே! இனிமேல் ஜாதி தத்துவத்தை கூறுவேன் ஞானபுத்திரா! சாத்துவீக, ராஜஸ, தாமசகுணங்களினால் மானிடர் நடத்தைகளிலும் தொழில்களிலும் வேறுபட்டு நான்கு வகுப்பாக பிரிக்கப் பட்டார்கள். மகா சாத்வீகர்களும் பிரம்ம ஞானுபிதிக் பிராமணக், என்றபடி பிரம்ம ஞானிகளாய் "சர்வ உலோகங்களும் சுகமடையட்டும்" என்ற ஒரே வாழ்த்து தலையுடைய வர்களாய் உலகத்தவர் எல்லோரும் உள்ளதை பிரம்மபதத்தை தங்களைப் போலவே அடைந்து ஆனந்திக்கும் பொருட்டு அவர்களுக்கு ஹிதோப் தேசம் செய்வதே கங்கணமாகக் கொண்ட ஜீவகாருண்ய சொரூபிகளாய் சதாபிரம்மனிஷ்டர்களாய் பிரகாசிப்பவர்களே பிராமணர்கள். இவர்களே ஈச்வரனுக்குச் சமானமானவர்கள் நன்மை தீமைகளை ஆராயும்படியான சக்திபிருந்தும் ஒன்றே. இவர்களே ஈச்வர ஸ்தானத்தில் ஆராதிக்கத் தகுந்தவர்கள். இன்னமும் கேட்பாய் மகனே! மகாபலிஷ்டர்களாய் யுத்தப் பிரியர்களாய், துஷ்ட நிக்கிர சிஷ்ட பரிபாலனமே கையில் கங்கணமாகக் கொண்டவர்களாய் ரத்த வெள்ளத்தில் நீந்தும் தீரர்களாய், நடு நிலைமையை அனுசரிப்பவர்களாய், நியாயா நியாயங்களை விசாரித்து செங்கோல் புரியும் சிமான்களோ க்ஷத்திரியர் எனப் படுவோர். சுயம் பிரகாசசைதன்னிய வஸ்துவானது தானும் பிரகாசித்து மற்ற வஸ்துகட்கும் பிரகாசத்தை கொடுப்பதுபோல இந்த க்ஷத்திரியர் தாங்களும் சுவாதந்திரியஸ்தர்களாய் உலகத்திலுள்ள மற்ற ஜீவராசிகளும் அன்யோன்ய ஹிம்சைக்கு இட

மில்லாமல் பூர்ண சுவாதந்தரியத்தை யனுபவிக்கும்படி செய்து பட்சபாத மில்லாமல் சகலரையும் ஏகமாய்ப் பார்ப் பார்கள். தவிர, கைத்தொழில் வியாபாரம் இவைகளை கைக்கொண்டு நிராசையுடன் சூது வாது கபட வஞ்சனை முதலியவை களில்லாமல் தனசேகர்களா யிருப்போர் வைசியராகும்.

அவர்களிடத்திலேயே தனலட்சுமி குடிகொண்டிருப் பாள். இவர்களே ராஜ்ஜியத்திற்கு கோட்டை போன்ற வர்கள். இவர்களே லோகமாதா எனப்பட்டு மகா சாந்தஸ் வரூபியாகி ஆரிய சிரேஷ்டர்களால் பூஜிக்கப்பெற்று தர்ம தேவதையாய் விளங்கும் பசுவினங்களைப்பரிபாலிப்பவர்கள். தினந்தோறும் இப்பசு பரிபாலனத்தாலேயே இவர்களது செல்வமானது வளர்பிறைச் சந்திரனைப்போல ஓங்கி வள ரும். இன்னும் மற்ற சில்லறைத் தொழில்களைச் செய்பவரும் பிரம்ஞ்ஞானிகட்கும் செங்கோலரசருக்கும் பசுபரிபாலன வியாபாரிகட்கும் வேண்டும் உதவிகளைச் செய்து அவர் களால் பராமரிக்கப் படுவோரும் சூத்திர ரெனப்படுவார். இவர்களே ரதத்தை உறுதிப்படுத்தும் மிகவும் சிறிய ஆணி போன்றவர்கள். இவர்களது உதவியாலேயே உலகம் சீராய் நடைபெறும். இவ்விதமாக, சற்புத்திரர், ஜாதி நான்காகப் பிரிவுபட்டது. இப்பிரிவுகள் நமது நாட்டில் மாத்திரமல்ல, உலகமெங்கும் உண்டு. ஆனால் நமது நாட்டில் வெளித் தோற்றத்திலேயே பிரிவுபட்டன. எத்தனையோ தேசங் களின் கீர்த்திப் பிரதாபம் சிலகாலம் உயர்ந்திருந்து இப் பொழுது இருந்தவிடம் தெரியாமல் போய்விட்டது. சர்வ சாட்சியாகிய நித்திய வஸ்துவைப்போல நமது நாடானது எத்தனையோ தேசங்கள் உண்டாகி அழிந்து போயும் எத் தனையோ ஜன சமூகங்கள் வெகு உயரப்பறந்து உடனே

இறந்தும் இவைகளுக் கெல்லாம் சாட்சியாய் நின்று இவ்வ ளவு தாழ்ந்த இழிவான நிலைமைக்கு வந்தும் இன்னும் அட் சயமான கீர்த்தியை யுடையதாய் ஜ்வலிக்கின்றது. இதற் குக் காரணம் ஜாதிமுதலிய அசைவற்ற அஸ்திவாரங்களின் மேல் நமது நாடு கட்டப்பட் டிருப்பதே தற்காலத்திய இழிந்த நிலைமைக்குக் காரணம்:—வாஸ்தவஸ்வ ரூபத்தை முக்கியமாய் நினையாமல் வெளிவேஷத்தை பிரமாதமாய்ப் பாராட்டுதலினாலேயே பிரமஞ்ஞானமானது லவலேசமு மில்லாமல் பிரமை ஞானமே மும்முரமாய் தொடுதல், சாப் பாடு, பீசை முதலிய மிகவும் அதி நுட்பமான தத்துவ விசாரமுடையவர்களா யிருக்கிறார்கள். தற்காலத்திய பிரா மணர்கள் இப்போதிய க்ஷத்திரியர்களோ.................. இப்போதிய வைசியர்களோ தானம், தருமம், கோரட்சை முதலிய சத்கருமங்களைக் கைவிட்டுவிட்டார்கள். இங்ஙனம் தலை கீழா யதினாலேயே நமது ஆரியாவர்த்தம் இந்நிலை மைக்கு வந்தது. எனது அருமையான ஞானபுத்திரா, இது வரை ஜாதிபேதத்தின் ஆவசியகத்தைப் பற்றிச் சொன் னேன். இன்னம் கேள், ஜாதிபேதமானது அவசியமே; ஒவ்வொருவனும் தனித்தனியே ஒவ்வொரு ஜாதியாயிருக் கட்டும், பாதகம் இல்லை; ஓர் ஜாதி உயர்ந்த தென்றும் ஓர் ஜாதி தாழ்ந்ததென்றும் சொல்லுவது பொறாமை, ஆசை, கலகம் இவைகளுக்குக் காரணமாம். ஒரு சமுதாய மானது க்ஷேமமாய் வாழவேண்டுமென்றால் எல்லாத் தொழி லாளிகளும் அவசியம் எங்ஙனம் ஓர்வீடு கட்டுவதற்கு செங்கல், சுண்ணாம்பு, மரம், தச்சன், கொல்லன் கொற்றன் முதலிய சகலமும் வேண்டுமோ அதுபோல் ஓர் ஜன சமு தாயத்தைக் கட்டுவதற்கு பிராமணன் முதல் பறையன்வரை சகலரும் வேண்டும். நாம் ஜனசமுதாயத்தை ஓர் சரீரத்

திற்கு ஒப்பிடுவோம். எங்ஙனம் கை, கால், கண், மூக்கு, செவிமுதலிய சகல அவயவங்களும் சீராய் அமைந்துள்ள ஓர் சரீரத்தை அழகுள்ளதென்று சொல்லுவோமோ அங்ஙனமே சகல தொழிலாளிகளும் சீராய் நிறைந்த ஓர் ஜனசமுதாயத்தை ஆரோக்கியகர மானதென்றும் அலங்காரமானதென்றும் சொல்லலாம். இச்சரீர உவமான நியாயத்தை முன்னிட்டே பிரமாவினுடைய முகத்திலிருந்து பிராமணருண்டானரென்றும் புஜத்திலிருந்து க்ஷத்திரியர் உண்டானரென்றும் இடையிலிருந்து வைசியர் உண்டானரென்றும் பாதத்திலிருந்து சூத்ரர் உண்டானரென்றும் சில உத்தம ஸ்மிருதிகளில் கூறுவது. அதாவது ஓர் ஜனசமுதாயத்திற்கு அழகிய ஞானேந்திரியங்களமைந்த முகம்போன்றவர்கள் பிரமஞ்ஞானிகளாகிய பிராமணர்களென்றும் சௌரிய பலஸ்தானமாகிய புஜம்போன்றவர்கள் க்ஷத்திரியர்களென்றும் ஓர் நிலையில் நிறுத்துவதற்கு அவசியமாய் இருக்கின்ற இடைபோன்றவர்கள் வைசியர்களென்றும் சரீரம் முழுவதையும் தாங்குவதற்கும் சரீரத்தைக் கொண்டுசெல்வதற்கும் இன்றியமையாமலிருக்கின்ற பாதம்போன்றவர்கள் சில்லரைத் தொழிலாளிகளாயும் தாழ்ந்த ஜாதியாரெனவுங் கருதப்பட்டுமிருக்கின்ற சூத்திரர்களென்றும் அர்த்தம்: களங்காரகிதமான மைந்தா, இன்னும் கேட்பாய்: ஓர் சரீரத்தில் எல்லா அவயவங்களிலும் சிறந்தது எது? எல்லா அவயவங்களிலும் இழிவானது எது? ஓர் அவயவத்தைவிட இன்னொரு அவயவம் சிறந்தது என்பது மிக மூடக்கொள்கையாம். சரீரத்தின் அமைப்பிற்கும் லக்ஷணத்திற்கும் ஆரோக்கியத்திற்கும் ஒவ்வொரு அவயவமும் இன்றியமையாததேயாம். குதத்வாரத்தின் வழியாக மலவிசர்சனம் செய்தலால் அப்பாகம் இழிந்ததென்றும் அருவருக்கத்தக்

கடுதென்றும் ஒருவரும் அப்பாகத்தை வெட்டியெறிந்து விட காண்கிலேன். குதத்வாரம் அடைத்துக்கொண்டு மலபாதை யாகாவிட்டால் ப்ராணஹானியாம். ஆகையால் குதத்வார மும் அதன் தொழிலில் மிகச்சிறந்ததாகும். அதுபோன்றே ஓர் ஜனசமுதாயத்தில் அதின் பற்பல அவயவங்களாகிய பற்பல ஜாதிகளும் அவ்வவற்றின் தொழில்களின் முறை யே சிரேஷ்டமாம். பிராமணருக்கு ப்ரம்மக்ஞானத்தி லும் லோக உபகார கைங்கர்யத்திலும் எவ்வளவு சிரேஷ் டத்வம் உண்டோ அவ்வளவும் நன்குமதிப்பு. நாவிதனுக் கும் வண்ணானுக்கும் பறையனுக்கும் அவரவர்களது குற்ற மற்ற தொழில்களினால் ஏற்படும் ஒருவன் உன்னைத் தடி கொண்டடிக்க வந்தால் உனதிரண்டு கைகளும் உடனே ஜாக்கிரதையாகித் தடுக்கின்றன. உனதிரண்டு கால்களும் தப்பித்துக்கொள்ளும்படி உனது சரீரத்தைச் சுமந்து கொண்டு ஓடுகின்றன. உனது செவிகள் அவனது ஓசையை கவனிக்கின்றன. உனது கண்கள் தப்பித்துக்கொள்ளும் மார்க்கம் காட்டுகின்றன. அதுபோலவே ஓர் ஜனசமுதா யத்திலும் கனவில் தானே அடிப்பானென்று மற்ற அவய வங்கள் சும்மா யிராததுபோல் ஓர் ஜாதியாருக்கு நேரிடும் துன்பங்களினின்றும் ரக்ஷிக்கப்பட மற்ற எல்லா ஜாதியாரும் ஒன்றுசேர்ந்து அவரவர்களால் இயன்ற உதவி புரியவேண் டும். இதுதான் ஜனசமுதாய நியாயம். காலில் முள் தைத்தால் கண்களினின்றும் கண்ணீர் பெருகுகின்றது. இரண்டு கைகளும் அம்முள்ளைப் பிடுங்குவதில் வேலைசெய் கின்றன. அதுபோலவே ஜனசமுதாயச் சரீரத்தில் ஓர் ஜாதியாருக்கு ஹானி நேரிட்டால் மற்ற அவயவங்களாகிய சகல ஜாதியாரும் வருத்தமுற்று உடனே அத்துன்பத்தை நிவர்த்திக்க வேண்டும். எங்ஙனம் காலில் தூர்நீர்வைத்து

கால்வீங்கி யிருக்கும் பொழுது காலிற்தானே வியாதி யென்று சிகிச்சை செய்யாமல் சும்மாயிருந்துவிட்டால் அவ் வியாதியானது வரவர சரீரமெங்கும் பாவி மரணத்தைத் தருமோ அங்ஙனமே நாவித ஜாதியாருக்கு ஓர் கெடுதி நேரிட்டகாலத்தில் நாவிதருக்குத் தானே கெடுதியென்று அதை நிவர்த்திக்காமல் சும்மா யிருந்துவிட்டால் அக்கெடுதி ஜனசமுதாயம் முழுவதும் பாவி ஜனசமுதாயத்தை நாசஞ் செய்யும்.

கையைச் சிறந்ததாக நினைத்து அதை புஷ்டிப்படுத்த விரும்பி மற்ற அவயவங்கட்கு ரத்த ஓட்டத்தை நிறுத்தி கையிலேயே ரத்தமதிகரிக்கச் செய்தால் கையில்க ரத்தம் கட்டிக்கொண்டு வியாதியாகி சரீர நாசத்திற் கிடமாகும். அதுபோலவே ஓர் ஜாதியை சிரேஷ்டமென்றும் மற்ற ஜாதி களுக்குள் அறிவையும் மதிப்பையும் திரவியத்தையும் பரவ விடாமல் அந்த சிறந்த ஜாதிக்கே எல்லா அறிவையும் மதிப்பையும் திரவியத்தையும் கொடுத்தால் அந்த ஜாதி யாருள் மூளைக்குழப்பமும் வீண் கெர்வமும், டம்பமும், குடிகொண்டு அந்த ஜனசமுதாயத்தையே நாசஞ்செய்யும். ஆகையால் புத்தியிற் சிறந்த புத்திரா, ஒவ்வொரு ஜாதியும் அவ்வவற்றிற்குரிய தன்மதிப்பை உடைத்தாயிருக்கின்றனர். எல்லாம் ஒருபடித்தே ஒன்றுக்கொன்று உயர்ந்ததுமில்லை தாழ்ந்ததுமில்லை. இன்னும் நமது ராஜ்யத்தில் சில ஜாதியா ரைத் தாழ்ந்தவர்களென்று கவனியாமலும் வெறுத்துமிருந் ததினால் தான் நமது நாடு இந்நிலைமைக்கு வந்தது. செருப் புத் தைக்கும் சக்கிலியனையும் வஸ்திரங்களின் அழுக்கை நீக் கும் வண்ணானையும், க்ஷவரம் செய்யும் நாவிதனையும், கலப்பை எடுத்து உழுது பயிர்செய்யும் புலையனையும் இன்னுமநேக ரையும் தாழ்ந்தவர்களென்று சொன்னதினால் அவர்கள்

அவர்களது புராதனத் தொழில்களைக் கைவிட்டு நவீன வித்யாப்பியாச நாகரீகத்தாலோ அல்லது அன்னிய மதங்களில் பிரவேசித்தலாலோ அல்லது வேறு எவ்விதத்திலாவது உயர்வையடைய இச்சிக்கிறார்கள். தாழ்ந்தவனென்று கருதப்படுபவன் உயர்வைபடைய இச்சித்து முயற்சி செய்வான் என்பதுபிரபஞ்ச இயற்கையே. இது நியாயமே! ஆகையால் நமது நாட்டுத் தொழில்கள் கைவிடப்பட்டு நமது ஜனசமுதாய சங்கியையும் நாளுக்குநாள் குறைந்து வருகிறது. ஸ்ரீகிருஷ்ண பகவானது குணங்களை அநுசரித்தும், கர்மங்களை அநுசரித்தும் ஜாதி பிரிவுபட்டது. என்ற வேதவாக்கியத்தை கிஞ்சித்தேனும் நெஞ்சிற் பற்றாமல் பிறப்பினால் ஜாதியைஸ்தாபிக்கும் பேதைதனால் நன்னாடாகிய இந்நாடு கெட்டு அழிந்தது ; இப்பொழுது ஜாதியில் உயர்வு தாழ்வு இல்லையென்றும் ஒவ்வொரு ஜாதியும் மற்ற ஜாதிகளால் சமமாய் நான்குமதிக்கப்பட வேண்டுமென்றும் சொன்னேன். இன்னும் விவாக விஷயத்தைப் பற்றியும். சாப்பாடு விஷயத்தைப்பற்றியும் அவரவர்களது இட்டத்தைப் பொருத்ததென்று என்னபிப்பிராயம். இன்னும் கவனிப்பாய் மகனே, அந்தந்த ஜாதியார் அந்தந்தத் தொழில்களையே செய்துவரவேண்டும். அப்பொழுதுதான் தொழிலிற் தேற்சியுண்டாகும். ஆகையால் ஜாதிபேதம் அவசியமென்றும் ஆனால் உயர்வு தாழ்வு இல்லையென்றும் சமரசமாகக் கருதப்படவேண்டு மென்றும் விவாகபோஜன விஷயங்களில் கலக்கவேண்டு மென்பது கலகத்திற்குக் காரணமாகும். ஆதலால் இஷ்டத்தைப் பொருத்ததென்றும் சொன்னேன். நிர்மல புத்திரா, இன்றைதினம் ஜனசமுதாய ஒற்றுமைக்கும் நன்னடக்கைக்கும் மிகவும் அவசியமான உலக தத்துவங்களில் ஒன்றை நீ கேட்பாய்: இத்தத்துவாக

சியத்தை நீ சற்றும் பயமில்லாமல் பின்வாங்காமல் உலக நன்மையின்பொருட்டு பரவச்செய்வாய். பறையடிப்பாய். சாக்ஷாத் பரமசிவமாகிய உனக்குள் அந்தற்பூதமா யிருந்து வெகுவிசித்திர லீலைகளை நடத்தும் மகா மாயையின் பிரபஞ்ச முன்னதே யாகையால் பிரஞ்சத்தினது நன்மைக்கும் தீமைக்கும் நீயே எஜமானன். நீ மகத்துக்கும் மகத்தானவன். அணுவுக்கு அணுவினவன். நீ சர்வசுவதந்திரன், சர்வவியாபகன். சர்வாந்தர்யாமி, நீயே சிவம், சிவமே நீ, தத்வமசி சிவோகம் சிவோஹம் என்று இடைவிடாமல் திரிகரணங்களாலும் சிந்திப்பாய் என்று வெகுநேரமாகிவிட்டபடியால் ஸ்தானத்திற்கு எழுந்தருளிவிட்டார். சிலகாலம் குருவானவர் ஓர் மலையி னடிவாரத்தில் வாசம்பண்ணினர். அங்கும் ஓர் சிவக்ஷேத்திரமுண்டு. சர்வ பாப விமோசனம் செய்யும் மூர்த்தி யென்றும் அங்குள்ள அருவித்தீர்த்தம் மகா புண்ணிய தீர்த்தமென்றும் தினந்தோறும் ஆயிரக்கணக்காக யாத்திரிகர்கள் வருவதுணடு. ஓர்நாள் குருவும் சிஷ்யனும் சில அடியார்களுமாக மலையின்மேலேறி காக்ஷியின் ரமணீகரத்தைப் பார்த்து மாயையின் வல்லமையை வியக்க விரும்பி சென்றார்கள். அங்கு ஓர் பெரிய குகைக்குள் எல்லோரும் நுழைந்தார்கள். சிஷ்யன் அவர்களினின்று சற்று பிரிந்து சிருஷ்டி மகிமைகளை சிந்தித்துக்கொண்டிருந்தான். சற்று நேரத்திற்குப் பின் அக்குகைக்குள் தானும் நுழைந்தான். இதற்குமுன் குகையே பார்த்தறியாதவனகையால் தலை குனியாமல் எப்பொழுதும்போலச் சென்றான். தலையில் பட்டென்று அக்குகையின்மேல்வரப் பாறையானது பட்டு ரத்தம் விட்டது. குருவானவர் பார்த்து அப்பனே! எனது ஞானக் கண்மணியே! எப்பொழுது வணக்கம் வேண்டுமென்னும் நீதியை மறந்தாய்? தலை நிமிர்ந்திருந்ததினல்

இப்படி நேரிட்டது. நிமிர்ந்து ஆகாயம் அளாவிப்போகும் பெரிய விருக்ஷங்கள் ஓர் பெரும் புசல் காற்றடித்தால் எதிர்த்து நிற்பதற்கு வல்மையில்லாமல் திடீரென்று ஒடிந்து விழுந்து நாசத்தை யடையும். நிற்பதற்குக்கூட திராணி யில்லாமல் வளரும் சிறிய புற்கள் எப்பேர்ப்பட்ட திரி லோகங்களையும் அசைத்து ஆட்டவல்ல பிரசண்டமாருதத் திற்கும் சிறிதுமழியாமல் தலை குனிந்து கொடுத்து அம் மாருதம் நீங்கியபின்னர் முன்போல நிற்கும் ஆகையால். எப்பொழுதும் வணக்கமே, தாழ்மையே, அடக்கமே அணி கலனுகக் கொண்டாரிடத்தேதான் சாக்ஷாத் பரமேச்வர னுடைய கிருபை யுண்டாகும். மேகங்கள் உன்னதபர்வத சிகரங்களில் வர்ஷித்தாலு மெங்கே பள்ளமிருக்கிறதென்று தண்ணீரானது தேடிக்கொண்டு வந்து பள்ளத்திலேயே தங்கும். அதுபோல சாக்ஷாத் சர்வலோக சரண்யனு டைய கிருபா மேகமானது வணங்காமுடி யுடையோ ரிடத்து இறங்குவதாகத் தோற்றினும் அவர்களிடத்தி னின்றும உடனே நீங்கிப் பகவானது கருணைப்பிரவாக மானது வணக்கமுள்ளவர்களெங்கே தாழ்மையுள்ளவர்க ளெங்கே யென்று தேடிக்கொண்டு வந்து மகா சாந்தஸ்வ ரூபிகளாகிய மகான்களிடத்தில் என்றைக்கும் தங்கும். ஆதலால் சர்வ அனர்த்தங்களினின்றும் நீக்கி சாயுச்யபத சாம்ப்ராஜ்யத்தை அருள்வதற்கு வணக்கமே முற்பட்ட குணமாம். வணங்காமுடிவேந்தன் எனப் பெயர்பெற்ற துரியோதனனது முடிவை யோசித்துப்பார். இதுவே வணங் காமுடியோர்கள் வாழ்வை யடையார்கள் என்பதற்குப் போதுமான திருஷ்டாந்தமாம். அருமையான புத்திரனே! இனிமேல் சதா வணக்கத்துடனிருப்பாய். பிபீலிகாதி பிரம்மபரியந்தம் உள்ளும் புறமும் வணக்கம் செய்வாய்.

நீ உலகத்தினிடத்தில் எப்படியோ அப்படியே உலகம் உன்னிடத்தில் என்பதுபோல் தத்துவரகசியம். ஒலிக்கெதிரொலிபோல் நீ உலகத்தைப் பகைத்தால் உலகமும் உன்னைப் பகைக்கும். நீ உலகத்தினிடத்தில் பிரியம் பாராட்டினால் உலகம் உன்னிடத்தில் பிரியம் பாராட்டும். நீயே உலகமாயிருப்பதால் உன்னைத்தவிர இரண்டாவது வஸ்து இல்லாததால் ஏகமாகிய உன்னையே நீ இரண்டாயும் பலவாயும் பிரித்து வைத்துக்கொண்டிருப்பதால் உன்னுடைய கர்வமோ அல்லது வணக்கமோ உனக்கே உலகத்தால் திருப்பிக்காட்டப்படுகின்றன. உன்னிடத்தினின்று எழுந்துபாவும் ஒவ்வோர் எண்ணங்களும் சுற்றிச் சுற்றிப்பார்த்து உன்னைத் தவிர வேறொன்றையும் காணாததால் எங்கும் எல்லாம் நீயாயிருப்பதால் உன்னிடத்திலேயே வந்து முடிவுறும். தன் வினை தன்னைச்சுடும். நீ உலகத்திற்கு வணங்கினால் உலகம் உன க்குவணங்கும். ஆகையால்தான் சாந்தமூர்த்திகளாய் வணக்கமே கவசமாகப்பூண்ட மகான்களின் பாதாரவிந்தங்களின் திரிலோகமும் விழுந்துசேவிப்பது. ஆகையால், மகனே! வணக்கத்தைக் கைக்கொள்வாய்.

சிஷ்யன்:—சுவாமி ஞானதேசிகனே, நீயே உலகம், உலகமே நீ யென்பதாக அடிக்கடி சொல்லுகிறீர்கள். நான் வேறு உலகம் வேறு என்று எனது ப்ரத்யக்ஷானுபவத்தில் நான் தினந்தோறும் கண்டுகொண்டிருக்க, நானும் உலகமும் ஒன்றாயிருப்பது எங்ஙனம்.

குரு:—சிஷ்ய சிரேஷ்டனே கேட்பாய்: நான் எனது சிறு பிராயத்தில் ஓர் அற்புதமான கனவு கண்டேன். அது வெகு விநோதமானது. இயற்கைக்கு விரோதமானது. அது என்னவென்றால், நான் ஒரு சிறு தோணியிலேறிக்கொண்டு ஓர் ஆற்றை அக்கரை கடக்கவேண்டி அத்தோணியில்

வேறொருவருமின்றி நானொருவனாகவே தோணியைத் தள்ளிக்கொண்டு போகையில் எனக்கு பேதி கண்டுவிட்டது. வயிற்றாலும் வாயாலும் கக்கினதால் நானே அடிக்கடி சுத்தம் செய்துகொண்டேன். காற்றில் அலைந்து தண்ணீரில் மூழ்கிவிடாமல் தோணியைத் தள்ளிக்கொண்டிருந்தேன். நானே பேதியுபத்திரவத்தினால் அவஸ்தைப் பட்டேன். சுத்தம் செய்துகொண்டேன். சிறிதுநேரம் கழித்து தங்கமுடியாமல் நான் இறந்தேன். என்னுடைய மரணத்தைக் குறித்து நான் வாய்விட்டலறி யழுதேன். தோணியில் பிணத்தைப் போட்டுக்கொண்டு தகனகிரியை செய்ய விரும்பி அக்கரை சேர்ந்தேன். நானே பிணத்தை மயானக்கரைக்கு சுமந்துகொண்டு போனேன். கட்டை முட்டைகளை அடுக்கி எனது பிணத்தை நானே தூக்கி, எடுத்து வைத்து வாய்க்கரிசியிட்டு வெகுவாய்ப்பிரலாபித்து, ஐயோ! இன்றோடு எனது வாழ்நாள் முடிந்ததேயென்று அழுது தீ மூட்டினேன். நான் பாதி வெந்துகொண்டிருக்கையில் சூடு பொருக்கமுடியாமல் புறண்டேன். நான் படுத்திருந்த கட்டிலினின்றும் கீழே விழுந்தேன். கண்ணை விழித்தேன். நன்றாய்ச் சுற்றிப்பார்த்தேன். நான் இருந்த இடத்திலேயே இருந்தமாதிரியே இருக்கிறேன். நான் தோணியில் போகவுமில்லை, பேதி காணவுமில்லை, மரண மடையவுமில்லை, பிரலாபித்தழவுமில்லை, பிணத்தைச் சுடவுமில்லை, வேகவுமில்லை. இக்கனவை நினைத்து நினைத்து அர்த்தம் தெரியாமல் திகைத்தேன். ஆச்சர்யப்பட்டேன். அடிக்கடி கனவை நினைத்துக்கொண்டேன. அர்த்தம் புலப்படவே யில்லை. ஆனால் மெல்ல மெல்ல உலகப்பற்று நழுவிற்று. அவைகளைக் களைந்தேன். சற்குரு கடாக்ஷம் பெற்றேன். அப்பொழுதொருநாள் இக்கனவைப்பற்றிச் சொன்னேன். உண்மை

யை அறிந்தேன். அறிவிற்கறிவாய் நின்று உணர்த்திய அருளிறையைக் கொண்டாடினேன். குழந்தாய், சொப்பனத்தில் இச்செய்திகளையெல்லாம் நான் நன்ருய் வாஸ்தவமென்று நம்பியல்லவோ இருந்தேன். நானே தோணி தள்ளுவதும், எனக்கே பேதி காண்பதும், நானே யிறப்பதும், நானே என் பிணத்தைக்கொண்டு கரை சேர்ப்பதும், எனது பிணத்தை நானே மயானக்கரைக்குச் சுமந்து செல்வதும், கட்டை முட்டைகளை அடுக்கி எனது பிணத்தை வைத்து நானே தீமூட்டுவதும், அழுவதும் எங்ஙனம்? நம்பமுடியாத காரியமாயிருந்தும், சொப்பனத்தில் பரிபூரணமாய் நம்பினேனன்றோ ? சூடு பொருக்கமுடியாமல் புறண்டுவிழுந்து நித்திரை தெளிந்து பார்த்தபோது பொய்யாய் விட்டது. அதுபோலவே, நீயுமுனது மாயா நித்திரையில் ப்ரகிருதி சொப்பனத்தில் உன்னை வேறு வேருகப் பார்த்து பிரமித்து சுகதுக்கங்களில் உழலுகின்ருய். எககாலத்தில் உனக்கு ப்ரபஞ்ச துக்கம் பொருக்கமுடியாமல் நீ தீவிரதர விரக்தி பெற்று உலகநிலையிலிருந்து புறண்டுவிழுந்து உனது மாயா நித்திரையினின்றும் தெளிவாயோ அக்காலத்திலே உனது ஸ்வரூடம் உனக்கு பிரத்பக்ஷமாம். அப்பொழுதுதான் உண்மை வெளிப்படும். வேறுவேருய்க் கருதிய பிரபஞ்சம் மித்தையாம். பிரம்ம வஸ்துவாகிய நீயே சத்தியமாம். ஜகன்மித்திய பிரமை அசத்தியமென்று சம்சயரகிதனுய் மேககர்ச்சனை பின்னிடும்படியாக ஜெயபேரிகை யடிப்பாய். நீயும் சிவமே உலகமும் சிவமே. தத்வமசி யென்னும் சாம வேத மஹாவாக்கியத்தின் பொருள் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாய் அநுபவத்தில் விளங்கும். ஆகையால் வேற்ற்றுமைமையைவிட்டு சிவோகமென்று சொல்வாய்.

சிஷ்யன் :—ஞானசாகரமே, அடியேனது மனமானது

மிகவும் தத்தளித்துக் கலங்குகின்றது. தெளிவித்துத் திடப்படுத்தவேணும் சுவாமி.

குரு:—சத்புத்திரா, உன்னை நீ அறிவாயானால் உனக்கொரு கேடுமில்லை உன்னிடத்திலேயே உனக்கு ஆனந்தம் உண்டாகவேண்டும். நீயே ஆனந்த ஸ்வரூபன். ஆனந்தம் உனது லக்ஷணம் உலகத்தில் அங்குமிங்கும் ஓடித் தேடவேண்டியதில்லை. கேட்டதைக்கொடுக்கும் தெய்வம் உனக்குள்ளேயே இருக்கிறது. ஓர் தோட்டத்தில் சில வாலிபர்கள் மிகப் பசியுடன் கனிகளை அருந்த விரும்பி உட்சென்றார்கள். எல்லோரும் வந்த காரியத்தை மறந்து ஒருவன் அத்தோட்டத்திலுள்ள மரங்களையும் புற்பூண்டுகளையும் எண்ணினான். ஒருவன் இலைகளை எண்ணினான். ஒருவன் நீளத்தை அடியிட்டு அளந்தான். ஒருவன் அகலத்தை அளந்தான். இப்படி வீண் பிரயாசை எடுத்து அவர்களுக்குள் எண்ணிக்கை அளவுகளைப்பற்றி வாதித்துக்கொண்டிருக்கையில் புத்திசாலியாகிய ஒருவன் ஒன்றையும் கவனியாமல் சரேலென்று மரமேறி பழங்களைப் பறித்துச் சாப்பிட்டுச்சென்றான். இம்மாதிரியே வீண்வாதங்களை நீக்கி கனி இருக்கும் இடத்தைப்பார்த்து அடைந்து உண்பாய் ஞான புத்திரா. அக்கனியானது உன்னிடத்திலேயே இருக்கிறது. நீயே அக்கினி. நீ அடையவிரும்பும் ஆனந்தமானது உன்னிடத்திலேயே இருக்கிறது. நீயே ஆனந்தம். ஆனந்தமே உனது ஸ்வரூபம். உன்னைத்தவிர வேறு தோற்றல் மாத்திரமாய் இருக்கிற சகல வஸ்துக்களிலும் ஆனந்தம் கிஞ்சித்தேனும் கிடையாது. ஆகையால், எனது சிஷ்ய சிகாமணியே, நீ நித்யானந்தத்தை அனுபவிக்கும் பொருட்டு உன்னைத் தேடி கண்டுகொள்.

சிஷ்யன்:—ஞானகருணாகர மூர்த்தியே, ஓர் சங்கை

உதித்துள்ளது. என்னெனில், என்னைத்தவிர மற்ற சகல வஸ்துக்களிலும் ஆனந்தம் எனது தின அனுபவசித்தமாயிருக்க இல்லையென்னல் எப்படி ? எனது அற்பபுத்தியின் நிச்சயம் என்னவென்ருல், சகல வஸ்துக்களிலும் சுகம் உளதென்றும் ஆயின் அச்சுகம் வஸ்துக்களுக்குத் தக்கவாறு பேதப்பட்டு தாரதம்மியமாயுள்ளதென்றும் ஆனல் இச்சுகங்களெல்லாம் நித்யமல்லவென்றும் என்னினின்று உண்டாகும் சுகமே நித்யமானதென்றுமே ஆகையால் என்னைத் தவிர வேறு வஸ்துக்களில் சுகம் இல்லை என்பது எனக்கு மனக்குழப்பத்திற்குக் காரணமாய் இருக்கிறது.

குரு:—அப்பனே, என்னுணைப்படிக்கு உன்னைத்தவிர வேறு வஸ்துக்களில் சுகம் இல்லவே இல்லை. வேறு வஸ்துக்களில் இருப்பதாகத் தோன்றும் சுகமானது உன்னுடைய வாஸ்தவமான சுகமே. மனமானது தன் யதாஸ்தானத்தில் ஒடுங்கியிருந்தால் சுகமும் விரிவுபட்டு எங்கும் ஓடித்திரியுங்கால் துக்கமும் உண்டாகின்றது. உன்னுடைய ஆத்மசுகமே அடங்கி ஒடுங்கி அசைவற்ற மனக்கண்ணுடியில் பிரதிபலித்து சுகமாகின்றது. நீ ஒரு கப்பல் வியாபாரி என்று வைத்துக்கொள்வோம். உன் திரவியங்களெல்லாம் கப்பலிலிட்டு வியாபாரத்தின்பொருட்டு நீ அமெரிக்காவுக்கு அனுப்புகின்ருய். உன் மனமானது உனது கப்பல் துறைமுகத்தைவிட்டு நீங்கிய முதல்க்கப்பலைப் பின்பற்றி ஓடுகின்றது. கப்பலானது இன்றைக்கு இந்த இடம்போய் இருக்கும் இன்றைக்கு இந்த இடத்திற்குப்போகும் என்ற ஆலோசனையும், எங்கே வழியில் கப்பல் கொள்ளைக்காரர் கொள்ளையிட்டு விடுகிருர்களோ, எங்கே தான் நியமித்திருக்கும் கப்பல் அதிகாரிகளே தன்னை மோசம்செய்து விடுகிருர்களோ, எங்கே கப்பலானது சமுத்திரத்தில் மூழ்கிப்போய் விடுகின்றதோ

என்ற பலவிதமான சஞ்சலங்களும் உன்னிடம் சதா குடி கொண்டிருக்கின்றன. ஆகையால் உனது கப்பலானது திரும்பிவந்து சேரும்வரை உன் மனமானது கப்பலின் பின்னே ஓடி சலிக்கின்றது. ஆகையால் துக்கத்தை அனுபவிக்கின்றாய். கப்பலானது இரட்டிப்பு திரவியத்துடன உனது கரைவந்து சேர்ந்ததென்று ஒருவன் வேகுவந்துசொல்ல கப்பலின்பின்னே சலிக்கின்ற மனமானது வெகுவேகமாய் ஓடி வந்து தனது யதாஸ்தானத்தை அடைகின்றது. இச்சங்கதி கேட்ட உடனே நீ சந்தோஷத்தால் துள்ளிக்குதிக்கிறாய் ஆடிஓடிக்கொண்டிருந்த உனது மனமானது தனது யதாஸ்தானத்தை அடைந்தவுடன் உனது ஸ்வரூபமாகிய ஆனந்தம் பிரதிபலிக்கின்றது. உடனே கப்பல் வியாபாரத்தால் வந்த லாபத்தினால் ஆனந்தமடைகின்றாய் ஆகையால் திரவிய லாபத்தால் வந்த இவ்வானந்தமானது யதார்த்மான ஆத்மானந்தத்தின் பிரதிபலமே! வீண்சாயாமாத்திர மாகையால் தான் நித்தியமாயிருக்கிறதில்லை இன்னம் கேட்பாய் இவ்வானந்தம் நித்தியமானால் லபித்த திரவியம் இருக்கும்போதே புத்திரன் மரித்தால் துக்கம் உண்டாகின்றது. அப்படி துக்கம் உண்டாகக் காரணம் இல்லை. ஆகையால் தான் தோற்ற மாத்திரமாகிய பிரபஞ்ச வஸ்துக்களில் உதிக்கும் ஆனந்தமானது வாஸ்தவமானதல்ல மனமாகிற கண்ணாடியில் பிரதிபலிக்கப்பட்ட சாயாமாத்திரமாம் நீயே ஆனந்த ஸ்வதந்திரன் மிகவும் அருமை பாராட்டிவந்த ஓர் வஸ்துவை இழந்தவனுக்கு அவ்வஸ்துவைப்பற்றிய பித்து பிடித்து எப்பொழுதும் எவ்விடத்தும் அவ்வஸ்துவையே தேடுவான் போல் மிகவும் அருமையாகி உனக்கே யுரிமையாய் உடைமையாய் யிருந்த ஆனந்தத்தை இழந்துவிட்டதாக பாவித்ததால் உனக்கு அவ்வானந்தத்தை அடைய பித்துப்பிடித்து

எப்பொழுதும் எவ்விடத்தும் ஆனந்தலாபத்தையே கருதி, திரிகின்றாய். ஆனந்தம் உனது ஸ்வதந்திரமே உனது ஸ்வரூபமே நீயே ஆனந்தம். ஆனந்தமே நீ. அப்பனே! ஆத்மஞ்சனம் செய்து ஆனந்த லாபத்தையடைந்து சிவஸ்வரூபமாய் இருப்பாய். சிஷ்யன் ஞான பிரதாபாதங்களுடைய அமிர்த வசனங்களினால் கரைஏறினேன் பயமொழிந்தேன். ஆனந்த மாரிபொழியும் ஞானமேகமே ஆத்ம தெரிசனம் செய்வது எங்ஙனம் ஆனந்தம் அனுபவிப்பது எங்ஙனம் தெரிவித் தருளவேண்டும்.

குரு:—மழலைச்சொல் மாருதாமைந்தா கேள் உனது கண்கள் சகல வஸ்துக்களையும் பார்க்கின்றன ஆனால்உனது கண்கள் தங்களைத் தாங்களே பார்க்கின்றனவர் பார்க்க முடியுமா முடியாது. அதுபோல உனது ஆத்மவஸ்துவின் சைத்தன்ய பிரகாசத்தால் சகல வஸ்துக்களும் பார்க்கப் படுகின்றன. நீ உனது ஆத்மஸ்வரூபத்தை பார்க்கமுடியவில்லை. ஆனால் கண்கள் ஒரு கண்ணாடியில் தங்களை தாங்களே பார்க்கமுடியும்போல உனது ஆத்மவஸ்து மனமாகிற கண்ணாடியில் தன்னைத்தானே தர்சிக்கமுடியும் ஆனால் கண்ணாடியானது அழுக்கு நிறைந்திருந்தால் நன்றாய்ப் பிரதிபயினம் உண்டாகாது ஆகையால் அழுக்குகளை நீக்கி நன்றாய்க் கழுவி விளக்கவேண்டியது. இன்னும் கண்ணாடியானது ஆடிக்கொண்டிருந்தால் ஸ்திரமான பிரதிபிம்பம் உண்டாகாது. ஆகையால் கிஞ்சிற்றேனும் ஆடாமல் ஒரே நிலையில் நிறுத்தவேண்டியது. அழுக்குகள் சிறிதுமில்லா சுத்த ஜலத்தால் நன்றாய்க் கழுவப்பெற்று ஒரே நிலையில் நிறுத்தப்பட்ட கண்ணாடியில் கண்கள் தங்களைத்தாங்களே வெகு ஸ்பஷ்டமாய் பார்க்கின்றன. அதுபோல காமக் குரோதாதி அழுக்குநிறைந்த உனது மனமென்னும் கண்

ணுடியை சற்கருமங்களால் துடைப்பாய். பின்பு பக்தி யென்னும் சுத்தஜலத்தால் கழுவி நிர்மலமாக்குவாய். பிறகு யோகம் என்னும் அப்பியாசத்தால் ஒரே நிலையில் நிறுத்து வாய். இவ்வண்ணம் சுத்தம்செய்து சலனமின்றியமனிதனி டத்தில் நீ ஆத்மதரிசனம் செய்வாய். அப்பொழுது ஆனந் தமடைவாய். குமரனே வீணே உலகத்தில் அங்குமிங்கும் ஓடிய யதார்த்தவஸ்துவைத்தேடி அலுக்கவேண்டாம். அர ண்மனையிலிருக்க, தெருவெல்லாம் தேடினுல் அரசனைப் பார்க்கமுடியுமோ! அவ்வண்ணமே ஏகசக்கரேச்வனுகிய ஆத்மவஸ்து உனதுள்ளேயே யிருக்க, ஏன் மூலைக்குமூலை ஓடுகிறுய். ஓரறையின் நாலாப்பக்கத்திலும் உள்ள ஜன்னல் களைத்திறந்து வைத்துக்கொண்டு அவைகளின்மூலமாய் வெளியே பார்வையிட்டுக் கொண்டும் தியங்கி யிருந்தால் அவ்வறைக்குள்ளே பழமையாய் குப்பைகளுக்குள்ளே மறைந்துகிடக்கும் ஓர் ரத்தின மணி எப்படி கிட்டும். ஜென் னல்களையெல்லாம் அடைத்துவிட்டு பார்வையை உட்செலு த்தி குப்பைகளையெல்லாம் கிண்டி ஓர் தீபத்தின் உதவியால் முயற்சித்தால்அந்த ரத்தின மணியை கண்டு அடையலாம். அதுபோல இச்சரீரமாகிய அறையின் நாலாபக்கத்திலு முள்ள ஜென்னல்களாகிய இந்திரியதுவாரங்களை அடைத்து அகமுக திருஷ்டியுடன் பஞ்சகோசக் குப்பையைக்கிண்டி வைராக்கிய தீபத்தின் உதவியால் முயற்சித்தால் ஸ்வயம் பிரகாச ஞானனந்த சிவமணியைக்கண்டு அடையலாம். ஈற் றில் நீயே அம்மணி யென்பதையும் அனுபவ பூர்வமாய் அறி வாய். ஆகையால் ஆனந்தபுத்திரனே, பகிர்முக திருஷ் டியை விட்டுவிடு. உன் முகநோக்குடன் ஆராய்ந்துபார். சிவதரிசனம் செய்வாய். தரிசித்த சிவம் நீயே யென்பதை அறிவாய். சிவமே நீ. நீயே சிவம். ஞானபுத்திரா! ஆமை

யானது சந்தடிசத்தம் கேட்டவுடனே ஆபத்து வருகிற தென்று தனது அவயவங்களை உள்ளுக்கிழுத்துக்கொண்டு வெறும் ஓடுமாத்திரம் போலிருப்பதை நீ பார்த்ததில்லை யோ? அதுபோலவே இப்பிரபஞ்சத்தினின்றும் நீ தப்பிக்க விரும்பினுல் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்கி திருஷ்டியை உள்ளுக்கு இழுத்துக்கொள்வாய். சில வண்டுகளைத் தொட்டால், அவைகள் இம்சைக்கு அஞ்சி கால்களை விரித்து மரித்தவைபோல் யிருப்பதை நீ பார்த்திலையோ? அதுபோல பிரபஞ்ச இம்சைக்கு நீ அஞ்சுவது வாஸ்தவமானுல் உலகப் பார்வைக்கு மரித்தவன் போலிருப்பாய். இவ்வண்ணம் நீ அப்பியாசித்து வந்தால், "சிவோஹம்" என்ற உனது தியானம் வாஸ்தவமாம். நீயே சிவம் என்று பேசிக்கொண்டிருக்கையில் ஆகாயம் குமுறி இடி இடித்து பெருமழை பெய்தது. குருவானவர் அப்படியே நிஷ்டை கூடிவிட்டார்.

பின்னெரு நாள் மலையில் இன்னும் உயர ஏறி பராசக்தியின் லீலாவினேதங்களைக்கண்டு களித்துக்கொண்டு செல்கையில் வெகு உயரத்தினின்றும் விழும் ஓர் அருவியின் முன்பாக ஓர் பெரும் பாறையின்மேல் போய் உட்கார்ந்தார்கள்.

சிஷ்யன்:—சிவப்பிரகாச தேசிகனே! இதோ நமது கண்கட்கு முன்பாக இந்த அருவி வெகு உயரத்தினின்றும் சமுத்திர கோஷத்துடன் கீழ் விழுகின்றது. விழும் வேகமும் சப்தமும் வெகு பயங்கரமா யிருக்கின்றன. சுற்றிலும் விருட்சங்களடர்ந்து செடிகொடிகள் படர்ந்து முட்களும் புதர்களும் நிறைந்து இருண்ட வனந்திரமாயிருக்கின்றது. செந்நாய், புலி, கரடி, சிங்கம் முதலிய வெகு துஷ்டமிருகங்களின் சப்தமும் கெர்ச்சனை

யுமே நிறைந்திருக்கின்றது. சிறு பாம்பு, பெரும் பாம்பு ஆகிய விஷஜந்துக்கள் எங்குபார்த்தாலும் ஊர்ந்து கொண்டிருக்கின்றன. நிர்மானுஷ்யமா யிருக்கிறது. இந்த அருவி விழுமிடமானது அளவிட முடியாத ஆழத்தை யுடையதாய் முதலை முதலாய தீயஜந்துக்களின் வாசஸ்தானமாயிருக்கிறது. வைரம்பாய்ந்த விருட்சங்களையும் துளைத்து துவாரமிடவல்ல இம்சையைத் தரும்படியான வண்டுகள் எங்கும் பறக்கின்றன. இக்காட்சியை நினைத்தால் சரீரம் வியர்த்து ரோமம் சிலிர்த்து நடுக்க முறுகின்றேன். சிருஷ்டியானது இவ்வளவு பயங்கரமா யிருக்குமென்று நான் இதுவரை கனவில்கூட நினைக்க வில்லை. பெற்றோர், உற்றோர், சுற்றத்தினோர், மாடமாளிகை கூட கோபுரங்கள், தன தான்ய வகைகள் இவைகளை விட்டு நீங்கி யாதொரு பற்று மில்லாமல் துறவிகளாய் கானகம் புகுவது உத்தமம் என்றும் இதுவே அப்பியாசிகளுக்கு அவசிய நிலையென்றும் கேட்டிருக்கின்றேன். இதுகாறும் அங்ஙனமே நினைத்திருந்தேன். இப்போழுது இவன் உற்று இவ்வரைக் கானகக் காட்சியை கிஞ்சித்து யோஜித்தால் நான் இதுவரை நினைத்திருந்தது அறிவீனம் என்று தோன்றுகிறது.என் அப்பனே! அருட்சாகரமே! ஏன் துறவிகள் கானகம் செல்லுகிறார்கள்? கிருபை செய்து அருள்வாய்.

குரு:—மாசற்ற மைந்தனே! கேட்பாய். மானிடரின் சேர்க்கையை விட்டு நீங்கி கானகம் புகுந்தால் மோட்சமுண்டென்பது தப்பிதமேயாம். மலைக் குகைகளில் ஏகாந்தமாய் வாசஞ் செய்வதாலும் சரீரமுழுவதும் நீரணிந்து கொள்வதினாலும், கங்கையாதிய தீர்த்தங்களில் முழுகுவதினாலும், நகங்கள் வெகு நீளமாய் வளர்த்துக் கொண்டு வருவதினாலும், வீண்மௌன விரதம் சாதிப்பதினாலும்,

ஒற்றைக்காலில் நிற்பது முதலிய பிரயோஜன மற்ற அப்பி யாசத்தினுலும், நாள் ஒன்றுக்கு ஏழு ஊர்சுற்றி வருவதா லும் மோட்சம் கிட்டுமென்பது மருள்பிடித்து மயக்க மடைந்திருக்கின்ற மகா மூடசிரோன் மணிகளின் கொள் கைகளாம். இருண்ட பயங்கரமான குகைகளில் சிங்கம், புலி, கரடி முதலிய துஷ்டஜந்துக்கள் வசிக்க வில்லையோ? நகர் நாயானது சாம்பல் மேட்டில் விழுந்து அடிக்கடி புறண் டுகொள்வதில்லையோ? கங்கையாதி நதிகளில் முதலை, நீர் நாய், மச்சம் முதலிய ஜந்துக்கள் ஸ்திரவாசம் செய்யவில் லையோ? பூனை, புலி, கரடி, முதலிய ஜந்துக்களுக்கு நகங்கள் வளர்ந்திருக்க வில்லையோ? இன்னும் முள்ளம்பன்றிக்கு சரீர மெங்கும் முட்களாகிய நகங்கள் ஏராளமாய் நீளமாய் இல் லையோ? பேசமுடியாமல் பிறவியினுலோ அல்லது வியாதியி னுலோ ஊமைகள் இல்லையோ? எவ்வளவோ நாடோடிகளும் திருட்டு ஜாதியாரும் நாள் ஒன்றுக்கு பத்து ஊர்சுற்ற வில்லையோ? புழுவானது ஒற்றைக் காலில் நிற்பதில்லையோ? இவர்கள் எல்லோருக்கும் மோட்சபாக்கிய சுதந்தரர்களாக வேண்டுமே! ஆகையால் எனது அரும்புதல்வனே! இவை கள் எல்லாம் பிரயோஜன மற்றவைகள். ஆனுல் துறவானது அகத்துறவு என்றும் புறத்துறவு என்றும் இருவகையாம். புறத்துறவானது அப்பியாசிகளுக்கு மனம் ஒடுங்குவதற்கு ஆரம்பமார்க்கமாம். அத்துறவே சிரேஷ்டமானது. புறத் துறவின்றிய அகத்துறவு நன்மையாம். அகத்துற வின்றிய புறத்துறவு பயனின்றியது. வேஷம் உதிரமாம். நாடக த்தில் சன்னியாசி வேஷம் போடுவது போல் இப்பிரபஞ்ச னுடகத்தில் சன்னியாசி வேஷமாம். ஆனுல் புறத்துறவு அகத்துறவுக்கு விழிகொடுத்து உதவும். மும்முட்சிகளுக்கு புறத்துறவு அவசியம் வேண்டியது. ஓர் நெருக்கமாக

அடர்ந்து படர்ந்து முள் விருட்சத்தை அடியுடன் அழிக்க விரும்பினால் படர்ந்து பரவி யிருக்கின்ற முட் கிளைகளின் ஊடே நுழைந்து வேரைப் பிடுங்க முடியுமா? அப்படி எத்தனித்தால் முயல்பவனுக்கு ஆபத்து சம்பவித்தாலும் சம்பவிக்கும். ஆகையால் ஒவ்வொரு கிளையாய் வெட்டி யெறிந்து கடைசியில் வேரையும் அடியுடன் பிடுங்கி யழித்து விடலாம் அதுபோல ஆசையாகிய கொடிய முள் விருட்சத்தை சிறிது சிறிதாய் தறித்து கடைசியில் அணுவளவு மில்லாமல் அழித்து விடலாம். ஆகையால் புறத்துறவு அப்பியாசிகட்கு அவசியமாம். அகத்துறவடைவற்கு வழியாம். ஆனால் அகத்துறவடைந்தோரே அகத்துறவின்றி வெறும்புறத்துறவடைந்தோரைப் பார்க்கிலும் சிரேஷ்டர்கள். அகத்துறவடைந்தோருக்கு புறத்துறவு அவசியமில்லை. புறத்துறவடைந்தோருக்கு அகத்துறவு அவசியமாம். ஆகையால் வீண்புறத்துறவு மாத்திரம் அடைந்து அகத்துறவடைய விருப்பம் சிறிது மின்றி கானகம் சென்றாலும் காமம், குரோதம், பயம், ஆசை முதலான அகப் பற்று நீங்குமோ? ஆகையால் அகப்பற்றுக்காக நீக்கிவிட்டால் சிறிதும் பயமேயில்லை. நியமம் இல்லை. வெறும்புறத்துறவு மாத்திரம் அடைந்தோருக்கு பயம். ஆசை முதலாய பிசாசங்களை மனதினின்றும் அகலா. ஆனால் அகத்துறவை விரும்பி அதின் பொருட்டு ஓர் நிமித்தம் மாத்திரமாய் புறத்துற வடையும் அப்பியாசிகளுக்கு கானகவாசம் சகாயமே. ஆகையால் புதல்வனே நீ வேஷமாத்திர மாகிய புறத்துறவை பெரிதாய் நினையாமல் அகத்துறவை பரிபூர்ணமாய் சாதிப்பாயானால் ஜீவோகம் என்ற சுருதி வாக்யத்தின் உண்மையை நீ அநுபவத்தில் அறிந்து ஈற்றில் சிவமாக விளங்குவாய்.

சிஷ்யன் ஞானகுருநாதா! இன்னொரு வித நினைப்புண்

டாய் விட்டது. என்ன வென்றால், இவ்வருவியானது சுற்றி லும் வெகு தூரத்திற்கு நீர்த்திவலைகளைப் பன்னீர்தெளிக்கு மாறு போல் வாரித் தெளித்துக் கொண்டு தன்னுடைய நிர்ப்பயமான வீரப்பிரதாபத்தைப் புகழ்ந்து ஜயபேரிகை யடிப்பது போலமிகவும் அற்புத காக்ஷியாயிருக்கின்றது. சுற்றிலு மிறைக்கப்பட்ட திவலைகளைத் தேனீக்கள் சுற்றிச் சுற்றிப் பறந்து அருந்திமதுவை கிரகித்து அந்த அருவி வீழ்ச்சியினால் அந்த பாறையில் இருபக்கங்களிலும் இரண்டு குடங்கள் போன்ற கூடுகள் கட்டி யிருப்பது வெகு விநோத மாயிருக்கின்றது. எங்குபார்த்தாலும் பச்சைப்பசேலென்று தோன்றுகின்ற விருக்ஷங்கள், கொடி செடிகள், புல் பூண்டு கள் இவைகளின் காக்ஷியானது உரைக்கத் தரமன்று. இந் நீரோடையில் பலவகைப்பட்ட பன்னிற முள்ள மீன்களும் நீர்நாய்முதலிய ஜலஜந்துக்களும் துள்ளி விளையாடுவது அதிமனோகரமாயிருக்கின்றது. குரங்குகள் கிளைக்குக்கிளை தாவி பாறைகளின் கீழும் மேலுமாக ஓடி ஒன்றுக் கொன்று பல்லை இளித்துக் கொண்டு கூச்சலிடுவது பார் வைக்கு ரம்யமாயிருக்கின்றது. ஆகையால் எனது குருவே! எனது குதூஹலத்திற்கு ஓர் அளவில்லை.

குரு:—குழந்தாய் உள்ளினின்றும் உண்டாகி உன்னி டத்திலேயே லயத்தைப் பொருந்தியும், உன்னையன்றித் தனியே இருப்பும் இல்லாததுமான மாயையிற் தோன்றிய இச்சிருஷ்டியின் மகிமையும் அலங்காரமும் வியக்கத்தக்க தென்றாய். இவைகட்கெல்லாம் காரணவஸ்துவாய், பரப்ரம்ம சொரூபமாய், நித்யானந்தசிவமாய் இருக்கப்பட்ட உன்னு டைய மகிமையும் அலங்காரமும் யாரால் வர்ணித்துச் சொல்லமுடியும். யாரால்அறியமுடியும். ஆகையால் மகனே! நீ சிவானுபோதினை அடைவாய். நீ சிவமாக விளங்குவாய்.

என்று சொல்லி நிஷ்டைகூடிவிட்டார். பின்னொருநாள் அந்தஸ்தலத்திற்கு வெகு ஆடம்பரத்துடன் அணிமாதி அஷ்டமாசித்திகளை உடையவர் போன்ற அபினயத்துடன் அநேகம் சிஷ்யர்கள் சூழ, ஓர் சன்னியாசி அவ்விடம் வந்தார். கஞ்சா, புகையிலை, கள்ளு, சாரூபமே அவருக்கு சாதன சாதுஷ்டியம். ஓர்நாள் ஜனங்களெல்லோரும் பார்க்கும்படி பூமியினின்றும் உயர சுமார் ஒருகஜத்துக்கு மேலே யாதொரு ஆதாவு மின்றி வாயுஸ்தம்பனம் செய்தார். ஜனங்கள் ஆயிரக் கணக்காகக் கூடி வேடிக்கை பார்த்தார்கள். நமது சிஷ்யனும் பார்க்கும்படி நேரிட்டது. இவ்வேடிக்கை பார்ப்பதற்கு டிக்கட் ஆளொன்றுக்குஒருரூபாய். இங்ஙனம் தினந்தோறும் செய்கிறார். தினந்தோறும் வசூலாகிறது. அவரது கீர்த்தியை வெகுவாகப் புகழ்கிறார்கள். பை பையாய் பணத்தைக் கொட்டிபாததர்சனம் செய்கிறதற்கு எவ்வளவோ தனவான்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இவைகளை யெல்லாம்கண்ணுற்றும் கேழ்வியுற்றும் உள்ள சிஷ்யன் சற்குருவை நெருங்கி என்னப்பனே! அக்ஷப ஞானசொரூபமே! இங்கு ஓர் மகான் எழுந்தருளி யிருக்கிறார். அவரது மகிமையை யாவராலு முரைப்பதற்கரிது. அணிமாதி அஷ்டமா சித்திகளை எல்லோரும் பார்க்கும்படி தினந்தோறும் செய்கிறார். ஆயிரக் கணக்கான தனவான்கள் சூழப்பெற்றிருக்கின்றார். அவரது நடையுடை பாவனைகளெல்லாம் ஈச்வரனுக்கு சம்மதிபா யிருக்கின்றன. அவர் அவதார புருஷனே.

குரு:—சித்திகளால் பிரயோஜனம் யாது? முக்தியைத் தருமா? அழிந்து போகப்பட்ட மிகவும் அவலட்சணமான துக்காலயமான இக்காரண சூக்ஷ்ம, ஸ்தூல சரீரங்களில் ஆநந்தத்தை விளைக்குமேயன்றி ஆத்மானந்தமாகிய நிரதி

சியாநந்தத்தைக் கொடுக்க வல்லதோ. செப்படி வித்தைக் காரன் மாங்கொட்டையை எல்லோருக்கும் முன்பாக பூமியி லிட்டு, உடனே மாமுண்டாக்கி பழங்காட்டி பரித்துண்ணக் கொடுக்கவில்லையோ. அவன் சாதாரண ஜனங்களை மதி மயங்கச் செய்து காசுபரித்தல் போல இச் சித்தர்களும் பெரிய செப்படி வித்தைக்காரர்களாய் ஏற்கனவே மதிமய ங்கி அவித்யா வாசன சம்பன்னர்களா யிருக்கும் உலகத் தாரை இன்னும் புரட்டி உருட்டி அதோ கதியில் தாழ்த்தி அவர்களிடமிருந்து காசையும், கீர்த்தியையும் பரிப்பார் கள். சித்திகள் பெரிதல்ல, மகனே! ஓர் சரீராப்பியாசியான மல்லன் சரீரத்தை எங்ஙனம் வேணுமோ அங்ஙனமெல் லாம் வளைத்து சர்க்கஸ் வித்தை காட்டுவதுபோல ப்ராணுயா மாதி அப்யாசத்தினுல் ப்ராணனை வேண்டியபடி திருப்பப் பழகி இச்சித்திகளை வெகு சுலபத்திலடையலாம். ஓர் குரு வினிடமிருந்து ஓர் சிஷ்யன் உபதேசம் பெற்று யோக நிஷ் டையில் பன்னிரண்டு வருஷகாலம் கூடியிருந்தான். பின்பு தன் யோகப்பியாச பலனை பரிக்ஷிக்கும் பொருட்டு ஓர் ஆழ் ந்த ஆற்றில் இறங்கி நடந்து அக்கரை சேர்ந்து மிகச் சந் தோஷப்பட்டு.குருவினிடத்தில் போய்ச் சொன்னுன். குரு வானவர் அற்ப சந்தோஷியே! இவ்வாற்றை அக்கரை கடப் பதற்கு ஆறே பைசா கொடுத்தால் தோணியில் போய்ச் சேரலாம். சிறு பிள்ளைகள் கூட நீந்தி அரைமணி நேரத் தில் அக்கரை சேர்வார்கள். ஆகையால் உனது பன்னிரண்டு வருஷப் பிரயாசையும் ஆறே பைசா விலைபெறும். சிறு பிள் ளைகளுடைய அரைமணி நேர விளையாட்டேயாகும். இச் சிற்றாற்றை லகுவாய்க் கடந்ததைப் பற்றி இவ்வளவு சந் தோஷமானல் சராசர சமஸ்த புவனங்களையும் தன்னுட் கொண்டு எல்லை தெரியாமல் இருள் மூடியிருக்கும் பிர

பஞ்ச சாகரத்தைக் கடந்து நீ பிரம்மானந்தக் கரை சேர்வா யானல் உனது சந்தோஷத்தை யாரால் அளவிட்டுக் கூற முடியும் என்று சொன்னார். ஆகையால் திடமனம் பெற்ற திராசித்திகளில் பயனிலது. ஆயின் உலகத்தோருக்கு அவைகளிடத்திலேயே வெகு பிரியமாம். சித்தர்களையே மிகவும் கொண்டாடுவார்கள். சத்திய வஸ்துவினிடத்தில் அப்பிரியமே தோன்றும். ஓர் பிர்ம ஞானியானவர் சில சிஷ்யர்களுடன் சஞ்சாரஞ்செய்து ஓர் பட்டணத்திற்கு வந்தார். அவ்வூரிலொருவன் பன்றியின் உறுமல் சத்தத்தை வித விதமாகப் பழகி ஓர் கொட்டைகையின் கண் தினந்தோறும் வேடிக்கை செய்து ஏராளமாய் பணம் வசூல் செய்கிறான். கூட்டங்கள் போவதை இம்மகான் கண்டு இச்சங்கதியை அறிந்து தானும் ஓர் தரை டிக்கட்டு வாங்கி உள்ளே போய் வேடிக்கை பார்த்தார். மறுநாள் அவ்வூராருக்கு உண்மையை உபதேசிக்க விரும்பி சிஷ்யர்களைக் கூப்பிட்டு அன்றையதினம் இராத்திரி அவ்வூர் மைதானத்தில் புதிதாய் உலகெங்கும் பிரஞ்ஞாதி பெற்று வந்திருக்கும் ஒருவன் பன்றி உறுமல் வேடிக்கை செய்வானென்றும், பணச்சிலவு சிறிதுமில்லையென்றும் எல்லோரும் வாலாமென்றும் பறை அறைவித்தார். அப்படி இராத்திரியானவுடன் கும்பல் கூடிவிட்டது. இவர் ஒரு பன்றியைப் பிடித்து மறைத்து வைத்து இருந்தார். தக்க நேரமானவுடன் கூட்டத்தின் மத்தியில் பன்றியைப் பிடித்துக்கொண்டு அதின் சரீரத்தில் இரும்பாணி கொண்டு குத்துகின்றார். பன்றியானது உறுமிற்று. அங்கு கூடியிருந்த துஷ்டர்களில் பலரும் இவர் தங்களை ஏளனம் செய்ததாக நினைத்து கண்டபடி நிந்தித்து இவரை அடிக்க வந்தார்கள். அப்பொழுது இவர், ஜனங்களே! இப்படித்தான் பிரபஞ்சம். பொய்யான

பன்றியின் உறுமல் உங்களுக்குப் பிரியமும் நிஜமான பன்றியின் உறுமல் வெறுப்புமாயிற்று. அதுபோலவே உலகத்தவரிற் பலருக்கும் பொய்யான வேஷ நடனத்திற் பிரியமும், சத்தியமான ஆத்ம லாபத்திற் வெறுப்புமா யிருக்கிறது என்றார். ஆகையால், ஞானபுத்திரா! பொய்யான பிரபஞ்சத்தை ஆதாரமாகக் கொண்ட சித்திகளில் மனம் வையாமல் சத்திஸ்வரூபமாகிய சிவத்தினிடத்தில் ஏகாக்கிரகசித்த முள்ளவனா யிருப்பாய்.

சிஷ்யன்:—அப்படியானால் ஏசுகிறிஸ்து முதலிய மகான்கள் சித்தர்களா யிருந்தது ஏன்?

குரு:—மைந்தா! ஜீவஹிம்சையானது பாவத்திற்குக் காரணமானது என்று பொதுவிதி யிருந்தாலும் சில இடங்களில், சில காலங்களில், சில காரணங்களால் ஜீவஹிம்சை செய்பலாமென்று விசேஷ விதியிருப்பதுபோல சித்த புருஷர்களா யிருந்த சில மகான்கள் லோக உபகாரத்தின் பொருட்டு பரேச்சாபிராரத்தவசர்களாயும் சித்திகளையடைந்தார்கள். இதுவே காரணமாகும். என்ன அற்புதமான சித்திகளையடைந்தாலும் அநித்தியமான பிரபஞ்சத்தை நித்தியமென கற்பித்தல்லவோ தீரவேண்டும். ஆகையால் ஞானிகள் சித்திகளுடனும் விளங்குவார்கள்; இன்றியும் விளங்குவார்கள். சித்திகளை பரமலட்சியமாக கைக்கொண்டு விநோத காலக்ஷேபம் செய்தால் பிரயோசனமிலது. முக்தியை முக்கிய பலனாகக்கருதி முயற்சித்து அதை அடைந்து பின் சித்திகளை ஆவாந்தர பலன்களாக அடைந்து ஜீவகாருண்ணிய நிமித்த மாத்திரமாய் உபயோகப் படுத்துபவர்கள் மகான்களாகும். சுருக்கத்தில் சித்திகளுளதேனும் இலதேனும் முக்தியே லட்சியமாம், முக்கியமாம், ஆகையால் மாசற்ற மைந்தனே! சித்திகளில் விசேஷ விருப்பம் வைத்து

திகைக்காதே. சித்திகளில் வெறுப்புற்றே ஜீவனுனய். முக்தி கூடினுல் சிவமாய் நீயே சிவமாம். சிவமே நீ என்று சொல்லிக் கொண்டே சிஷ்யனை பக்தவிஜயமென்னும் பரமானந்த கிரந்தத்தை எடுத்து வாசிக்கும்படி ஆஞ்ஞை செய்தார். இங்ஙனமே சிலநாட்களுக்கு பக்தவிஜயமே பாவி பற்றிக்கொண்டது. பண்டரீபுரம் முதலாகிய க்ஷேத்திரங் களில் வாசஞ்செய்து பரம பக்த சிரோன்மணியாய் விளங் கிய ஒருவரை கோவிந்தா என்று பெயரிட்டு அவரை முன் னிட்டுக்கொண்டு ஆடுவதும் பாடுவதும், சிரிப்பதும், அழு தும் விதவிதமான நடனங்கள் செய்வதுமாக பக்தியே நிறைந்து பகவத்மயமாக விளங்கினுர்கள். ஓர் நாள் சிஷ் யன், அன்பே வடிவான ஆனந்த ரூபா, என்னைத் தடுத்தாட் கொள்ள வந்த தயாபரமூர்த்தியே, பக்தியால் கற்கண்டு கறைந்து கசிவதுபோல் பிரபஞ்சமெல்லாம் சின்மாத்திர மாக கறைந்து கசிகின்றது ; எனக்கு நன்ருய் விளங்கு கின்றது. ஸாட்சாத் ஈச்வரன் சர்வ வியாபகனுய் சர்வாந் தர்யாமியாய் இருக்க இப்பிரபஞ்சமே பெரிய க்ஷேத்திரமாய் இருக்க, க்ஷேத்திரங்கள் என்ற சிறு கட்டிடங்களில் கல்லி னுல் விக்கிரகங்கள் செய்து அவ்விக்கிரகங்களில் தான் ஈச் வர னிருக்கிருரென்று நம்பி பூஜைசெய்தால் மூடத்தன மன்ருே. ஸ்வாமி பரமகுருவே, பாலனுக்கு இதை தெரிவித் தருளவேண்டும்.

குரு:—ஞானபுத்திரா! உன் மனதினின்றும் ஓர் நினைவு எழுமானுல் அதற்கு உடனே நாமரூபாதிகள் உண்டாகின் றனவன்ருே. நாமரூபாதிகளின்றி எதையாவது நினைத்துப் பார். மனமிறந்தாலன்ருே நாமரூபாதிகளிறக்கும். பிரபஞ் சம் நாமரூப மாத்திரமாக விளங்கும். நாமரூப மயக்கத்தை நீக்கினுல் பிர்ம வஸ்துவே யாகும். மரமென்ருல் கிளை,

கொப்பு, இலை, பூ, பிஞ்சு, காய், பழங்களுடனுள்ள ரூபமும் மரம் என்ற நாமமும் சேர்ந்து மரமாயிற்று. இதன் ரூபத்தையும் நாமத்தையும் நீக்கினால் மரம் எங்கோ? ஆகையால் மகனே, மனம் விரிந்து உலகம் உண்மையா யிருக்கும் வரையில் நாமரூபாதிகளின்றி யிருக்கமுடியாது. அப்படி முடியும் என்று சொல்பவர்கள் சற்றும் மூளையில்லாத அறிவீனர்களே. ஈச்வரனை நாமரூபாதியின்றி பாவிக்கப் பார்த்தால் பரந்த ஆகாயத்தின் நினைவு தோன்றும். ஆகாயமாம் ஈச்வரன். ஆகையால் நாமரூபாதியின்றி நினைத்தல் முடியும் என்று சொல்லுபவர்கள் கல்லைக் கிள்ளி கையை யிழக்கும் மூடர்களே. உலகத்தில் எந்த மதத்தில் விக்கிரக ஆராதனை யில்லையென்று சொல்லு பார்ப்போம். விக்கிரக ஆராதன தூஷணஞ் செய்து ஜீவகாருண்ணிய களஞ்சியமாய் விளங்கிய புத்தமதத்தை ஸ்தாபித்த கௌதமபுத்தர் சமாதியடைந்து சிலவருஷங்களுக்குள்ளாக அவரது பிரதமசிஷ்யர்களே அவரையே ஓர் அரியபெரிய விக்கிரகமூலமாக வணங்கத்தொடங்கினர். கிறிஸ்தவர்கள் கோவில்களுக்குப் போகவேண்டிய காரணமென்ன? மகம்மதியர் பள்ளிவாசலுக்குப் போக வேண்டிய காரணமென்ன? சுருங்கச்சொல்லில் மனிதன் விருப்பத்துடன் ஹிருதயத்தினின்று எழும் ஆசையை ஈச்வரனிடத்துச் செலுத்த விரும்பினால் ஈச்வரனை நாமரூபாதிகளுடன் தான் தியானிக்கவேண்டுமே யொழிய வேறு வழியில்லை. முடியவும் முடியாது. எப்பேர்ப்பட்ட பிர்மஞானிகளும் சகுண உபாசனையை உலகத்தைமுன்னிட்டு கைக்கொள்ளுகிறார்கள். உலகத்தார் அவர்களுக்கு எவை உத்தம உன்னத குணங்களாகத் தோன்றுமோ அவைகளை ஈச்வரனுக்கு லட்சணங்களாக கற்பித்து தியானம் செய்கிறார்கள். சத்வகுண சம்பந்தன்னாகிய பிராம

ணன் சச்சிதானந்த லட்சணங்களை ஈச்வரனுக்குக்கற்பித்து தியானஞ்செய்கிறான். யுத்தபிரியனுகிய ஒருவன் வீர சௌரிய பராக்கிரமாதி தீரத்துவங்களை ஈச்வரனுக்குக் கற் பித்து வணங்குகிறான். மாமிசாதி பட்சணம்செய்து சூது, வாது, திருட்டு இவைகளைக் கைக்கொண்ட ஒருவன் இவை களை சயலட்சணமாகக் கற்பித்து கருப்பணசாமியென்றும், காட்டேரியென்றும் பூஜை செய்கிறான். இவ்விதமாக ஒவ் வொருவரும் அவரவர் மனோகுணங்களை ஈச்வரனிடத்தில் கற்பித்து ஈச்வரனை வணங்குகிறார்கள். இன்னும் கேட்பாய். நீ சிறு குழந்தையாயிருக்கும்பொழுது அரிச்சுவடியில் ஒவ வொரு அட்சரங்களைக் கற்றுக்கொண்டாய். பிறகு அட்ச ரங்களை கூட்டி வார்த்தைகளையும் வார்த்தைகளைக் கூட்டி வாக்கியங்களையும் கற்றுக்கொண்டாய். இப்பொழுது நன் றாய் புஸ்தகமும் படிக்கிறாய். யானை என்ற வார்த்தையை நீ படிக்கும்போது யகாரத்தின் சொரூபமும் னை காரத்தின் சொரூபமும் உன் மனதில் உண்டாகிறதா. அல்லது யானை என்ற மிருகமானது நான்கு தூண்கள் போன்ற கால்களு டனும் ஒரு துதிக்கையுடனும், முறம்போன்ற காதுகளுட னும் விளங்குகின்றதா. நிச்சயமாக யானை என்ற மிருகத் தினது நினைவே உண்டாகின்றதேயொழிய யானையென்ற வார்த்தையில் சேர்ந்திருக்கிற யகாரத்தின் நினைவும், னைகா ரத்தின் நினைவும் உண்டாகிறதில்லை. அதுபோலவே க்ஷேத் திரங்களில் சென்று விக்கிரகத்தின் முன்னின்று தியானம் செய்யும்போது அவ்விக்கிரகமானது இன்ன பாறையிலி ருந்து வெட்டி எடுக்கப்பட்ட கல்லென்றும் இன்னானல் செய்யப்பட்டதென்றும் நினைவுவாராமவ் மனமானது அகண் டகலியாணகுண சச்சிதானந்த லட்சணங்களுள்ள ஸாட் சாத் பகவானையே தியானம் செய்கிறது. ஆகையால்

புதல்வனே விக்கிரக ஆராதனே அவசியம்.

சிஷ்யன்:—எனக்கு அபயம்கொடுத்து ஆதரிக்க எழுந்தருளியிருக்கும் அகண்ட சச்சிதானந்த சொரூபமே! பாறை முழுமூடமாய் தடித்த ஜடவஸ்துவன்றே. இவ்விக்கிரகம் வார்க்கப்பட்டிருக்கிற கல்லுக்கு பாறை காரணமாயிருக்க மூட்டத்திலிருந்து உண்டான முழு மூடத்தை வணங்குதல் முறையோ அறியாமையோ.

குரு:—சிஷ்யரத்தினமே! இவ்விக்கிரகம் வார்க்கப்பட்டிருக்கிற கல்லிற்குக் காரணம் பாறையே. ஆயின் முறையே அதற்குக் காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டாமோ. பாறைக்குக் காரணம் மலையும், மலைக்குக்காரணம் பூமியும், பூமிக்குக்காரணம் ஜலமும், ஜலத்திற்குக் காரணம் அக்கினியும், அக்கினிக்குக்காரணம் வாயுவும், வாயுவுக்குக்காரணம் ஆகாசமும் இங்ஙனமே சகலமும் மூலப்பிரகிருதியிலிருந்து மூலப்பிரகிருதியிலடங்கி அதுவும் ஈற்றில் சுத்தப்பிரமத்தில் ஒடுங்குமாகையால் இக்கல்லுக்கு ஆதிகாரணம் சுத்தப்பிர்மமன்றே. ஆகையால் கல்லினுற்செய்த விக்கிரகங்களை வணங்குதல் நியாயமே.

சிஷ்யன்:—ஸ்வாமி! சற்குருநாதா! ஆயின் க்ஷேத்திரங்களிற் சென்றுதான் விக்கிரகங்களை வணங்கவேண்டுமென்பது என்ன. வழிமார்க்கங்களில் மயிலுக்கு மைல் மைற்கற்கள் நாட்டப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பார்த்தாற் ஏகதேசம் சிவலிங்கங்களைப் போலவே யிருக்கின்றன. அவைகளைப் பூஜை பண்ணலாகாதா! க்ஷேத்திரங்கள் அவசியமா?

குரு:—வைராக்கிய தீரனே! க்ஷேத்திரங்களிலுள்ள விக்கிரகங்கள் ஞானபக்த சிரோன்மணிகளால் மந்திரதியானப்பூர்வமாக பிரதிஷ்டை செய்யப்பட்டு ஸ்தாபிக்கப்பட்

டிருக்கின்றது. வெகு ஜனங்கள் பரிசுத்தமாயும் ஈஸ்வர தியான சிந்தையுடன் கூடுவதாலும் ஓர் விநாடி நேரமேனும் உலகத்தைமறந்து ஈச்வரக் ஞாபகமாயிருப்பதாலும் அங்கு அவர்களது ஒருங்குசேர்ந்த தியானமானது அவ்விக்ரகத் தினிடத்து சைதந்நிய சொரூபமாம் பிரகாசிக்கின்றது. இத னாலேயே, வரப்ரசாத சக்திகளும் விளங்குகின்றன. இன் னும் க்ஷேத்திரங்கள் அவசியமோ! நமது வீடுகளிலேயே விக்கிரகங்களை வைத்துப் பூஜை செய்யலாகாதோ! என் றால் க்ஷேத்திரங்கள் அவசியம். ஈச்வரன் உன்னிடத்திலி ருந்து வேறுபட்டு யிருக்கிறார். என்ற எண்ணம் உன் மனதி னின்றும் அகலும்வரை ஈச்வரன் உன்னில் அந்தர்பூதம் நீயே சிவம், சிவமே நீயென்ற திடஞானனுபவம் உனக் குண்டாகும்வரை ஹீனவானுக்கு தனியான க்ஷேத்திரங்கள் அவசியமாம். இப்பொழுது உனது ஊரில் நாமெல்லாரும் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருவோமானால் "இது யார் வீடு" என்று ஒவ்வொன்றாய் கேட்டுவந்தால் இது கிருஷ்ணய்யர் வீடு, இது சுப்பிரமணியபிள்ளை வீடு, இது எனது வீடு, இது அவனது வீடு, என்று ஒவ்வொருவரும் அவ்வவரது அகவகார சுதந்தரத்தை ஸ்தாபிப்பார்களே யொழிய ஒரு வராவது இது ஈச்வரனுடைய கிரகமென்று சொல்லார்கள். ஆகையால் அகங்காரக்கிரந்தி மனதினின்று நீங்கும்வரை ஈச்வரனுக்கு தனியான க்ஷேத்திரங்கள் அவசியமாம். அது வரைஜனங்கள் க்ஷேத்திரங்களுக்கு போகத்தான்வேண்டும். ஸ்ரீ கிருஷ்ணபகவான் தூது புறப்பட்டு வந்தகாலத்தில் பீஷ்மாதிய பெரியோர்கள் எதிர்கொண்டு ஊர் சுற்றிவர ஸ்ரீ கிருஷ்ணன் முறையே ஒவ்வோர் கிரகத்தையும் இது யாருடையது, இது யாருடையது என்று விசாரித்துவர எல்லோரும் இது எனது, இது பீஷ்மரது, இது துரோண

ரது என்று சொல்ல அங்கெல்லாம் பகவானிறங்காமல் மகா ஞானியாகிய விதுரருடைய கிரகத்தின் சமீபத்தில் வந்த வுடனே இது யாருடயது என்று கேட்க, விதுரர் இது தங் களுடையது என்று சொல்லவும் உடனே பகவான் அங்கு இரங்கி அவரால் கொடுக்கப்பெற்ற கஞ்சி அமுதமாகக் கொண்டார். அப்படி இது ஈச்வரனுடையது, ஈச்வரனும் நானும் வேறில்லை. என்ற திடபாவனையையுடைய விதுர ரைப்போன்ற மகான்களைத் தவிர மற்றவர்கட்கு க்ஷேத்திர விக்கிரகாதாரனை இன்றியமையரிதாம். ஆகையால் வீணே க்ஷேத்திரத்தில் விக்கிரகதூஷணம் செய்யும் பாமரர்கள் பேரானந்தமடைவது அரிது. நாஸ்திகர்களே க்ஷேத்திர விக்கிரகங்களை வெறுப்பார்கள். தவிர இப்பிரபஞ்சத்தில் அந்த மனிதன் விக்கிரக பூஜையின்றி யிருக்கிறுன். சில மனிதர் எப்பொழுதும் தானியங்களாகிற விக்கிரகங்களை பூமியில் பிரதிஷ்டைபண்ணி காலாகாலங்களில் திருமஞ்ச ணம் செய்வித்து மிகவும் பக்தியுடன் பூஜை செய்து, அப் பூஜையினின்று உண்டாகும் வரப்ரசாதமாகிய ஆகாரஇன் பத்தை அனுபவிக்கிறுர்கள். சிலர் ஸ்திரீகளாகிற விக்கிரகங் களை தங்களது ஹிருதயங்களில் காமமாகிய பிரதிஷ்டை பண்ணி மஞ்சள் அறைத்த திருமஞ்சனம் செய்வித்து அவர்களுக்கு இஷ்டவஸ்துக்களை கஷ்டப்பட்டாகிலும் சம் பாதித்து மிகுந்த பயபக்தியுடன் பாதபூஜை செய்து அப் பூஜையினின்று உண்டாகுகின்ற வரப்பிரசாதமாகிய சிற்றின் பத்தை அனுபவிக்கிறுர்கள். இங்ஙனமே பலரும் பலவித விக்கிரகங்களை ஆராதிக்கிறுர்கள். எந்த மனிதன் தனது சரீரமாகிய விக்கிரகத்தை தினந்தோறும் முக்காலமும் ஸ்னானதிகளால் சுத்தம்செய்து இஷ்டபூர்த்திசெய்து பூஜை செய்யாதவன் சரீரவிக்கிரக பூஜையை வெறுத்தவன். ஒரு

வனையும் காணேம். புத்திரா! ஆண், பெண், பொன், சரீர மாகிய அழிந்துபோகப்பட்ட அசுசிகரமான இவ்வனித்திய விக்கிரகங்களை அனித்தியமான சிற்றின்பத்தின்பொருட்டு மதிமயக்கத்தால் பூஜைசெய்வது தகுதியானல் இவ்வனித் திய வஸ்துக்களையே ஈச்வர விக்கிரகங்களாக பாவித்து நித்தியத்துவத்தை கற்பித்து நித்தியமான பேரின்பத்தின் பொருட்டு சிறந்த நித்தியா நித்தியவஸ்து விவேகத்தால் பூஜை செய்வது பிசகோ அறிவீனமோ! ஆகையால் பிரம நிஷ்டாதற்பரர்களைத்தவிர மற்றவர்களுக்கு அவரவர்களது மனேபீஷ்டத்திற்கு தக்கபடி விக்கிரகங்கள் அவசியமாம்.

சிஷ்யன்:—சற்குருவே! முதலில் ஞானத்தை உபதே சித்தீர்கள். பின்பு பக்தியை புகழ்ந்தீர்கள். பக்தி சிறந் ததோ ஞானம் சிறந்ததோ?

குரு:—இரண்டும் ஒன்றேயாகும். ஆனல் ஞானமானது ஓர் ஆற்றின் ஓட்டத்தை எதிர்த்து கரை சேர்வதாகும். பக்தியானது அவ்வாற்றின் வழியே சென்று கறை சேர்வ தாகும். "நேதி, நேதி, இது அல்ல, இது அல்ல" என்று சர்வ வஸ்துக்களையும் விலக்கி தானகி நித்திய பிரம்ம வஸ்துவாகிய சேஷித்திருப்பது ஞானமாம். ஸ்ரீ கிருஷ்ண பகவானது வசனத்தின்படி எல்லா வஸ்துக்களையும் ஆத் மாவிலும் எல்லாவஸ்துக் களிலும் ஆத்மாவையும் பார்த் தலே பக்தி யெனப்படும். இந்த விதமான நிற்குணோ பாசனைக்கு விக்கிர காராதனை முதலிய சகுணே பாசனை தாழ்ந்தபடி யாகும். ஆனல் விக்கிர காராதனை நிற்குணே பாசனையில் கொண்டுபோய் விடும் என்பதில் சந்தேகமே யில்லை. "நித்தியானந்தத்தின் பொருட்டு பக்தி செய்வதே பக்தியாம்." மற்ற தெல்லாம் கொடுக்கல் வாங்கலே! ஸ்ரீ ராமர் பட்டா பிஷேக சமயத்தில் நாரதர் முதலாகிய பக்த

சிரோன்மணிகளுடன் கொலு வீற்றிருக்கையில் தனது கழுத்திலிருந்து ஓர் விலையுயர்ந்த முத்து மாலையை கழற்றி சீதா தேவியின்கையில் கொடுத்து நீயார் பரம பக்த னென்று நினைத்திருக்கிருயோ அவர்களுக்கு கொடு என்று சொன்னர். சீதாதேவி யானவள் சுற்றிப் பார்த்து ஹனுமார் பக்கத்தில் கைகட்டி வாய் பொத்தி வெகு விநயத்துடன் நிற்க அவர் தனக்காக மிகக் கஷ்டப் பட்டவர் ஆதலால் மிகுந்த அன்போடு கூட அவரது கழுத்தில் போட்டாள். ஹனுமார் உடனே அதை அறுத்து, முத்து மணிகளாக சில்லுச் சில்லாய் சிதறும்படி செய்து வாயில் போட்டு மென்று கீழேதுப்பி விட்டார். இதைகண்ணுற்ற சபை யோர் வருத்த முற்ருர்கள். ஸ்ரீராமர் சீதையை ஹனுமா ருடைய அக்கிர மத்தைப் பற்றி கோபப் பார்வையாய் பார்க்க தேவியானவள் ஹனுமாரை, "ஏன் இப்படி செய் தாய்" என்று கேட்க, ஹனுமார் நான், "ராம், ராம்,' என் னும் நாமா மிர்தத்தை சதா பானம் பண்ணிக் கொண்டிருக் கிறேன். இந்த முத்துமாலையானது திரிலோகமும் விலைமதிக் கப் பெற்றது என்றதினுல் இது அவ்வளவு ருசியா யிருக் குமோ என்று மென்றுபார்த்தேன். சிறிதேனும் ருசியில் லாததால்துப்பிவிட்டேன்என்ருர். இப்பேர்ப்பட்ட பக்தியே பக்தியாகும். என் அருமையான குழந்தையே! பக்தர்களது ஹிருதயமானது சூரியனது கிரணங்களால் பனிக்கட்டி கரைவதுபோல் பகவான் நாமத்தினுல் கரையும். வாழைப் பழமானது கனிந்து கசிந்து ருசியைத் தருவதுபோல் பக்தி யானது ஹிருதயத்தைக் கரைத்து கசியும்படி செய்து பிரம் மானந்தத்தைக் கொடுக்கும். சிலர் ஈச்வரனை புருஷோத் தமனுகவும், சிலர் சினேகிதனுகவும், சிலர் மனைவியாகவும், சிலர் பிதாவாகவும், சிலர் சகோதரனுகவும், சிலர் சகோ

தரியாகவும், சிலர் அரசனாகவும், சிலர் அடிமையாகவும், சிலர் குருவாகவும், சிலர் சிஷ்யனாகவும் பாவனைசெய்து பக்திசெய்கிறார்கள். எல்லாவித பாவனைகளும் ஏன் என்று கேட்டு ஈச்வரனானவர் முத்தியை அளிக்கிறார்.

சிஷ்யன்:—சுவாமி! என்னைத் தவிர வேறு வஸ்து வில்லையென்றும், மாய்கையானது தோற்றல் மாத்திரமென்றும் சொல்லி இப்பொழுது விக்ரஹாராதனை, க்ஷேத்திர தரிசனம் முதலியவைகளை சொல்லி முக்தியடைவாய் என்று சொல்லுகிறீர்கள். எது மெய், எது பொய், இம்மயக்கத்தை தீர்த்தருளும் சுவாமி.

குரு:—நீயே சிவம், சிவமே நீ, உன்னைத் தவிர வேறு வஸ்துவில்லை, நீயே இப்பிரபஞ்சம், இப்பிரபஞ்சமே நீ என்பதில் சந்தேகமேயில்லை. கற்பிதமான உலகத்தின் துக்கத்தினின்று நிவர்த்திக்க விரும்பி அவசியமில்லாத வழிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒருவன் நல்ல நித்திரையில் தனது கழுத்தின் பின்பக்கத்தில் ஓர் பெரிய அபாயகரமான கட்டி புறப்பட்டிருக்கிறதாக ஓர்பயங்கரமான சொப்பனம் கண்டு அச்சொப்பனபலத்தினால் விழித்தபிற்பாடும் அங்ஙனமே பாவித்து மிகவும் அவஸ்தைப்படலானான். எத்தனை பேர்கழுத்தில் கட்டியில்லையென்று சொன்னாலும் ஒப்பாமல் உபத்திரவம் பொருக்க முடியாமல் புரண்டு உருண்டு அழுது கொண்டிருந்தான். இப்படி அனேக வருஷங்கள் அவஸ்தைப்பட கடைசியில் ஓர் விவேகத்திற்சிறந்த வயித்தியன் மிகப் பரிதபித்து உண்மையை உணர்ந்து கட்டி புறப்பட்டு பெரியதாயிருப்பது வாஸ்தவம்தான் என்றும் மறுநாட் காலையில் தான்வந்து சொஸ்தப்படுத்துவதாயும் சொல்லச் சொன்னான். அடுத்தநாட் காலையில் அங்ஙனமே சில சீசாக்களில் மருந்துகளும், கத்தியும் பஞ்சு, துணி, முதலியவை

யும் கொண்டுவந்து அவ்வியாதியஸ்தனக்கு நேரேவைத்து அவனை குப்புறப்படுத்து கண்களை மூடிக்கொள்ளும்படி சொல்லி கட்டி இருக்கிறதாக சொல்லும் இடத்தில் அறுப்பது போல் பாவனை பண்ணி பஞ்சைவைத்து துணியால் நன்றாய் கட்டிவிட்டு இனிமேல் உபத்திரவம் இல்லை சீக்கிரத்தில் ஆறிவரும் என்று சொன்னான். அப்படியே சிலநாட்களுக்கு தினந்தோறும் வந்து புதிதாய் கட்டுவதுபோல் அவிழ்த்துக் கட்டிக்கொண்டு வந்தான். சிலநாட்களுக்குப் பிறகு ஆறிவிட்டதென்று சொல்லி இவ்வார்த்தையை ருசுப் படுத்தும்நிமித்தம் ஓர்கண்ணாடி கொண்டுவந்துகாட்டிகழுத்தில் இப்பொழுது கட்டியில்லையென்று பிரத்தியட்சத்தில் நிரூபித்தான். கட்டியில்லாத இம்மனிதன் கட்டியிருக்கிறதாக மயங்க எப்படி மருந்து பஞ்சு, துணி, கத்தி, வைத்தியன் இவைகள் அவசியமாயிருந்ததோ அவ்வளவுஅவசியமே துக்கமில்லாத நீ துக்கமிருக்கிறதாக மயங்க கர்மானுஷ்டானங்களும்,சாஸ்திரங்களும், கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்னும் மார்க்கங்களும், குருவும் ஆகையால், புத்திரா! நீயே சிவம், சிவமே நீ. நீயே சகலமும் ஆனாய்.நீயே அணுவுக்கு அணு, மகத்துக்கு மகத்து, நீயே ஈச்வரன் எனப் பெயர் பூண்டாய், நீயே இப்பிரபஞ்சமானாய், நீயே ஜீவனானாய், நீயே மாயையானாய், மாயையே நீயானாய்.“ஏகமேஅத்வீதீயம்”என்னும் சுருதிக்கு நீயே லட்சணசுவரூபன் ‘ஏகம் சத்விப்ராப கூதா வதந்தி’ என்று ஸ்ருதியானது, உன்னையே கோஷிக்கின்றது. உன்னுடைய குணாதிசயங்களை அனந்தங்கோடி சாஸ்திரங்களாலும் வர்ணிக்க முடியவில்லை. நீயே சிவம், சிவமே நீ.

சிஷ்யன்:—மார்க்கண்டேயருக்கு எமபாதையினின்று நீக்கி சிரஞ்சீவிப் பதம் கொடுத்து அருள் கூர்ந்த பரம சிவ

ஜனப் போல தாங்களும் என்னை ஜனன மரண பாதையி னின்று ரட்சித்து சிரஞ்சீவிப் பதமாகிய சிவபதம் அருளி னீர்கள். நான் வெகு கர்வமடைகின்றேன். என்னையே புகழ்கின்றேன். என்னையே வாழ்த்துகின்றேன். என்னையே துதிக்கின்றேன். என்னையே அலங்கரிக்கின்றேன். நின்கடா ட்சத்தால் என் மகிமை சொல்ல வொண்ணாது. சீதையைக் கண்டுபிடித்து வரும்படி அனுப்பப்பட்ட வானர சேனைகள் கந்தமாதன பர்வதத்தில் இருந்து சமுத்திரத்தைத் தாண்ட ஒருவராலு முடியாது என்று வருத்தப்பட்டுக் கொண்டி ருக்கையில் ஜாம்பவான் ஹனுமாரது பெருமைகளை வர்ணிக்க வர்ணிக்க அனுமாருக்கு பராக்கிரமும் பலமு முண்டானது போல தங்களது ஜெய கெம்பீர வசனங்களினால் நானே சிவமானேன். சிவமே நான் ஆனேன். "சிவோஹம்." "I am that I am"

இவ்விதமாக தான் சிவம் என்று உணர்த்தப்பட்ட சிஷ்யனானவன் சற்குருவின் உபதேச மொழிகளை மனனம் செய்யச் செய்ய மிகக் கலக்கமுற்று குரு சன்னிதானத்தை அடைந்து, சற்குருநாதா! நான்தான் சிவம் என்று திருஷ் டாந்த சகிதமாக தாங்கள் கூறியதை பிதாவானவர் தன் குழந்தையை நீதான் ராஜா என்று சொல்ல, அச்சமயத்தில் வெகு சந்தோஷப்பட்டு இறுமாப்படைந்து பின் பசி, தாகம் முதலிய வருத்தங்கள் உண்டாகுங் காலத்தில் ராஜகம் பீரத்தை மறந்து அழுவதைப்போல பிரபஞ்சத்தவரது வார்த்தைகளால் அடிக்கடி மயக்கமுறுகின்றேன். நானே சர்வ ஸ்வதந்திர வஸ்துவாக பாவித்துக்கொள்வது இரணிய னானவன் தானே கடவுளென்றும் தன்னுடைய நாமத்தி னால் தவிர வேறெவ்வித நாமத்தாலும் ஈச்வரனை தியானிக் கக் கூடாதென்றும் ஏற்பாடு செய்து அரசு புரிந்து வந்த

தைப் போலன்றேதான். இறுதியில் அவனுக்கு நாசமே பல னுயிற்று. ஆகையால் நானே சிவம் என்றுகொள்ள என் மனமானது துணியவில்லை.

குரு:—குழந்தாய்! இன்னும் உன்னை நீ உள்ளபடி அறிந்துகொள்ளவில்லை. இரண்ணியனுனவன் தனது சரீ ரத்தை தான் என்று அபிமானித்து பிரபஞ்சத்தில் பற்பல பேததிருஷ்டியுடன் அகங்காராதிஆணவத்தால் அரசுபுரிந்த தால் அழிவு நேரிட்டது. நீ அன்னமய கோசமாகிய இந்த ஸ்தூல சரீரமுமல்ல. பிராணமய, மனேமய, விஞ்ஞான மய கோசங்களாகிற சூட்சும சரீரமுமல்ல. ஆனந்த மய கோசமாகிற காரண சரீரமுமல்ல. நீ சூன்யமுமல்ல. பின் என்னவென்றுல், உன்னுலேயே உனது சொரூபம் அறியத் தகும். வேறொருவரால் வெளியிட முடியாது.

உனக்கு நீயே சிவம் என்னும் யதார்த்த தத்துவத்தை அனுபவபூர்வமாக நீயே கண்டுகொள்ளவேண்டுமன்றி என் னுல் பிரத்தியட்சத்தில் நிரூபிக்கவோ அல்லது நீ காண்பான் உன்னுல் வெளியிடவோ முடியாது. "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" ஆகையால் நீயே அவ்வஸ்துவென்று உறுதிமொழி கூறி என்னனுபவத்தை உனக்கு வெளியிடு கிறேன். சிவமுகம் நோக்கிச் செல்லும் ராஜபாதைகளை சுட்டிக்காட்டுகிறேன். நீயே சென்று அடைந்து அதுவாக விளங்குவாய். யான் கூறுவதை கவனமாய்க் கேட்பாய். நீ நானென்றும், குருசிஷ்யனென்றும் ஜீவன் ஈச்வரனென் றும் பேததிருஷ்டி எதுவரை யுள்ளதோ அதுவரை யாரும் ஸ்வஸ்வரூபானுபவிகளாகார். பகுதி, விகுதி, இடைநிலை என்று சொல்வதைப்போல காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என மூவகையாய் நீ பிரிந்திருக்கிறுய். இம்மூன் றும் திரிபுடியென்று பெரியோரால் சொல்லப்படும். இம்

மூன்றும் ஏகசொரூபமாய் எப்பொழுது விளங்குமோ, அப் பொழுது அவ்விளக்கமே சிவம் எனப்படும். பரப்பிரம்ம சொரூபமாகிய நீயே ஜீவனுகிக் காண்பான் என்னும் பிர பஞ்சமாகிய காட்சிப்பொருள் என்னும் ஜீவனுக்கும் பிர பஞ்சத்திற்கும் சம்பந்தத்தை ஏற்படுத்திவைக்கும் அறிவா கிய காட்சியென்றும் பேதஸ்வரூபமானுய். இத்திரிபுடியே மாயையெனப் பேர்பெற்று ஸ்வஸ்வரூபத்தை அறியவொட் டாமல் மறைக்கின்றது. இத்திரிபுடி நீங்கும்வரை, அதா வது இத்திரிபுடியானத் ஏகமே வாத்விதீபம் ஆகும்வரை பிரத்தியட்சானுபவத்தில் அறிதல் கூடாது. காட்சியென்ப தாகிய அறிவு என்னும் பதம் உபயோகிக்கப் படுங்கால் அறிகிற வஸ்து ஒன்று, அறியப்படுகிற வஸ்து ஒன்று, ஆக இரண்டு வஸ்துவின் ஸ்தாபனம் நேரிடுகின்றது. எப் பொழுது இரண்டு வஸ்துக்கள் கருதப்பட்டனவோ அப் பொழுதே திரிகுணுத் மகமான பிரபஞ்சம் சிருஷ்டிக்கப் படுகிறது. ஆகையால் யதார்த்த வஸ்துவி னிடத்தில் அறிவு என்னும் பதம் நிஷ்பிரயோசனமாம். ஆகையால் நீ "சிவோகம்" என்னும் வார்த்தை மாத்திரமா யுள்ள நிச்சய ஞானத்தினுல் ஸ்வஸ்வரூபமாக விளங்கமுடியாது. ஆனுல் நான் முன்னொருதரம் கூறியுள்ளதுபோல மனமாகிற கண் ணுடியில் வஸ்துவின் பிரதிபிம்ப தர்சனம்செய்து வஸ்து வின் அகண்ட சச்சிதானந்தாதி லட்சணங்களை கனவில் ஏக சக்காதிபத்தியத்தை அனுபவித்தவன்போல அனுபவிக்க லாம். எக்காலத்தில் மனமாகிற கண்ணுடியானது உடைந்து நீ துவித பாவனையற்று விளங்குவாயோ, எக்காலததில் பேயர், பித்தர், பாலரைப்போல பிராரத்ததேகம் இருக்கும் மட்டும் உலகத்தினின்றும் வேறுபட் டிருப்பாயோ, அக் காலத்தில் தான் நீ சிவமாய் விளங்குவாய். உன்னைத்தவிற

வேறு வஸ்துவில்லாமல் நீயே இரண்டற்று பிரகாசிக்கும் பொழுது மனம் எங்கே? அறிவெங்கே ? ஆகையால் உனது மனம் என்னும் கண்ணாடியில் முதலாவது ஸ்வஸ்வ ரூபதர்சனம் செய்துபார். யான் கூறியுள்ள சச்சிதானந் தாதி லட்சணங்களை உனது யோக நிஷ்டையில் சாயாமாத் திரமாய் நீ கண்டு உண்மையோ அன்றோ என்று தெளிந்து கொள். பிரம்மவஸ்துவென்றும் ஆத்மவஸ்துவென்றும் சொல்லப்பட்ட சிவத்துக்கு "ஓம்" என்பதாக ஓர் நாமத்தை யிட்டனர் ஆன்றோர். வேதமாதர்வானவள் பரசிவ ஸ்வ ரூபத்தை விளக்கமுயற்சித்து சர்வசாஸ்திரங்களாலும் முடி யாமல் தனது முயற்சி வீணாய்ப்போயிற்றென்று சொல்லி கடைசியில் " ஓம் " என்று முடித்தாள். இந்த ஓங்கா ரத்தின் பெருமையை அளவிட்டுச்சொல்லுதல் யாவர்க்கும் அரிது. அகார, உகார, மகாரமென்று சொல்லப்பட்ட மூன்று அட்சரங்கள் கூட்டி சேர்க்கப் பெற்றது. இந்த மூன்று அட்சரங்களிலேயே சிருஷ்டி ஸ்திதி சம்ஹாராதி தொழில்களும், ஜாக்கிரஸ்வப்பன சுஷுப்பாதி அவஸ்தை களும், ஜீவேச்வர ஜகத்தும், ஞாதுரு ஞானஞேய மாகிய திரிபுடியும் காரண சூட்சுமஸ்தூல சரீரங்களும், பிராதிபாசி கவியாவாரிக பாரமார்த்திகமும், சகலமும் அடங்கி யிருக் கின்றன. இந்த ஓங்காரத்திலேயே வஸ்துவானது சப்தப் பிரமம் என்னப் பேர்வகிக்கும். ஓர் பெருஞ் சந்தையில் பலர் பலவிதமான இரைச்சலிட்டுக்கொண்டிருக்க, தூரத் திலிருந்து ஒருவன் அவ்விரைச்சலை கவனிப்பானாயின், சகல வித சத்தத்தையும் உள்ளடக்கி " ஓம் " என்ற சப்தமே கேட்கும். உள்ளிருந்து வெளிவருகிற சப்தமானது எப் பாஷையிலாயினும் சரியே எவ்விதத்திலாயினும் சரியே, ஓங்காரத்திலுள்ளடங்கிய என்றதற்கு இந்த திருஷ்டாங்

தமே சான்று. "In the first there was the word, and the word was with God, aud the word was God."
என்ற கிறிஸ்தவ வேத புஸ்தகத்தில் கூறப்பட்டிருக்கிறது. "Word" என்று குறிப்பிட்டது இந்த ஓங்காரத்தையே யாகும். நமது ஸ்ருதிகளும் "ஓம்தத்ஸத்" என்று, அதாவது "ஓம், அதுவே உள்ளது" என்று கோஷிக்கின்றன. "Word" அல்லது "ஓம்" என்ற லட்சியத்திற்கு அட்சரம் என்ற லட்சணத்தை கற்பித்தனர் மேலோர். அட்சரம் என்றால் அழிவற்றது அல்லது நித்தியமானது என்று அர்த்தம். இந்தச்சப்தப் பிரமவஸ்துவை அனுபூதியில் அடையும்பொருட்டே ஐந்து வயதாயிருக்கும் பாலிய பருவத்திலேயே அட்சராப்பியாஸம் என்று வித்தியாப்பியாசம் செய்விக்கிறார்கள். எழுத்துகளெல்லாம் அட்சரம் என்று சொல்லப்படுகின்றன. எவ்வித எழுத்தும் ஓங்காரத்தினது லட்சணமாம். நித்தியமான வஸ்துவை யடையும் பொருட்டு நியமிக்கப்பட்ட அட்சராப்யாசமானது லட்சியத்தை மறந்து அநித்தியமான வஸ்துக்களின் பேரிலேயே நாடப்படுகிறது. "ஓம்" என்ற இந்த ஒரு அட்சரமே பிரம்மவஸ்து என்று வேதங்கள் கோஷிக்கின்றன. உனக்கு இவ்விஷயத்தில் சந்தேகம் உண்டாகலாம். ஆயின் நான் இப்பொழுது சொல்லும் பிரகாரம் நீ அனுஷ்டித்து வந்தால் இந்த ஓங்காரத்தின் பெருமை உனக்குத்தானே விளங்கும். இரண்டு புருவங்களுக்கும் மத்தியில் மூக்கின் நுனியில் இடை, பிங்கலை என்ற இரண்டு நாடிகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு ஓடுகின்றன. இப் பின்னலினால் அவ்விடத்தில் ஓர் திரிகோணம் உண்டாகின்றது. இதற்கு வலதுபக்கம் சூரியமண்டலமென்றும் இடதுபக்கம் சந்திர மண்டலமென்றும் திரிகோணமானது அக்கினி மண்டல

மென்றும் பெரியோர் கூறுவர். இங்ஙனம் இருப்பதை முன்னிட்டே சாம்பசிவ மூர்த்தியானவர் முக்கண்ணனெனப் பேர்பெற்றார். தட்சிணாமூர்த்தி சொரூபமாய் பரமசிவன் யோகநிஷ்டை கூடிவிடவும் சமஸ்த சராசரங்களும் பிரம வஸ்துவினிடத்தில் லயித்திருக்க, தேவர்கள் பயந்து மகாதேவனது யோகநிஷ்டையை கலைக்கக்கருதி இவ்வனந்தம் கோடி பிரபஞ்சங்களிலும் தன்னரசு செலுத்திவருகிற மன்மதனை ஏவ அம் மன்மதனை நீறாக்கியது இந்நெற்றிக் கண்ணாலேயே. ஆகையால் இந்த திரிகோணமாகிய அக்கினி மண்டலமானது ஓங்காரப்பொருளுக்கு உரித்தானது. நீ "ஓம்"என்ற அட்சரத்தை இம் முக்கோணத்தின் மத்தியில் உன் மனதால் ஸ்தாபித்து சதா உன்மனமானது அதையே நாடியிருக்கட்டும். ஜனங்கள் இல்லாத இடமும் அல்லது சமயமும் இவ்வப்பாசத்திற்கு முக்கியமாம். உன் சகல இந்திரியத் துவாரங்களையும் அடைத்துவிடு. சகல இந்திரியங்களும் ஸ்வயம் பிரகாச ஸ்தலத்தில் வாசம் செய்யும் "ஓம்" என்ற சக்கரேஸ்வரனை நாடட்டும். உன் கண்கள் அதையே பார்க்கட்டும். உன் நாவானது அந்தர்முகமாக அதையே ஜெபம் செய்யட்டும். உன் செவிகள் அஜ்ஜெபத்தையே கேட்கட்டும். இவ்விதமாக நீ தியானம் செய்வாயானால் உன் மனமானது ஒரு கணத்தில் பல உலகாய் உதிக்கும். இந்த ஸ்வபாவத்தைவிட்டு ஒரேநிலையில் நிலாத்தீபம்போல் நிற்குமானால் அந்த நிமிஷத்தில் ஸ்வரூபத்தின் சாயையை தரிசிப்பாய். இதுவே ராஜயோகமெனப்படும்." என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே ஒருவன் வந்து, "ஸ்வாமி, எனக்கு மகாவாக்கியோபதேசம் செய்யவேண்டுகிறேன். நான் சகல சாஸ்திரங்களையும் ஆராய்ந்தேன். ஒரு மகானிடத்திலும் இம்

மகாவாக்கியோபதேசம் பெற்றேன். ஆயினும் எனக்கு தெளிவாய் விளங்கவில்லை. தயைசெய்து தெளிவிக்கப் பிரார்த்திக்கிறேன்" என்று நமஸ்கரித்து நின்றான். குருவானவர் அவன் அதற்கு அதிகாரி யல்லனென்று அறிந்து ஈஷணத்திரயங்களினின்றும் விடுபட்டாயோ, மானாபிமானங்களைத் துறந்தாயோ என்றார். அதற்கு அவன், "ஸ்வாமி, நான் சர்வ சங்க பரித்தியாகம் செய்து தேவேந்திரப் பட்டங் கொடுத்தாலும் திரணீகரிக்கப்பட்ட வைராக்கியத்தை உடைத்தாயிருக்கிறேன்" என்றான். குருவானவர் தனது சிஷ்யனைப்பார்த்து, "போய் சூட்டுக்கோலை நன்றாய் பழுக்கக் காயவைத்து உடனே கொண்டுவா" என்று சொன்னார். அங்ஙனமே சிஷ்யன் உடனேசெய்ய, குருவானவர் பழுக்க காயவைத்த அந்தக் கரண்டிக்கோலை கையில் வாங்கிக் கொண்டு உபதேசம் பெறவந்த மனிதனை அருகில் வரச் சொல்லி அவனது சரீரத்தில் சூடுவைக்கப்போனார். அப்பொழுது அம்மனிதன் பயந்து தூரச்சென்று நின்றான். குருவானவர் சூட்டுக்கோலை எறிந்துவிட்டு அம்மனிதனை மறுபடியும் அழைத்து, நீ தேகாபிமானம் விட்டவனாயிற்றே, இதற்கு அஞ்சி ஓடலாமோ" என்றார். அதற்கு அவன், "ஸ்வாமி, நான் எனக்கு முன் உபதேசம் செய்த குருவினிடத்தில் உடல், பொருள், ஆவி மூன்றையும் ஒப்புவித்து விட்டேன். இப்பொழுது இச்சரீரத்தினிடத்தில் எனக்கு அபிமானம் இல்லாவிடினும், குருவினிடத்தில் ஒப்புவித்து விட்டதால், குருவைச்சார்ந்த தாயிற்றே. குருவின் பொருட்களை காப்பாற்றவேண்டியது சிஷ்யனது கடமை யன்றோ ? " என்றான். மகான் அவனது குயுக்தியைக்குறித்து புன்னகைசெய்து, ஓர் கிழிந்த மிகவும் சிறிய கோவணத்தை எடுத்து அவன் கையில் கொடுத்து, இதை அணிந்துகொண்டு

மற்ற வஸ்திரங்களைக் களைந்தெறிந்துவிட்டு, நீ இப்பட்டணத்தை ஓர் சுற்று சுற்றி வருவாயானால் உனது பக்குவ லட்சணம் வெளியாகும்" என்றார். உடனே அவன் தான் உடுத்தியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்து எறிந்துவிட்டு இக்கந்தல் கோவணத்தைத் தரித்துக்கொண்டு சிறிது தூரம் சென்று மறுபடியும் சிறிது தூரம் பின் வந்து இவ்விதமாக சிறிது போகவும் பின் வரவும் ஆகவிருந்து கடைசியில் குருவினிடத்தில் வந்து, "ஸ்வாமி, ஓர் சிறிய துண்டு வஸ்திரமாவது கொடுக்கவேணும். இச்சிறிய கோவணத்துடன் ஸ்திரீகள் பார்க்கும் படியாகவும் ஊர்ஜனங்கள் ஏளனம் செய்யும்படியாகவும் எங்ஙனம் ஊருக்குள் போவது?" என்றான். அப்பொழுது மகானவர், "இன்னும் உனக்கு பரிபாகம் வரவில்லை யென்பது இப்பொழுது பிரத்தியட்சமாயிற்றல்லவோ! முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டதுபோல, நீயும் மகா வாக்கியோபதேசத்திற்கு ஆசைப்படுகிறாய். வேதவியாசரானவர் தனது புத்திரனாகிய சுகரையிட்டுக்கொண்டு ஜனக மகாராஜனிடத்தில் புத்திரனுக்கு உபதேசம் செய்விக்கும் பொருட்டு சென்றார். சுகரோ மாதாவின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்த நிமிஷமுதல் மாயைக்கு அஞ்சி பகிர்முகப்படாமல் அந்தர்முகமானவர் அப்பேர்ப்பட்ட சுகர்பின்னும் அதிதீவிர விரக்தராக விளங்கினார். பிதாவாகியவேதவியாசர் முன்னுமாகப் போய்க்கொண்டிருக்க, மார்க்கத்தில் ஓர் நதியில் சில தேவகன்னிகைகள் ஆடைகளைக் கரையில் களைந்துவைத்துவிட்டு நிர்வாணமாய் ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் வேதவியாசரைக் கண்டவுடன் சட்டென்று கரையேறி தங்களது ஆடைகளால் அங்கத்தை மறைத்துக்கொண்டார்கள். அவர் அப்புறம் சென்றதும், முன்போல நதியில் இறங்கி விளையாடி

க்கொண்டிருந்தார்கள். சுகர் கோவணமுமின்றி பிறந்த மேனியுடன் வந்தார். இந்த ஸ்திரீகள் அவரை நன்ருய்ப் பார்த்தும் சிறிதும் வெட்கப்படாமல் நதியிலேயே விளையாடிக்கொண்டிருந்தார்கள். இவற்றை தூரத்திலிருந்து கவனித்துக்கொண்டிருந்த நாரதரானவர் அந்த ஸ்திரீகளிடத்தில் வந்து, நீங்கள் வேதவியாசரைக்கண்டு வெட்கப்பட்டதும், சுகரைக்கண்டு லட்சியம் செய்யாததும் என்?" என்ருர். அதற்கந்த ஸ்திரீகள், "வேதவியாசர் தனது அங்கத்தை ஆடைகளால் மறைத்துக்கொண்டு இன்னும் பேதானுஷ்டானத்திலேயே யிருக்கிருர். சுகரோ பிரபஞ்ச ஞாபகம் சிறிதுமின்றி ஸ்வஸ்வ ரூபாராய்ச்சியில் இருக்கிருர். ஆகையால் நாங்கள் சுகர் வந்தகாலத்தில் களங்கமின்றி இருந்தோம்" என்ருர்கள். இதுபோல நீயும்மானுவமானத்தை நீக்கி உன்மனதானது வெயில் சகித்திடா புழுப்போல் வெம்பி சுகரைப்போல ஆவாயானுலன்ருே, நீ மகா வாக்கியோபதேசத்திற்கு அருகனுவாய் என்று அம் மனிதனை அனுப்பி விட்டார். சிஷ்யனுனவன் இவைகளையெல்லாம் கவனித்து வீண் வாசாஞ்ஞானத்தின் பலவீனமும் அனுபவ ஞானத்தின் தீரத்துவமும் நன்ருய் அறிந்து கொண்டு குருவைப்பார்த்து, "ஸ்வாமி, ராஜயோகம் என்று சொல்லப்பட்ட மார்க்கத்தை நன்ருய்ச் செப்பனிட்டுக் காட்ட வேணும் என்ருன்.

குரு.—அப்பனே கேட்பாய்! இந்த பிரணவ தியானத்தினுல் நீ ஸ்வஸ்வ ரூபத்தின் சாயையை தர்சிப்பாயென்று சொன்னேனன்ருே. மனதின் நிலைமையை உனக்கு முன்னமே.யேவிளக்கி யிருக்கிறேன். லட்சியத்தினிடத்தில் ஓர் விநாடி நேரமேனும் கட்டுப்படாது. நீ மகாவைராக்கியத்தால் கட்டிப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து

லட்சியத்தை நாடும்படி செய்தாலும், லட்சியத்தை நாடினது போல் அருகில் செல்லும். நீ சிறிது அயர்ந்து விட்டால் உனது வைராக்கியத்தை உருட்டிப் புறட்டிக் கீழேதள்ளி தான் மேலேறி நின்று உன்னை அதின் கைப் பறவைபோல் ஆட்டுவிக்கும். ஆகையால் மகா தீரனுயிருந்து நீ மனதை உன் வசப்படுத்தி நான் குறிப்பிட்ட லட்சியத்தினிடத்தில் பற்றச் செய்வாய். இங்ஙனம் சில நாட்கள் நீ திடமாய் அப்பியாசித்து வந்தால், அந்ததிரிகோணத்திற்குள் மின்னல் வெளிச்சம் போல் அடிக்கடி தோன்றி மறையும். இன்னும் சிலநாட் செல்ல சுடர்விட்டெரிவதுபோல் பிரகாசம் தோன்றும். பிற்பாடு மணியடிக்கிற சப்தம் போல் கேட்கும். பின் சௌந்தரிய வதிகளான அனேக கன்னிகைகள் வந்து செல்லுவதுபோல் புலப்படும். இவைகளில் மயங்காமலும் பயன் சித்தியாய் விட்டது என்று நின்றுவிடாமலும் மேலும் மேலும் விடா முயற்சியுடன் தியானம் செய்யச் செய்ய வெட்ட வெளி போல் பாழ் தோன்றும். பின்பு உனது சச்சிதானந்தாதி குணாதிசயங்களை நீ பிரத்தியட்சத்தில் பார்ப்பாய். இன்னும் கேட்பாய் ஞானபுத்திரா! சகல புவன சராசரங்களும் உன்னிடத்திலேயே உற்பத்தியாகி ஸ்திதி செய்து லயமாவதும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். நான் இரண்டொரு வார்த்தையில் சொல்லிவிட்டேன். நீயும் சரியென்று கேட்டுவிட்டாய். ஆனால் ஆயிரக்கணக்கான ஜனங்களில் ஒருவனே இம்மார்க்கத்தில் செல்ல முயற்சிப்பான். இப்படி முயற்சிக்கும் ஆயிரக்கணக்கான ஜனங்களில் சித்தியடைவது ஒருவனேயாகும். நீ இவ்வனம் நிஷ்டைக்குப் போகும்போது மனமானது முக்கியமான சத்துவகுணத்தினின்றும் மாறி தமோகுணமாகப் பரிணமித்து புருஷனுக்கு

சிற்றின்பம் கொடுக்கப் பிரியமில்லாமல் அவனை வெறுக்கப் பட்ட ஸ்திரீயானவள் எங்ஙனம் அவன் இச்சை படுங்காலத் தில் தனக்கு தலைவலியென்றும், ஜ்வரமென்றும் பாசாங்கு செய்து இசையமாட்டாளோ, அவ்விதமே உனக்கு சோம் பலைக் கொடுத்து உன்னை மயக்கிவிடும். நீ அதையும் ஜெயித் தாயானால் இன்னும் அநேக விஷயங்களையும் இம்மார்க்கத் தினும் சிரேஷ்டமாக காண்பிவிக்கும், நீ அதற்கும் உட் படாமல் போனால், உன்னை நித்திரையில் இழுத்துவிட்டு அதையே நீ இச்சிக்கப்பட்டது என்று உன்னை பிரமிக்கச் செய்யும். தவிர, உனது அப்பியாச காலத்தில் உலக ஜனங் களுடைய கவனத்திற்குட்படாமலும் நீ மயங்கும் பொருட் டும் அநேக ஆச்சரிய சித்திகளை யடைவாய். உன் மன மானது ஒரேநிலையில் நிற்குமானால் உலகத்தினது இறந்த கால, நிகழ்கால, வருங்கால சமாசாரங்கள் உனது மன தில் பிரதிபலிக்கும். இவைகளிலெல்லாம் மயங்கி விடாதே. இன்னும் அநேக விதமான கஷ்டங்களும் சுகங்களும் உண்டாகும். கஷ்டங்களில் வருத்தம் உற்றோ அல்லது சுகங்களில் குதூகலித்தோ நின்றுவிடாதே. உன் மனதானது ஓர் காந்தத்திற்குள் போட்ட ஊசி யைப்போல் இருக்கட்டும். இவ்விதமான இடைவிடா முயற் சியால் ஈற்றில் உனது சுவஸ்வ ரூபத்தின் சாயையை தர்சிப் பாய். இவ்வப்பியாசத்தின் சிலநாட் பழக்கமே உனது ஸவானுபூதியில் கொண்டுவந்து விடும். அக்கினியிடத்தில் சம்பந்தப் படுத்தப்பட்ட சகலமும் எங்ஙனம் எரிக்கப் படுமோ, அதுபோலவே உனது சஞ்சித கருமங்களை யடக் கியதும் சூட்சும சரீரமுமான மனமானது உனது பிராண வாக்கினியினால் நீறாகும். அவித்தை யென்றும் அஞ்ஞான மென்றும் சொல்லப்பட்ட உனதுகாரணசரீரமானது உனது

ஸ்வயரூபமான ஞானக்கினியினுல் நீருகும். பின்பு உனது ஸ்தூல சரீரமானது பிராரப்தகர்ம ரூபமாய் பிராரப்த கர்மம் நசிக்குமளவு மிருந்து பின்பு தானே மாயும். ஆகையால் வைராக்கிய சீலனே! நீ இம்மார்க்கத்தில் செல்வாய். நீயே சிவம் என்பது நன்ருய் விளங்கும். பின்பு நீயே சிவமாய் விளங்குவாய்.

சிஷ்யன்:—சிவமே தானுய் விளங்குவோர்களின் லட்சணமென்ன? சிலர் வைத்தியக்காரர்களைப் போலவும், சிலர்சதா சமாதிபஸ்தர்களாகவும், சிலர் தாமரை இலையில் தண்ணீர்போல உலக வியவகாரத்தில் இருப்பவர்களாகவும் பற்பல விதங்களாக நான் அறிகிறேன். இவர்களில் யாவர் உண்மையானவர்கள்.

குரு:—அப்பனே! தானே சிவமாய், சத்திய ஞானனந்த சொரூபமாய் விளங்குபவர்களுக்கு என்ன லட்சணங்களைக் கற்பிக்கலாம். சத்திய ஞானனந்தம் என்ற லட்சணத்தை உலகத்தவர் கூறிய போதிலும், அவ்வி லட்சணங்களையும் மீறி வாக்குக்கெட்டாமலும் மனதிற்கெட்டாமலும் வஸ்துவானது விளங்குகிறது. ஆகையால் " அவர்களது" என்று சொல்லப்படுகிற ஸ்தூல சரீமானது ஜகதீச்வரியாய் பிரம்மவஸ்துவினது அற்பாம்சமாய் விளங்குகிற மகா மாயா சக்தியினது திருவிளையாடல்களுக்கு உட்படுத்தப்பட்டு பிராரப்தகர்மம் நசிக்குமளவும் ஆடி ஓடிக்கொண் டிருந்தாலும் இருக்கும், பெரும் பாறையைப்போல சலனமற்று இருந்தாலும் இருக்கும். ஓர் கடையில் வியாபாரி எனப் பேர்பெற்று யிருந்தாலும் யிருக்கும். ஓர் ராஜ்ஜியத்தை யாளும் ராஜன் எனப் பேர்பெற்று யிருந்தாலும் இருக்கும். சகல சரீரங்களும் மகாசக்தியின் ஆக்ஞைக்கு உட்பட்டன. ஆகையால் ஸ்தூல சரீர ரூபமாய் இருக்கப்பட்ட

பிராரப்தகர்மம் நசிக்குமளவும் இங்ஙனம்தான் இருக்கும் என்று யாவராலும் சொல்லவொண்ணுது.

சிஷ்யன்:—இப்பொழுது நன்றுய் அறிந்தேன்; ஆனுல் ஸ்வாமி, மாயையென்றும், அவித்தையென்றும் இரண்டு பதங்களை அடிக்கடி பிரயோகிக்கிறீர்கள். மாயையில் பிரதிபிம்பம் ஈஸ்வரனென்றும் அவித்தையில் பிரதிபிம்பம் ஜீவனென்றும் அறிந்தேன். ஆனுல் நீயே ஜீவன் என்றும் நீயே ஈஸ்வர னென்றும் சொல்லுகிறீர்கள். ஆகையால் இவ்விரண்டு பதங்களுக்கும் தம்மில் உள்ள வித்தியாசம் விளங்கவில்லை.

குரு:—மாயையென்ருலும் அவித்தையென்ருலும் ஒன்றேயாகும். மாயையை வித்தையென்றும் கூறுவர். ஆயின் வித்தையென்பதும் ஒன்ருகுமென சந்தேகிக்கலாம். அவித்தையென்பது வியஷ்டி சமஷ்டிபேதமே அவித்தை, மாயை எனப்படும். ஒன்றின் சொரூபத்தை மறைத்தலால் அவித்தையெனவும் பலவின்சொரூபத்தை, மறைத்தலால் மாயையெனவும் படும். ஒருவன் ஓர் இழிவான செயலைச் செய்வாணுயின் உலகினர் அவனை குற்றவாளியென்று சொல்லி தண்டனைக்குள்ளாக்குவர். அதே செயலை ஈஸ்வரன் செய்ததாக கற்பித்து திருவிளையாடலெனப் பெயரிட்டு உலகினர் கொண்டாடுவர். ஓர் செயலேகுற்றமென்றும், திருவிளையாட லென்றும் எங்ஙனம் பெயர்பெற்றதோ, அங்ஙனமே ஓர் சக்தியே அவித்தையென்றும் வித்தையென்றும் பெயர்பெறும். வித்தைக்கு அறிவு என்று அர்த்தம். அவித்தைக்குபேதப்பட்ட அறிவு அல்லது தப்பான அறிவு என்று அர்த்தமேயொழிய அறியாமை யென்று அர்த்தமில்லை. பொருளல்லாததை பொருளாகக்கருதும் அறிவே அவித்தையெனப்படும். பொருளை பொருளாக சாயா மாத்திரத்தில்

அறிவிக்கும் அறிவே வித்தை எனப்படும். அறியாமை என்னும் பதத்திற்கு இருப்பேயில்லை. நீ வித்தையாகிய மெய் உணர்வினாலே ஈச்வரனெனப்பெயர்பெற்றாய். காணப் பட்ட இப்பிரஞ்சமானது வித்தையின் காரியமாகும். வித் தியாசக்தி மோட்சத்திற்கு அனுகூலமாயுமிருக்கும். அவித் தியாசக்தி பந்தத்தில் பிணைத்துக் கட்டும். ஆயினும் வித் தியா சக்தியே மோட்சத்தை அளிக்க வல்லதல்ல. முன் உனக்கு மாயையைப்பற்றி சொல்லியபொழுது இரண்டு சக் திகள் ஒன்றோடொன்று எதிர்த்து ஊடுருவி நிலைகலங்கச் செய்வதே மாயையின் தன்மை என்று கூறியிருப்பதை ஞாபகப் படுத்திக்கொள். மாயையானது வித்தியாசக்தி யெனப் பேர்பெற்று ஜீவனை கைதூக்கிவிட முயற்சிப்பதும் அதுவே அவித்தியா சக்தியென பெயர்பெற்று பந்தத்திற் குள்ளாக்குவதும் ஆம். சாதாரணமாக சகல மனிதரும் அவித்தையால் கட்டப்பட்டவர்களாம். தானேசிவம் என்று குரு, ஸ்ருதி, யுக்தி, அனுபவங்களினால் ஐயம் அறத் தெளிந்து ஆத்மதர்சனம் செய்து ஜீவன்முக்தர்களா யிருப் போர்கள் ஈஸ்வரனுக்கு சமானமாய் மாயா சகிதர்களாம். தானே சிவமாகி இரண்டற்று விதேகமுக்திப் பதத்திலிருப் போர்கள் மாயா ரீதர்களாம். ஆகையால், மைந்தனே, வித்தை யென்பதும், அவித்தை யென்பதும், மாயை யென் பதும் ஒன்றேயாகும்.

சிஷ்யன் :—அப்படியாயின், குருஸ்வாமியே, மாயை யே ஜீவனை கரையேற்றுவதற்கு உபாயமாயிருக்க, அதனை வெறுப்பதென்னை? அதையே கடைப்பிடித்து வஸ்துவை யறியலாமன்றோ?

குரு :—ஆம். ஸ்வஸ்வ ரூபானுபூதியை யடைதற் குள்ள அநந்தம் கோடி மார்க்கங்களில் இதுவும் ஒன்றே

யாகும். இதுவே சாக்தேயமெனப் பேர்வகித்து சக்தியையே ஆதாரமாகக் கொள்பவர்களது மார்க்கமாம். மாயையே ஆதிசக்தி, பராசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என பலபேர் வகித்து பலவிதமான திருவிளையாடல்களைசெய்து ஜீவனை பிரமானந்த சாகரத்தில் கொண்டு சேர்க்கவல்லது. பொருளை பொருளாக அறியும் அறிவே மாயை யெனப்படும் என்று சொன்னேனன்றோ? பலனைப் பழக்கத்தினால் உண்டான இவ்வறிவின் லாபமே சிவம் எனப்படும். இதுவே ஞானயோகம் என்று பெரியோர் கூறுவர். மாயையை வித்யாசொரூபத்தில் தியானித்தால் அதுவே ஞானயோகமாம். பெரும்பாலார் இந்நுட்பமான உண்மையை கவனியாமல் மாயையினது பயங்கரமான குணாதிசயங்களினால் அவித்தியா சொரூபத்தில் காளி யென்றும் துர்க்கை யென்றும் பெயரிட்டு தியானித்து வீடு பெற முயலுகிறார்கள். இம்மார்க்கமும் சிவத்தினிடத்தில் இட்டுச்செல்வதே. ஆயினும் மகா பயங்கரமானது. இவ்வழியில் செல்ல முயற்சிப்பவர்களில் கோடானு கோடியில் ஒருவரேனும் சித்தியடைவது மகா துர்லபம். ஆகையால் உனது ஆத்ம பராக்கிரமத்தால் நீ மாயையை அடக்கியாள முயற்சிப்பாயேயானால், சீக்கிரத்தில் சிறிதும் பிரயாசமின்றி சிவமாக விளங்குவாய்.

குருவும் சிஷ்யனுமாக சிலநாட்கள் கழித்து சஞ்சாரம் செய்யப் புறப்பட்டார்கள். ஓர் ஊரில் ஓர் பெரும் சந்தையின் வழியே போகும்படி நேரிட்டது. ஓர் கிழிந்த கோவணத்தை மாத்திரம் தரித்துக்கொண்டு போகப்பட்ட குருவைப்பார்த்து அங்கிருந்த ஜனங்கள், "இதுஎன்ன நூதன சிருஷ்டி! ஓர் பெரும் மிருகமானது வருகின்றது. ஆயிரக்கணக்கான ஸ்திரீ புருஷர்கள் கூடியுள்ள இச்சந்தையில்

கொஞ்சமும் வெட்கமின்றி செல்லுகிறதைப்பார். இப்பேர்ப்பட்ட மடையனும் உலகத்தில் உளனே!" என்று அம்மகானை திட்டி அடித்து கீழ் விழுந்த மகானை காலைப் பிடித்து இழுத்து சந்தைக்கு வெளியே எறிந்துவிட்டார்கள். குருவின் ரட்சையின் நிமித்தம் சிஷ்யனும் வெகு வருத்தத்துக்குட்பட்டான். பிற்பாடு இருவரும் சில தூரம்போய் ஓர் சாவடியில் உட்கார்ந்தார்கள். சிஷ்யன் பொறுக்கமுடியாத விசனத்துடன் அழுது குருவின் பாதார விந்தங்களில் விழுந்து நமஸ்கரித்து, "என்னப்பனே, சத்திய ஞானனந்த மாரி பொழியும் சிவ்வர்ஷமே, தங்களுக்கு இப்பேர்ப்பட்ட துன்பம் நேரிட நான் கண்ணுல் பார்த்திருந்தேனே! நான் இப்பொழுது திரும்பிப்போய், அச்சந்தை ஜனங்களுடன் சண்டைசெய்து உயிர் விட்டுவிடுகிறேன். எனது திரேகத்தில் எனது உயிர் தரிக்கவில்லை" என்று புறப்பட்டான். அப்பொழுது

குரு:—மகா புத்திசாலியாகிய உனக்கு இப்பேர்ப்பட்ட ஆத்திரம் உண்டாகலாமோ! மலை கலங்கினுலும் மனம் கலங்கலாமோ! எல்லாம் மகா மாயாசக்தியின் திருவிளையாடலாகும். ஸ்தூல சரீரத்தை சித்திரவதை செய்தகாலத்தும் மனமானது ஸ்வஸ்வரூபத்தை விட்டுப்பிரியலாமோ! ஓர் பாத்திரத்தின் ஓர் பக்கம் கோணலாயும் ஓர் பக்கம் உயர்ந்தும் எப்படி யிருந்தாலும் தண்ணீரானது அதினுடைய கோணலையும் உயர்வையும் அனுஷ்டிக்காமல் எப்படி தான் சமத்துவத்தை யடைந்திருக்குமோ, அதுபோலவே உன் மனமானது கழுத்தில் புஷ்ப மாலைகளைப் போட்டு பல்லக்கிலேற்றி உலகத்தவர் உனக்கு பாதபூசை செய்தகாலத்தும் உனது சரீரத்தை கிழேதள்ளி மிதித்து, துவைத்து

இரும்பாணிகளால் சல்லடைக் கண்களாக துளைத்த காலத்தும்சமத்துவத்தை யடைந்திருக்கவேண்டாமோ?

'தன்வினை தன்னைச்சுடும்' என்றதை நீ கேட்டதில்லையோ? ஒருவன் உனக்கு ஓர் வெகுமதி கொடுக்க, நீ அதை வாங்க மறுத்துவிட்டால், அது யாரைச்சேரும்? கொடுத்தவனையே சேருமன்றோ? அதுபோலவே நீயும் சுகதுக்கங்களையும் மறுத்துவிட்டால், அதற்குக் காரணமாயிருந்தவர்களைச் சேரும். இவ்வீரேழு பதினாலு உலகங்களும் ஒன்று சேர்ந்து வந்தாலும் உன்னை அசைக்கவல்லதோ? உன்ஸ்வரூபம் சிவமாயிருக்க, ஸ்தூல சரீரத்தை ஏன் உனது என்று அபிமானித்து துக்கத்திற்குள்ளாகிறாய்? இல்லாத வஸ்து எப்போழுதும் இல்லாததே. இல்லாததை உள்ளதாக கற்பித்து கஷ்டப்படுகிறாய். உன்னிடத்திலிருந்தே இல்லாதது என்று ஒன்று கற்பிக்கப்பட்டது. அது உள்ளதாகவே பாவித்தாய். இல்லாத வஸ்துவின் கற்பனையும் அதை உள்ளதாகக் கோரும் பாவனையுமே அவித்தை யெனப்பேர் பெற்று உன்னை அமிழ்த்திவிட்டது. எவ்வளவு அமிழ்த்தினாலும் நீ அதையே நம்புகிறாய். எவ்வளவோ கல்பகோடி காலங்களாக நீ அவ்வித்தையினால் ஜெனன மரணங்களுக்குட்பட்டாய். பிறந்தும் இறந்தும், இறந்தும் பிறந்தும் இவ்விதமான சுழலுக்குட்பட்டு சுற்றிச் சுற்றி நிலைகலங்கினாய். இதற்கு காரணம் என்ன என்று நீ ஆராயவில்லை. கீழும் மேலும் தெரியாமல் நிற்பதற்கும் முடியாமல் ஒரு மனிதன் சுற்றுவது மயக்கத்தினாலன்றோ? அதுபோலவே அவித்தையாகிய மயக்கத்தினால் நிலையில்லாமல் சுற்றிச்சுற்றி துன்பப்படுகிறாய் என்று கண்டாயில்லை. காரணசூட்சுமஸ்தூல சரீரங்களை நீஅன்றுஅபிமானித்தாய். இவைகளினின்றும் நீ வேறுபட்டிருந்தும் நீ அறியவில்லை.

அவித்தையானது கர்மரூபத்தைத் தரித்து உனக்கு சரீராதிகளைக் கொடுத்து உன்னை மயக்கி தனக்குள் அடக்கியிருக்கின்றது. ஆகையால் நீ இதைக் குறித்து வருத்தப்படவேண்டாம். நீ சிவமாதலால் சர்வ பிரபஞ்சமும் நீயேயாகும். நீ துன்பத்துக்குள்ளானதாக கருதினால் அது உன்னாலேயே யாகும். ஆதலால் உனது யோகாப்பியாசத்தில் சதாசர்வதா காலமும் கூடியிரு.

சிஷ்யன் :—ஸ்வாமி, கர்மத்தினால் அடிக்கடி சரீரங்களையடைகிறேனென்றும், எத்தனையோ பிறவிகள் எடுத்துவருகிறேன் என்றும் தாங்கள் சொன்னீர்கள். இப்பிறவியே எனது அனுபவசித்தம். வேறு பிறவிகள் இதற்கு முன்னாவது இனிமேலாவது உண்டு என்று எனக்கு நம்பிக்கைதாவில்லை. ஆகைப்பால் இந்த கர்மதத்துவத்தை தெளிவாய் உரைக்கப் பிரார்த்திக்கிறேன்.

குரு :—புதல்வனே, கேட்பாய்: காரணத்தில் அநாதியவித்தை யென்று சொல்லப்படுவது எதுவோ அதுவே சிறிது முதிர்ந்து சூட்சுமத்தில் கர்மமென்றும், அதிக முதிர்ச்சியால் ஸ்தூலத்தில் சரீரமென்றும் பெயர்பெறும். இக்கர்ம சக்தியில்லாவிடில் பிரபஞ்சமேயில்லை. ஓர் விதையிலிருந்து முளைகிளம்பி பின் மரம் உண்டாகி பிறகு அம்மரத்தினின்று எத்தனையோ மரங்களின் உற்பத்திக்கு காரணமாய் அனேகம் விதைகள் உண்டாவதுபோல, அவித்தையாகிற விதையிலிருந்து சூட்சும சரீரமாகிற முளைகிளம்பி பின் ஸ்தூல சரீரமாகிற மரம் உண்டாகி பிறகு அச்சரீரத்தின் மூலமாய் அனேக சரீரங்களுக்குக் காரணமான அநேக கர்மங்கள் ஏற்படுகின்றன. மகா சக்தியானவள் இக்கர்ம நியதியாலேயே தனது பிரபஞ்சத்தில் அரசு செலுத்துவாள். எங்ஙனம் இன்ன குற்றஞ் செய்தவனுக்கு இன்ன பலன்

என்று ராஜாங்க சட்டங்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ, அதுபோலவே இன்ன கர்மஞ் செய்தவனுக்கு இன்ன பலனென்று கர்ம நிதியானது ஏற்பட்டிருக்கின்றது. சட்ட பரீட்சையில் தேறியவர்களுக்கே அவ்வியவகாரம் தெரியுமாபோல, கர்மநியதியும் மாயையில் தேறிய மனுச்சக்கரவர்த்தி போன்றவர்களுக்கே தெரியும். கர்மம் என்பது செய்யப்படும் செய்கை என்று உலகினர் கூறுவர். ஆயின் ஸ்தூலத்தில் செய்கையாக வெளிப்படுமுன் சூட்சுமத்தில் அந்தக்கரணத்தில் நினைவு ரூபமாக வாசனை தோன்றும். இந்நினைவு உடனே செய்கையாக வெளிப்படாவிட்டாலும் நாளாவர்த்தியில் தானே முதிர்ந்து வெளிப்படும். ஆகையால் இந்நினைவும் கர்மமேயாகும். மனதினாலோ, வாக்கினாலோ, காயத்தினாலோ, அவரவர்கள் செய்த கர்மங்களுக்குத் தக்கவாறு அவரவர்கள் அனுபவிப்பார்கள். செய்யும் கர்மங்களை மூன்றுவகையாகப் பிரித்தனர் மேலோர். அவை சஞ்சிதமென்றும், பிராரப்தமென்றும், ஆகாமியமென்றும் சொல்லப்படும். ஒவ்வோர் பிறவிகளினும் செய்யும் கர்மங்களை சூட்சும சரீரமாகிய சஞ்சிதமென்று அவைகள் பக்குவப்படும் பொருட்டு மாயையானவள் சேர்த்து வைத்திருப்பாள். ஓர் பிறவியில் அனுபவிக்கும் பொருட்டு சரீரரூபமாகவும், நிறரூபமாகவும், குணம், அறிவு, செய்கை, ஆரோக்கியம் ஆகிய ரூபமாகவும் சில கர்மங்களை கர்மநியதியை அனுசரித்து தனியே எடுத்துவைப்பாள். இதுவே பிராரப்த கர்மம். இன்னும் பிராரப்த கர்மத்தை அனுபவிக்கும் போது அம்மாயையானவள் இச்சாசக்தியெனப் பேர்பெற்று அனந்தம்கோடி பிறவிகளுக்குக் காரணமாக ஆகாமியமென்ற கர்மங்களைச் செய்யும்படி உன்னை ஏவி முன்பு உனது சொத்துப்போல் மூட்டைகட்டி வைத்திருக்கும் சஞ்சிதத்

தில் சேர்ப்பாள். இங்ஙனமே உனக்கு சிறிதும் நிலையில்லா மல் நீ பிறந்தும் இறந்தும் தவிக்கின்றாய். கர்ம நியதியா னது சாதாரண மனிதர்களால் அறியத்தக்கதல்ல. வெகு நுட்பமானது. ஒவ்வொரு ஜீவனுக்கும் ஸ்வஸ்வரூபத்தை அறியவொட்டாமல் இன்பமென்று துன்பத்தையே கொடு த்து மறைக்கின்றது. ஓர் விநாடி நேரத்திற்குள் அநந்தம் கோடி சரீரங்களைக் கொடுக்கும்; நிறபேதங்களை உண்டாக் கும். சுருக்கத்தில் இக்கர்மசக்தியே (கிரியாசக்தி) மாயை யாம். உனக்கு இப்பிறவியைத் தவிர வேறு பிறவிகளில் நம்பிக்கை விழவில்லை யென்றும் எங்கனம் இருத்தல் கூடுமென்றும் சொன்னாய். நீ இக்கர்ம நிதியின் பிரமா ணத்தைக் கைக்கொள்ளாவிட்டால், சரீரம், நிறம், வடிவம், செய்கை, குணம், ஆரோக்கியம் முதலாகிய இவைகள் ஜீவ கோடிகளுக்குள் பேதப்பட்டிருப்பதற்குக் காரணமென்ன? பெற்றோர் காரணம் என்று சொல்வாயானால், பெற்றோர் பழுதற்ற அங்கம் உள்ளவர்களாகவும், வெள்ளை நிறத்தின ராயும், அதிசுந்தரர்களாயும், புண்ணியவான்களாயும், சத் துவகுணப்பிரதானர்களாகவும் ஆரோக்கிய சரீரிகளாகவு மிருக்க, புத்திரர்கள் பிறவிக்குருடராகவும் காக்கைபோன்ற கருநிறத்தினராகவும் அவலட்சணம் உள்ளவர்களாகவும், மகா துஷ்டர்களாகவும், தமோகுணப்பிரதானர்களாகவும், குஷ்டரோகிகளாகவும் பிறப்பதற்கு காரணமென்ன? இன் னும் ஒரே பெற்றோரின் புத்திரர்களில் ஒருவன் புத்திசாலி யாயும் ஒருவன் மடையனாயும் இருப்பது என்? சிலர் மிக வும் சிறிய வயதிலேயே அதிவிவேகிகளாவதும் சிலர் தலை யெல்லாம் நரைத்து பழுத்துவிட்டாலும் மூடர்களா யிருப் பதும் என்? இதெல்லாம் ஈஸ்வரச்செயல் என்று சொல் வாயானால் சர்வலோகசரண்யனாய் அவரவர் கர்மங்களுக்குத்

தக்கவாறு பலன்களை யளித்து அதிநியாயாதிபதியாய் விளங்கும் ஈஸ்வரனைப் பழித்த குற்றம் உன்னைச் சாரும். அல்லது உண்மையாகவே, அப்படி ஒரு ஈச்வரன் இருப்பானுயின் பிரபஞ்சமானது நிலைகலங்கி கலகம் செய்து அந்த ஈஸ்வரனைக் காலால் மிதித்து தேய்த்துவிடும். கொடுங்கோலரசு செலுத்தும் ஈஸ்வரனுக்கு பிரபஞ்சம் கீழ்ப்படியுமோ? நீ மாதா பிதாக்கள் புணரும் சமயத்தை காலசக்தியென கூறுவாயாயின், அதே காலத்தில் புணர்ச்சி செய்யும் மற்ற மாதா பிதாக்களுக்கும் அந்த லட்சணமுடைய புத்திரர்கள் பிறக்கவேண்டும். தவிர, புணரும் சமயத்தில் பெற்றோர் எப்படி நினைக்கிறார்களோ அப்படி புத்திரர்கள் உண்டாவார்களென்று சொன்னுல் குணம், செய்கை, அறிவு, அழகு முதலியவைகளில் ஏதாவது ஒன்றையே நினைக்க முடியுமே ஒழிய புத்திரனுடைய சகல லட்சணங்களையும் நினைக்கமுடியாது. இன்னும் ஆணும் பெண்ணும் அல்லாத அலிகள் பிறக்க வேண்டுமென்ற இச்சை சிறிதுமில்லாவிடினும் அம் மாதா பிதாக்களுக்கு ஏன் அலிகள் பிறக்கின்றனர்? ஆகையால் குழந்தாய், கர்மசக்தியே காரணமாய் பிரபஞ்சத்தை தரித்து வருகின்றது. அப்படியாயின் ஏன் மற்ற பிறவிகளை யறியமுடியவில்லை என்று நீ கேட்கலாம். நீ இப்பிரபஞ்சத்தில் முன்னோட்டமாகவே ஓடுகிறுய். பின் திரும்பிப் பார்ப்பதில்லை. அல்லது மாயையானது உன்னை முன் பக்கமாகவே தள்ளிக்கொண்டு போகிறதே தவிர பின் பக்கம் பார்க்க விடுவதில்லை. சிறிது திடவைராக்கிய சித்தத்துடன் மாயையை எதிர்த்து பின்புறம் பார்ப்பாயானுல் நீ எடுத்த ஜென்மங்களெல்லாம் தெரியும். இதில் சந்தேகமில்லை. நான் சொல்லியிருக்கிற ராஜயோகாப்பியாச காலத்தில் நீ எடுத்த பிறவிகள் பிரதிபலிக்கும். அப்பொழுது

அறிவாய். உலகினர்க்கு எங்ஙனம் அவர்கள் சரீரம் இல்லை யென்றாலும் சரீராபிமானத்தைவிட்டு நீங்கார்களோ, அது போல அவ்வளவு நிச்சயமாயுள்ள உனது யதார்த்த ஸ்வ ரூபமே மறதியால் மறைபட்டிருக்கும்பொழுது அலைகளைப் போல் வந்து வந்து போய்க்கொண்டிருக்கும் பிறவிகள் மறக்கப்படாமல் போகுமோ? தவிர, இந்த ஜென்மத்தி லேயே இதுவரை நீ செய்த செய்கைகளில் அநேகம் மறக் கப்படவில்லையோ? ஆகையால் மறதியினாலேயே உனக்கு உனது ஜென்மங்கள் விளங்கவில்லை. ஆதலால் யோகாப் பியாசம் ஆகிய பிரயத்தனத்தால் அவைகள் உனது ஞாப கத்துக்கு வரும். உலகத்திற்கு அக்கர்ம சக்தியும் புநர் ஜெனனமுமே ஆதாரமாகும். சகல மதஸ்தரும் இதை ஒப் பினர். இப்பொழுது இதுவரையில் கர்மதத்துவத்தை சுருக்கமாய்ச் சொன்னேன். இனிமேல் இப்புநர் ஜென னத்தினின்றும் விடுபடும்படியான மார்க்கத்தைச் சொல்லு கிறேன். நீ உலகத்தில் கர்மஞ் செய்யாமல் இருக்கமுடி யாது. ஆனால் இவ்விதமாய் கர்மம் செய்வது யென்று அறிந்து செய்வாய். இம்மார்க்கமே கர்மயோக மெனப் படும். உன் மனதினின்றும் ஆசையை அகற்று. செய்யப் பட்ட கர்மத்தில் பலனை இச்சிக்காதே உனது ஸ்வரூபமா னது மாயையால் அசைக்க முடியாததென்று நிச்சயமாய் அறிந்துகொள். உனது காரண சூட்சுமஸ்தூல சரீரங்கள் மாயையின் ஆதீனமென்றும், ஆகையால் அவளால் எப்படி வேணுமோ அப்படி ஆட்டப்படுவன வென்றும் தெரிந்து கொள். ஒரு கர்மம் செய்யுங்காலத்தில் உனக்கும் அக்கர் மத்திற்கும் உள்ள பற்று சிறிதும் இல்லாமல் நீக்கி ஜெகன் மாதா வெனப்பட்ட மகாசக்தியால் பிரேரபிக்கப்பட்டு உன் மனமானது நினைக்கின்றதென்றும் உன் காசாணுதியவயவங்

கள் செய்கின்றனவென்றும் உறுதியாய் எண்ணங்கொள். அப்பொழுது கிரியாசக்தி யெனப் பேர் பெற்ற மாயையே இப்பொழுது ஞானசக்தி யெனப் பேர் பெற்று உனக்கு உதவி புரியும். வெகு சுலபத்தில் சொல்லிவிட்டேன். ஆனால் ராஜயோகம் எவ்வளவு கடினமென்று சொன்னேனே அவ்வளவு கடினமானது இதுவும். ஆசையைக் களைந்தவன் யாவன்? மண், பெண், பொன், கீர்த்தி, அதிகாரம் முதலிய பலனைக் கருதாமல் எவன் ஒரு காரியத்தைச் செய்கிறான்? இவ்வப்பியாசத்தில் நீ பழகித் தேர்ந்துவிட்டால் ஆசையாகிய ஆட்டமும் நின்று இச்சாரூபமாகிய அழுக்கும் களையப்பட்டால் அந்தக்கரணமானது நிர்மலமாகி ஆத்ம சொரூபம் தானே பிரதிபலிக்கும். அடையும் பலன் ஒன்றேயாகும். ஆகையால் இக்கர்மயோகமும் ஸ்வானுபூதியில் சேர்ப்பிக்கும் ராஜ பாதைகளில் ஒன்றேயாகும்" என்று சொல்லிவிட்டு, அப்பனே, உன் மனமானது இந்த தத்துவசோதனைகளில் புகுந்து வீணே கஷ்டப்படவேண்டாம். ஏதாவது ஒரு மார்க்கத்தில் செல்லுவாய். நான் கூறிய ராஜயோகமே உனக்குத் தகுந்தது. அதை அப்பியசிப்பாய். உலகத்தவருடன் வீண் வாதாடியும் அநேகம் புஸ்தகங்களை படித்தும் என்ன பயன்? வாழ்நாள் வீண் நாளாகக் கழியுமேயன்றி ஸ்வானுபூதியில் கொண்டு சேர்ப்பிக்க வல்லதேன்? இவ்வளவு நேரம் சொல்லிவந்த கர்ம சக்தியும் புனர் ஜெனனமும் வாஸ்தவத்தில் ஏது? உலகத்தவருக்கு உண்மைபோல் தோன்றினாலும் இல்லாததேயாகும். ஆகையால் இவ்விஷயங்களைப் பற்றியுள்ள சிந்தனை வியர்த்தமாம். ஆகலால், இவைகளை மறந்துவிடு. "சிவோகம்" என்று சொல்லியும் நினைத்தும் ராஜயோக மார்க்கத்தில் நிற்பாய். நீ சிவம் என்பதில் சந்தேகமே யில்லை.

சான்றோர் அவரவரது அனுபவத்தில் அறிவார். கடவுள் முன்னொரு காலத்தில் ஓர் தீர்க்கதர்சிக்குமுன் தோன்றி, பெயர் 'I am that I am,' அதாவது (நானுயிருக்கிற நானே யிருக்கிறேன்) என்று சொன்னதாக கிறிஸ்துவ வேத புஸ்தகத்தில் கூறப்பட்டுளது. எல்லாம் நானு யிருக்கிறேனென்றும் என்னைத்தவிர வேறொன்றும் இல்லையென்றும், அதாவது சிவோகம் என்ற ஸ்வானுபூதியைத் தெரிவித்தார். "என்னைத்தவிர மற்றிங்கேதுமில்லை என்னுணே, பொன்னைத் தவிர விலாப்பூடணம்போல், பொன்னையுருவேறுக்கிப் பேருரைத்த வேற்றுமைபோல், நம்மையும் அவ்வாறு பகுத்துரைத்தோமால்" என்றார் ஓர் மகான். ஆகையால், ஞானபுத்திரா, வேறு சிந்தனையில்லாமல் சிவமாய் விளங்க யத்தனிப்பாய்.

சிஷ்யன் :—ஸ்வாமி, சாஸ்திரங்களை ஆராயவேண்டாமோ? வேதசாஸ்திரங்களினாலன்றோ அறிவு விர்த்தியாவது? அறிவு அபிவிர்த்தி யாகாவிட்டால் எங்கனம் ஸ்வானுபூதி யுண்டாகும் ?

குரு :—விசாரதீரனே, கேட்பாய் : தீவிரதர முமுட்சுவுக்கு சாஸ்திர ஆராய்ச்சி அவசியமில்லை. வீண் சாஸ்திராராய்ச்சியானது ஒன்றைப் பலவாகக் கருதி பயனற்ற குதர்க்கவாதங்களுக்கு இடம் உண்டாக்கும். ஸ்வானுபூதியடைவதற்கு சிரத்தையே முக்கியமாம். குருவினது உபதேச மொழிகளில் சிரத்தையும் விஸ்வாசமுமே கரை சேர்ப்பிவிக்கும். விஸ்வாசம் இன்றிய சாஸ்திராராய்ச்சியானது வீண் கர்வத்தில் கொண்டுவந்துவிட்டு உனக்கு மனக்குழப்பத்தை உண்டாக்கும். சாஸ்திராராய்ச்சியே போதுமென்று சொல்பவர்கள் சற்றும் அறியாதவர்கள். அளவற்ற சாஸ்திரங்களை ஆராய்ந்த அநேகம் பண்டிதர்கள் இருந்தாலும்

அவர்களை ஞானிகளென்று வேதமும் சொல்லவில்லை. பிரத்தியட்சத்தில் உலகமும் ஒப்புக்கொள்ளவில்லை. உலகத்தி லுள்ள புஸ்தகங்களை யெல்லாம் படித்து அதனாலுண்டான அறிவை மூளையில் வைக்க இடமில்லாமல் நுழைத்து கலங்கிக்கொண்டிருக்கும் இவர்களை ஞானிகள் என்று சொல்லலாமானால், கணக்கற்ற புஸ்தகங்களை சிறிது நாட்களில் அரித்து இருந்தவிடம் தெரியாமல் செய்கின்ற கரையான் கூட்டம் இவர்களைவிட சிறந்த ஞானிகளன்றோ? இன்னும் இவர்களைவிட புஸ்தகங்கள் வைத்து பூட்டப்பட்ட பெட்டிகளும் அலமாரிகளும் உயர்ந்த ஞானிகளென்று சொல்லலாம். ஆகையால், கழுதை குங்குமப்பொதி சுமந்ததைப் போல, இவர்களிடம் படிப்பு மாத்திரத்தில் விளங்குகிற அறிவானது பிரயோசனமிலது. சண்டை சச்சரவுகளுக்கு காரணமாய் கலகத்திற்கு இடம் கொடுக்கின்ற இப்புஸ்தகப் படிப்பு உனக்கு அவசியமில்லை. நீயே அகண்ட ஞான சாகரமாயிருக்கிறாய். உள்ளூர்ந்து பார். நீயே வேதமாயிருக்கிறாய். அறிவு என்று சொல்லப்பட்ட வேதமானது உனது அற்பாம்சமாகும். நீ உனது யோகாப்பியாசத்தால் மனதைக்கட்ட வசப்படுத்திவிட்டால் எவ்வித ரூபத்துடன் அறிவை அறியவேண்டுகிறாயோ, அவ்வித ரூபத்துடன் அறிவு உனக்கு பிரத்தியட்சமாம். ஆகையால் சாஸ்திரக் குப்பையை ஒதுக்கி அந்தக்கரணத்தை நீ நிர்மலமாக்கி விட்டால், நீ ஆத்மதர்சனம் செய்து அறிவுக்கு எஜமானனாவாய். பின்பு மனம் இறந்து நீ ஸ்வஸ்வரூபமாய் விளங்கும் போது, நீயே அகண்ட ஞானமாய், சகல சாஸ்திரங்களும் நீயே யாகும். இப்பொழுது நீ புஸ்தகம் படிக்க ஆசை கொள்ளுவதற்கு பதிலாக, அப்பொழுது உலகத்தவர், 'நீ' யாகிற புஸ்தகத்தைப் படிப்பார்கள். எவ்விஷயத்தைப்

பற்றி சொல்லப்புகுந்தாலும் "உன்" விஷயமே எனக்குப் பிரியமாகி மற்ற விஷயங்களை அலட்சியம் பண்ணுகிறேன். உலகத்தவர் உன்னை எவ்விதமாக அங்கீகரித்தாலும் நீ அதற்கு உள்படாதே. நீ லட்சியத்தை நாடி மனதை கட்டியிருக்குங்கால் எப்பேர்ப்பட்ட இடையூறுகள் நேரிட்டாலும் கொஞ்சமும் பின்வாங்காதே. மகாமேரு பர்வதம் போன்ற தடைகள் குறுக்கிட்டாலும் உன் வைராக்கியத்தினல் எற்றி தூள்படச்செய்து முன் செல்வாய். உனது கையே வந்து கண்ணை மறைத்தாலும் மற்ற கையால் மறைத்த கையை வெட்டியெறிந்துவிட்டு செல்வாய். வைராக்கியமே உனது அப்பியாசத்திற்கு அணிகலனாகும். நான் சொன்னமுறையே அப்பியசிப்பாய் என்று சொல்லி சிஷ்யனை அருகே கூப்பிட்டு பத்மாசனத்தில் இருக்கச் சொல்லி தனது உபதேசப் பிரகாரம் பிரணவத்தியானம் செய்யச்சொல்லிவிட்டு தானும் சமாதியிலிருந்துவிட்டார். பின்னொரு நாள் குருவானவர் :—சச்சிதானந்த சிவமே, இங்கு வருவாய், உனக்கு சங்கைகளுளதாயின் சொல்வாய். நீ ஸ்வஸ்வரூப தர்சனம் செய்தாயோ? மாயைக்கும் பிரமவஸ்துவிற்கும் உள்ள பேதம் தெரிந்ததோ? எனக்கிவற்றைக் கூறுவாய் என்றார்.

சிஷ்யன்:—சதானந்த சாகரமே, எனக்கு மாயைக்கும் பிரமவஸ்துவிற்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாய்ப் பகுத்து சொல்ல விளங்கவில்லை. பிரமவஸ்துவின் லட்சணங்கள் மாயைக்கும் இருக்கின்றனவென்றும் ஆனல் மாயைக்குள்ள லட்சணங்கள் மாத்திரமே பிரமவஸ்துவிற் குள்ளனவல்லவென்றும் அறிகிறேன் என்று சொல்லிவிட்டு சித்திரப் பதுமைபோல் விழித்தது விழித்தபடியே யிருந்துவிட்டான். குருவானவர் மகிழ்ந்து அவனை தட்டி அழைத்து, கேட்பாய்,

மகனே, பிரமவஸ்துவிற்கும் மாயைக்கும் தம்மில் உள்ள வித்தியாசம் நீ அனுபவத்தில் அறிந்தபடியே யாகும். இன்னும் உனக்கு இவ்வனுபவத்தில் திடம் உண்டாகும் பொருட்டு நாம் இருவரும் சிலநாள் ஸ்திரமாக ஓரிடத்திலு மிராமல் சஞ்சாரம் செய்வோம் என்று சொல்லி இருவரும் கால்நடையாக யாத்திரை புறப்பட்டார்கள். ஓர் நாள் ஓர் தடாகத் தீரத்தில் இருவருமாய் உட்கார்ந்துகொண்டிருக் கும்பொழுது

சிஷ்யன் :—ஸ்வாமி, சற்குருநாதா, உனக்கு திடம் உண்டாகும் பொருட்டு சஞ்சாரம் செய்வோம் என்று சொன்னீர்களே சஞ்சாரம் அவசியமோ? என்றான்.

குரு :—அப்பனே, அப்பியாசிகட்கு அத்தியாவசியம் வேண்டியதாகும். ஓர் இடத்திலேயே யிருந்தால் உன் மன மானது மெல்ல மெல்ல பிரபஞ்சத்தினிடத்தில் பற்றும். சிலநாட்களுக்குள் உன்னை சிலர் ஞானியென்று மெச்சுவார் கள். அதினால் உன் மனமானது அகங்கரித்துக்கொள்ளும். யதார்த்தமானது உன் மனதினின்றும் நழுவி வேஷம் உட் புகுந்துகொள்ளும். தவிர உனது பந்து ஜனங்களால் அடிக்கடி இடையூறுகள் உண்டாகும். பலவிதமான குயுக் திகள் பேசி தனதானிய கிரக க்ஷேத்திராதிகளை சுகரூபமாக காண்பித்து உன்னைப் பந்தத்திற் குள்ளாக்குவார்கள். அநேக போலி நியாயங்களை காட்டுவார்கள். நீயும் மயங்கி விடுவாய். ஓர் காடியானது ஓர் பெரும் வெள்ளத்தினால் அடிக்கப்பட்டு வாரிக்கொண்டுபோகப்படும்போது அத னது சகல அங்கங்களையும் ஒடுக்கிக்கொண்டு, எங்கே ஆதா வு கிடைக்கும், எப்படி கரையேறலா மென்ற ஒரே நினை வுடன் செல்கையில், கரையில் நின்று ஆற்றின் பிரவாகத்தை கவனித்துக்கொண்டிருந்த சில சிநேகிதர்களுக்குள் சிலர்

காடியைப் பார்த்து காடியென்று அறியாமல் ஏதோ கம்பிளி மூட்டை யொன்று போகிறது, அது யாருடையதோ, அதை தண்ணீரில் நீந்திப்போய் எடுத்து வந்தால் மிக லாபம் கிடைக்கும் என்று சொல்ல, சதாலாபத்திலே கண்ணுயிருக் கப்பட்ட ஒருவன் திடீரென்று ஜலத்தில் வீழ்ந்து நீந்திச் சென்று காடியை தாவிப்பிடிக்க, காடியும் இவனை தனக்கு ஏதோ ஆதாவு கிடைத்துவிட்டதென்று கட்டிப் பிடிக்க, கரையிலிருந்த சினேகிதர்கள் இவனை அழைக்க கம்பிளி மூட்டையென்று நினைத்து காடியைக் கட்டிப்பிடித்தேன் என்று சொல்லி, காடியும் இவனுமாக தண்ணீரில் அமிழ்ந்தி இறந்தார்கள்.

இதுபோல உலகினர் போலி நியாயங்களால் காடியா கிய பிரபஞ்சத்தை கம்பிளி மூட்டையாகிய ஆத்மலாப மென்று உனக்குக் காட்டி உன்னை மயக்க, நீ சென்று அதை பற்றுவாய். அதுவும் உன்னைப் பற்றிக்கொள்ளும். ஈற்றில் நீயும் இப்பிரபஞ்சமும் மாயாசாகாத்தில் அமிழ்ந்திப்போ வீர்கள். ஆகையால் அப்பியாசிகள் முதலாவது செய்ய வேண்டியது என்னவென்றால், தன் பந்துஜனங்களுடைய பார்வைக்குட்படாமல் தப்பவேண்டியது. அக்கினியானது சிறிதாயிருக்கும் காலத்தில் ஓர் கையளவு ஜலத்தினல் அதை அணைத்துவிடலாம். அதுபோலவே அப்பியாசி களுடைய வைராக்கியத்தை மிகவும் நுட்பமாகிய சில நியா யங்களால் கெடுத்துவிடலாம். ஆரூடனுகி தேர்ந்துவிட் டால், காட்டுத் தீயானது எங்ஙனம் எதிர்ப்பட்ட வாழை களையெல்லாம் பஸ்மம் பண்ணுமோ, அங்ஙனமே உனது திடஞானத்தினல் உலகினர் வெல்லப்படுவார். இன்னும் சஞ்சாரத்தினல் அனேகம் ஜீவன் முக்தர்களுடையவும் விதேக முக்தர்களுடையவும் தர்சனம் உண்டாகும். அவர்

களுடைய அனுபவத்தை ஆராயலாம். அவ்விடங்களில் பொறுக்கவொண்ணாத துன்பங்கள் உண்டாகும். அவற்றை நிவர்த்திசெய்ய வேறுவழி யில்லாததால், சகிக்க வேண்டி வரும். இச்சகன சக்தியே உனக்கு உடுக்கத்தகுந்த வஸ்திரமாம். இச்சகனசக்தியே உனக்கு அணியத்தக்க கவசமாகும். உனது பிராரப்தவசமாய் நேரிடும் இடையூறுகள் யாவும் இச்சக்தியாலேயே வெல்லப்படவேண்டும். இச்சக்தியே தபஸ் என்று மேலோர் கூறுவர். நீ இச்சக்தியை அனுசரித்து வெகு லகுவாய் அப்பியசிப்பதற்கு சஞ்சாரம் அவசியமாம். இன்னும் சஞ்சாரத்தில் தேசகால சக்திகளின் தன்மை நன்ருய் விளங்கும். ஆகையால் முமுட்சுக்களுக்கு சஞ்சாரம் அவசியம் வேண்டியதாகும்.

சிஷ்யன்:—ஆயின், ஸ்வாமி, தாங்கள் உபதேசித்த ராஜயோக மார்க்கமானது சஞ்சார காலத்தில் எங்ஙனம் அப்பியசிக்கத் தகும்? மனமானது சலனத்திற்குட்படாதோ?

குரு:—நீ என்னிடம் சம்பாஷிப்பதைத் தவிர மற்றவர்களிடம் மௌனவிரதம் சாதிக்கவேண்டும். சரீரபோஷணூர்த்தமாய்க்கூட யாதொருவித பிரயத்தனமும் செய்யலாகாது. இன்ன ஊருக்கு இன்ன காலத்தில் போய்ச்சேரவேண்டுமென்ற நியமம் இல்லாமலிருப்பாய். எங்கு உனக்கு திருப்திப்படுகிறதோ அவ்விடத்தில் நிஷ்டையிலிருப்பாய். மனமானது சலித்துவிட்டால், சஞ்சாரம் செய்வாய்.

பின்னொரு நாள் அவர்களது யாத்திரா மார்க்கத்தில் சிஷ்யனுனவன், ஸ்வாமி, தாங்கள் லோகோபகாரமாக மடங்கள் ஸ்தாபித்து லௌகீக, வைதீக காரியங்களைச் சீர்திருத்தி வந்தீர்களே, அவைகள் ஜீவகாருண்ணிய விஷயங்

களன்றோ ? அப்பேர்ப்பட்ட கைங்கரியங்களால் முக்தி யடையலாகாதோ ?

குரு :—குழந்தாய், கேட்பாய் : அப்பியாசிகள் அப்பேர்ப்பட்ட கர்மங்களில் தலையிடலாகாது. ஏனென்றால், கீர்த்தி யாசையானது அவர்களை விழுங்கி விடும். அவர்களது கர்மங்களும் பிரகாசியா. மனதை யடக்கியாள்கின்ற ஜீவன் முக்தர்கள் பரேச்சாப்பிராரப்தவசர்களாய் ஜீவகாருண்ணிய கைங்கர்யம் செய்வார்கள். அவர்களது செய்கைகளே நீடூழி நின்று அனந்தங்கோடி ஜீவராசிகளைக் கடைத்தேறுவிக்கும். பரோபகார நிமித்தம் பற்றற்று உழைப்பவர்கள்போல் நடிக்கும் உலகத்தவர்களைக் கண்டு மயங்கி விடாதே. இவர்கள் பிரபஞ்சவாசனை பழுத்து கீர்த்தியை லட்சியமாகக்கொண்டவர்கள். இன்னும், ஜீவகாருண்ணியமென்றால் ஜீவனிடத்தில் கருணை செலுத்துவது என்று அர்த்தம். கருணையானது கீழோருக்கு மேலோரால் காட்டப்படும் இரக்க சித்தமாம். ஆகையால் ஜீவனிடத்தில் கருணை செலுத்துவதற்கு ஜீவலட்சணத்தினின்றும் மேல்பட்ட அதாவது ஈசலட்சணமுள்ள பிரமஞ்ஞானிகளாலேயே முடியுமொழிய மற்றவர்களால் முடியாது. சாதாரணமாகக் காண்பதெல்லாம் தேக காருண்ணியமே. தேகத்தை நானென்று அபிமானித்து துக்க முறுபவர்களுக்கு அச்சரீரோபாதிகளின் நிவிர்த்தியின் பொருட்டு காட்டப்படும் தயையே உலகத்தவர் ஜீவகாருண்ணிய மெனச் சொல்வார். பூதானம், கோதானம், அன்னதானம் முதலியவற்றை லோகோபகாரமாக ஜனங்கள் கைக்கொள்ளுகிறார்கள். இந்த காருண்ணியமானது வாஸ்துவ ஜீவகாருண்ணியத்தின் தாழ்ந்தபடியானாலும் உலகத்தவர்க்கு அத்தியாவசியமாம். இப்பேர்ப்பட்ட தானதருமங்களை யாவர் கைக்

கொண்டு செய்கிறார்களோ, அவர்கள் சித்த சுத்தி பெற்ற வர்களாய், ஜீவன் முக்தர்களது ஜீவகாருண்ணிய கர்மத் திற்குப் பாத்திரர்களாகிறார்கள். இக்கர்மங்களில் அன்ன தானமானது மிகச்சிறந்தது. மற்ற எத்தானமும் மனிதனை திருப்திப்படுத்துவதில்லை. வயிறு நிறைந்தவுடன் திருப்தி யடைந்து போதும்என்று மனிதன்சொல்லுகிறதால் அன்ன தானம் சிறந்ததாகும். இன்னும் தானம் வாங்கின மனி தன் அத்தானப் பொருளை அனுபவியாமலே இழந்துவிடலா மாதலாலும், ஆனால் அன்னதானம்பெற்ற மனிதன் இழந்து விடமுடியாமல்அவ்வன்னமானது அவன் சரீரத்துடன் கலந் துவிடுகிறதினாலும் அன்னதானம் மிகச்சிரேஷ்டமாம். இந்த தான தருமங்கள் தேசகால மாத்திரம் பார்த்து செய்யப் படவேண்டும். தேசகால மாத்திர மென்றால் புண்ணிய க்ஷேத்திரங்களையும், புண்ணிய காலங்களையும், சத்புருஷர் களையும் குறிக்கின்றது என்று சிலர் சொல்லுவார்கள். அப் படி யல்ல. எந்த தேசத்தில் எந்த வஸ்து ஜீவராசிகளுடைய ஆவசியகத்திற்கு வேண்டியிருந்தும் கிடைக்கப்படுகிறதில்லை யோ, எந்த தேசத்தில் எந்த வஸ்து இல்லாமல் ஜீவராசி கள் மிகத் துன்பத்திற் குள்ளாகின்றனவோ, அந்த தேசத் தில் அந்த வஸ்துவின் தானமானது மிகச்சிறந்தது. எந்த காலத்தில் எந்த வஸ்து ஜீவராசிகளுடைய ஆவசியகத்திற்கு வேண்டியிருந்தும் கிடைக்கப்படுகிற தில்லையோ, எந்த காலத் தில் எந்த வஸ்து இல்லாமல் மிகத் துன்பத்திற்குள்ளாகின் றனரோ, அவர்கட்கு அந்தவஸ்துவின் தானம் மிகச்சிறந்தது. இவ்வித தேசகால மாத்திரங்களில் தானம் செய்கின்றவர் களின் அந்தக்கரணத்தின் அழுக்கு எடுபட்டு முமுட்சுக் களாவார்கள். ஆகையால் முமுட்சுத்துவமடைவதற்கு உல கத்தவர் செய்யவேண்டியதாகும். இந்த ஜீவகாருண்ணியம்

தவிர ஜீவன்முக்தர்கள் விதேகமுக்தர்களாவதன் முன்னர் பிராரப்தவசர்களாய் ஜீவர்களுடைய ஜெனன மரண துக்கத்தைப் போக்கடிக்கும்பொருட்டு ஜீவகாருண்ணிய கர்மங்களாக ஸ்ருதி ஸ்மிருதி தத்துவங்களை விளக்கி ராஜபாதைகளை செப்பனிடுவார்கள். பிராரப்த கர்மமானது பரேச்சாப்பிராரப்த மென்றும் அநிச்சாப்பிராரப்த மென்றும் இச்சாப்பிராரப்த மென்றும் மூவகையாகும். பரேச்சாப்பிராரப்தமானது ஜீவன்முக்தர்களால் உலகினரது இச்சையின்மேல் செய்யப்பட்டது. இது அவர்களைப் பந்தப் படுத்தாது. அநிச்சாப்பிராரப்தமானது தீவிரதர விரக்தர்களாகிய முமுட்சுக்களால் அவர்களுக்கு சிறிதும் இச்சையில்லாமலிருந்தும் பெற்றோர்கள், குரு, அல்லது அரசன் இவர்களுடைய இச்சையின்மேல் செய்யப்பட்டது. இதுவும் இவர்களை பந்தப் படுத்தாது. இச்சாப்பிராரப்தமானது சாதாரண ஜீவராசிகளால் சுயேச்சையின்மேல் செய்யப்பட்டது. இது ஆகாமிய ரூபமாகி சஞ்சிதத்தில் சேர்க்கப்பட்டு இவர்களுக்கு ஜெனன மரண வியாதியை உண்டாக்கும். ஆகையால் எனது லோகோபகார கைங்கரியமானது எனது பரேச்சாப்பிராரப்தத்தாலாகும். சாதாரண ஜீவகாருண்ணியமானது சித்த சுத்தியை யுண்டாக்குமல்லது நீ கருதியபடி ஜீவன்முத்தியில் சேர்க்க வல்லதல்ல. பிரம்ஞ்ஞானிகளது ஜீவகாருண்ணியமானது ஜீவன் முக்தர்களால் செய்யப் படுவதால் அது முக்திக்கு அவசியமில்லை. இப்போழுது ஏதோ கீர்த்தி ஆசையானது உன்னைப்பற்றியது. அதை உதறி எறிந்துவிடு. நீ இவ்வப்பியாசத்தில் தேர்ந்து ஜீவன்முக்தனயிருக்குங் காலத்தில் உனது பரேச்சாப்பிராரப்தமானது உன்னை ஜீவகாருண்ணிய விஷயத்தில் பிரவேசிக்கச் செய்தால் செய்யட்டும். அதுவரையில் உனது லட்சியமே கவ

னமாய் சதா நிஷ்டையிலிருப்பாய். 'நீ' யாகிய ஈச்வரன், 'நீ' யாகிய ஜீவன்மேல் ஜீவகாருண்ணியம் செலுத்தினால் இவ்விரண்டு 'நீ' யும் ஏகமாகி நீயே சிவமாய் விளங்குவாய்.

சிஷ்யன்:—சற்குருவே, பரமஜீவ காருண்ணிய ஸ்வரூபியே, எனக்கு ஓர்சங்கை உதித்துளது. மகான்கள் பரேச்சாபிராரப்தவசர்களால் லோகோபகார கைங்கரியத்தில் பிரவேசிப்பார்களென்று இப்பொழுது சொன்னீர்கள். இதற்கு முன்னொருதரம் இவர்கள் அவதார புருஷர்களாகும் என்று சொல்லி யிருக்கிறீர்கள். இவர்களில் தாரதம்மிய மென்ன?

குரு:—குழந்தாய், கவனிப்பாய்: மனமானது இச்சாரூபமாகப் பரிணமித்து கர்மமெனப் பெயர்பெறும். இச்சாமாத்திரம் 'பிரயோத் சிருஷ்டி' என்ற வேதவாக்கியத்தை அனுசரித்து இச்சையினாலேயே இப்பிரபஞ்சமானது சிருஷ்டிக்கப் படுகிறது. இவ் விச்சையே ஜீவனுக்கு ஜனன மரணத்தை உண்டாக்கும். உலகத்தில் பாபம் அதிகரித்து, புண்ணியம் குறைந்து, துஷ்டர்கள் அரசு செலுத்தி, சத்புருஷர்கள் கஷ்டமுறுங் காலத்தில் அந்த சத்புருஷர்களது களங்கமற்ற சுத்தஹிருதயத்தினின்றும் அவர்களது துக்கம் நிவர்த்தியின்பொருட்டு வெகுவேகமாய் எழும் இச்சாசக்தியானது ஜீவன்முக்தர்களது போகமானதை ஜீவகாருண்ணிய விஷயத்தில் பிரவேசிக்கச்செய்யும். இதனால் அவர்கள் அவதார புருஷர்களெனப் படுவார்கள். உலகினரது இச்சையானது எவ்வளவு திடப்பெற்றிருக்குமோ, அவ்வளவு திடத்துடன் மகான்கள் ஜீவகாருண்ணிய விஷயத்தில் பிரகாசிப்பார்கள். மனமானது சிருஷ்டிஸ்திதி சம்ஹாராதிகளைச் செய்யவல்லதென்றும் அம்மனதின் இச்சாரூபமான பரிணாமமே அந்த மோட்சத்திற்குக் காரணமாமென்றும் நீ அறிவாய். ஒரு மனிதனுடைய செய்கைகளுக்கு தன்

னிச்சை, பிறருடைய இச்சை இரண்டும் காரணமாகும். தன்னிச்சையாலேயே மனிதன் கட்டப்படுவான். யாவனொருவன் தனக்குச்சிறிதும் இச்சையில்லாமலிருந்து பிறருடைய இச்சையினால் கர்மம்செய்கிறதாக மனப்பூர்த்தியாகஎண்ணி அவ்விதமே செய்கிறானோ அவனை அக்கர்மங்கள் கட்டுப்படுத்தா. யாவனொருவன் பிறருடைய இச்சையினால் ஏவப்பட்டு கர்மங்களைச்செய்து பிறருடைய இச்சையென்று அறியாமல் தன்னிச்சை யென்றே தன்னிச்சையுடன் ஒருமித்துக் கொள்கிறானோ, அவன் பிறருடைய இச்சையினால் கர்மங்களை செய்தபோதிலும், கட்டுப்படுத்தப்பட்டவனாவன். ஆகையால் இச்சைபிறந்த முக்தர்கள் ஜீவன்முக்தர்களாயினும் சரியே, விதேகமுக்தர்களாயினும் சரியே, உலகினரது ஒருங்குசேர்ந்த இச்சையால் ஏவப்பட்டு ஜீவகாருண்ணிய கர்மங்களை செய்வார்கள். இதையே நான் பரேச்சப்பிராரப்த மென்று சொன்னேன். இவர்களையே அவதார புருஷர்களென்று உலகினர் கூறுவர். இம் மகான்கள் உலகினரது இச்சையின் அளவு ஜீவகாருண்ணிய விஷபத்தில் பிரவேசித்து அவ்வளவு உழைத்து பின்பு தங்களது ஸ்வஸ்வபானந்தர்களாயிருப்பார்கள். ஆகையால் ஜீவகாருண்ணிய ஸ்வஸ்வரூபிகளை அவதார புருஷர்களென்றும் பரேச்சாப்பிராரப்தவர்களாகிய பிரம்ம ஞானிகளென்றும் சொல்லலாம். பின்னொருநாள் இருவரும் சமுத்திரதீரத்தின்வழியாய் செல்கையில் குரு:— ஞான புதல்வனே, இச்சமுத்திரத்தைப் பார்த்தனையா! ஓய்வு ஒழிவின்றி இரவு பகல் எப்பொழுதும் சதா சலனத்திற் குட்பட்டு பிரமாதமாய் அலைகளை வீசி கோஷித்துக்கொண் டிருக்கின்றது. இதனிடத்தில் நாம் ஆசை வைத்தால், மேலாகக் காணப்படுகின்ற நுரையும் உப்பு ஜலமுமே கிடைக்கும். இவற்றை சாப்பிட்டால்

மேலும் மேலும் தாகம் அதிகரித்து எப்பொழுதும் தவித்துக்கொண்டிருக்கவேணும். இதுபோலவே, இச்சரீரத்தினிடத்தில் ஆசைவைத்தால், மேலாக காணப்படும் ஸ்தூல சுகமே கிடைக்கும். மேலும் மேலும் ஆசை அதிகரித்து தவிக்கவேண்டி வரும். ஆனல் நாம் இக்கவலைகளுக்கு சிறிதும் பயப்படாமல் நீந்தி சென்று ஜலஜந்துக்களையும் லட்சியம் செய்யாமல் வெகு ஆழத்தி லிறங்கிப் பார்த்தால், விலையுயர்ந்த முத்துக்கள் கிடைக்கும். அதுபோலவே, காமக்குரோதாதி அலைகளில் நீந்திசென்று மனமாகிற சமுத்திரத்தில் பூர்வ ஜன்ம வாசனைகளாகிற ஜலஜந்துக்களை லட்சியம் செய்யாமல் வெகு ஆழத்தி லிறங்கிப் பார்த்தால் விலையுயர்ந்த மணிகள் கிடக்கும். இம்மணிகளாலேயே, சித்த புருஷர்கள் இப்பிரபஞ்சத்தில் ஜெயபேரிகையடித்து உலாவுவார்கள். இதெல்லாம் பெரிதல்ல. இந்த சமுத்திரத்தின் ஆழத்திலிறங்கி முத்துக்க ளெடுத்தாலும் எடுக்கலாம். சமுத்திரத்தினது சலனத்தை நிறுத்த முடியுமா? அதுபோலவே மனித னுட்பிரவேசித்து அணிமாதி அஷ்டமா சித்திகளை அடைந்தாலும் அடையலாம். மனதினது சலனத்தை நிறுத்த முடியுமா? உலகத்தில் சலிக்காத வஸ்துக்கள் கிடையாது. சகல வஸ்துக்களும் சுற்றிக்கொண்டேயிருக்கின்றன. பூமி முதலிய சகல கிரகங்களும் நட்சத்திரங்களும் சுற்றுகின்றன. சூரியனும் தன்னைத் தானே சுற்றுகிருனென்று சொல்லுகிருர்கள். முட்டையிலிருந்து பட்சி உண்டாகின்றது, பட்சியிலிருந்து முட்டை உண்டாகின்றது. மரத்திலிருந்து விதையுண்டாகிறது, விதையிலிருந்துமரமுண்டாகிறது. ஈஸ்வரனே பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கிருர். பிரபஞ்சமானது ஈச்வரன் சிருஷ்டிக்கிறது. எல்லாம் சுற்றுதலேயாகும். இச்சுற்றுதல் எக்காலத்தில்நிற்

குமோ, அக்காலத்தில் நிச்சலனமான யோகம் சித்தமாம். ஏன் இவைகளெல்லாம் சுற்றுகின்றன என்று ஒருவருக்கும் தெரியாது. ஆனால் இச்சுற்றுதலினின்றும் வீடுபெறலாம் என்பது நிச்சயம். இவ்வீடேமனுஷ்ய ஜென்மப்பிரயோசன மாகும். ஓர் ரயில்வண்டியில் செல்பவனுக்கு தனது ரயில் எங்கும் செல்லாமல் இருந்த விடத்திலேயே இருப்பதாயும் மற்ற வஸ்துக்கள் வெகு வேகமாய் ஓடிக்கொண்டிருப்பது போலவும் எப்படிதோற்றுமோ, அப்படியே உன் சுற்றுதலி னாலேயே மற்ற வஸ்துக்கள் சுற்றுகின்றனபோல் காணப் படுகிறது. உன் சுற்றுதல் நின்றுவிட்டால் மற்ற வஸ்துக் களின் சுற்றுதலும் நின்றுவிடும். ஆகையால் வீணாக நீமற்ற வர்களைப்பற்றி கவனியாமல், உன் சுற்றுதலை நிறுத்த முயல் வாய். மஞ்சட் காமாலை நோயால் வருந்துபவனுக்கு அவன் பார்க்கும் வஸ்துக்களெல்லாம் வாஸ்துவத்தில் மஞ் சள் நிறமாய் இல்லாவிடினும் அவனுக்கு மஞ்சள் நிறமாய்த் தோன்றுவனபோல உனது அவித்தையினாலே இப்பிரபஞ்ச மெல்லாம் அவித்தியாமயமாய்த் தோற்றுகின்றது. உனது அவித்தையைக் களைந்து விட்டால் நீ உனது யதார்த்த ஸ்வ ரூபமாகிய சிவமாய் நின்று விட்டால், இப்பிரபஞ்ச மெல் லாம் சிவமேயாகும். உன்னைத்தவிற வேறு வஸ்துவில்லை. இச்சமுத்திரத்தை யன்றி அலைகளுக் கிருப்பு உண்டோ? அதுபோல் உன்னையன்றி இப்பிரபஞ்சத்திற்கு இருப் பில்லை.

சிஷ்யன்:—ஸ்வாமி, சர்வமும் மித்தை, நீயே உள்ள வஸ்து என்று சொன்னீர்கள். இவ்வலைகளும் சமுத்திரமும் ஒன்றாகவே யிருந்தபோதிலும், சலனத்தை அலைகளென்று சொல்வதுபோல, சலன மல்லவோ பிரபஞ்சமாகும். சமுத் திரத்தின் சலனத்தை நிறுத்த முடியாதுபோல, எனது

சலனத்தையும் நிறுத்த முடியாது. ஆகையால் எங்ஙனம், நிச்சலனமாய் சிவமாய் விளங்குவது.

குரு:—நீ சொன்னது சரியே. சலனமே பிரபஞ்சமாம். இச்சலனத்திற்குகாரணமாகியகாற்றைக்கட்டிவிட்டால் எங்ஙனம் சமுத்திரமானது சலிக்காதோ, அங்ஙனமே உனது சலனத்திற்கு காரணமாகிய அவித்தையைக் கட்டிவிட்டால் உனது சலனமும் அடங்கும். ஆனால் கட்டுப் படுத்திய சக்தியின் ஸ்திதி காலத்தில் கட்டுப்படுத்தப்பட்டு, அச்சக்தி நீங்கினால் மறுபடியும் சலிக்கும். ஆனால் உனது சலனமும் அச்சலனக் காரணமாகிய அவித்தையின் நாசமும் வீண்தோற்றமே யன்றி வேறல்ல. நீ சலிக்கவுமில்லை; மாறி வேறுரூப மடையவு மில்லை. ஒன்று என்னும் எண்ணுக்கு பத்து சுன்னங்களைச் சேர்த்து ஆயிரங் கோடி என்று ஓர் பெருந்தொகை குறிக்கிறோம். அந்த ஒன்று என்னும் எண்ணைத்தவிர மற்றவை யெல்லாம் சுன்னங்களே. அந்த ஒன்று என்னும் எண்ணானது சுன்னங்களைச் சேர்த்தாலும் நீக்கினாலும் எப்போதும் ஒன்றேபோல, பிரம்ம சொரூபம் சுன்னங்களாகிற இவ்வண்ட அடுக்குகளை சேர்த்தாலும் நீக்கினாலும் பிரம்ம சொரூபமே. அந்த ஒன்றைத்தவிற மற்றவையெல்லாம் சுன்னங்களேபோல பிரம்ம சொரூபத்தைத் தவிர மற்றவைகளெல்லாம் மித்தையே. இந்த சுன்னங்களுக் கெல்லாம் உயிர்நிலை ஒன்றேபோல, இந்த மித்தியா வஸ்துகளுக்கெல்லாம் ஆதாரம் பிரம்ம சொரூபமே. நீ சுன்னங்களை சுன்னங்க ளென்றறி. நீயே அவ்வொன்றாயிரு. அவ்வொன்றினால் சுன்னங்கள் உயிர்தரிக்குமாறுபோல உன்னால் சகல பிரமாண்டங்களும் உயிர்தரிக்கின்றன. இவைகளையெல்லாம் நீ என்னிடத்திலிருந்துகேளாவிடினும் உனக்குதானே பிரத்தியட்சமாகும். அப்பொழுது “ நீ ”

யாகிய சிவசாகரத்தில் அலைகளாகிய பிரபஞ்சம் வாஸ்தவத்தில் இல்லையென்றும் நீ சச்சிதானந்த சாந்த ஸ்வரூப மென்றும் அறிவாய்.

பின்பு அவர்கள் உயர்ந்த பர்வதங்களில் சஞ்சாரம் செய்யும்போதொருநாள், சிஷ்யன் :—ஸ்வாமி, சில பர்வதங்கள் சித்தபுருஷர்களின் வாசஸ்தானங்களென்று சொல்லுகிறார்கள். அச்சித்தர்களின் மகிமை என்ன ? அந்த சித்திகளை எவ்விதம் பெறலாம்? சித்தர்கள் பிரம்ம ஞானிக ளல்லரோ ?

குரு :—சிஷ்ய சிகாமணியே ! கேட்பாய்: அகஸ்தியர் போன்ற மகான்கள் சித்த புருஷர்களாயினும் பிரமஞானிகளாம். பரேச்சாப்பிராப்தத்தால் சித்திகளையடைந்தார்கள். கோரட்சநாதர் போன்றவர்கள் வெரும் அகங்கார கிரந்தி அடைந்த சித்தர்களாம். இவர்கள் அவித்தியா சம்பன்னர்களாம். சித்திகளை யடைவதற்கு ஹடயோகமானது அப்பியசிக்கத்தகும், பிராணாயாமம் மிக முக்கியமாம். ரேதஸ் வெளிப்படுத்தாத சுத்தசரீரம் மிக அவசியம். ஏனென்றால், இந்த ரேதஸ் சித்த புருஷர்கள் அமிர்த மென்று சொல்வார்கள். வலது நாசித் துவாரத்தினால்12 அங்குலம் சுவாசத்தை உள்ளுக்கிழுத்து இடது நாசி துவாரத்தினால் 8 அங்குலம் சுவாசத்தை வெளியில் விட்டு மிகுதி 4 அங்குலம் சுவாசத்தை உள்ளடக்கி இங்ஙனம் அப்பியசித்தலையே பிராணாயாமம் என மேலோர் கூறுவர். இவை முறையே ரேசக பூரககும்பகம் என்று சொல்லப்படும். பிராணனை உள்ளடக்கி சேர்க்கப்பட்ட இந்த தந்திரமானது மகாதீர பராக்கிரம சாலிகளால் முடியுமே யொழிய மற்றவர்களால் முடியாது. இங்ஙனம் கும்பகம் செய்யச் செய்ய மூலாதாரத்தில் அடங்கி ஒடுங்கிக்கொண் டிருக்கும் குண்டலினி சக்தியா

னது வீராவேசத்துடன் எழுப்பப்பட்டு கிருஷ்ணசர்ப்பம் போல பிரம்மந்திரம் வரையில் சென்று பிறகு அமிர் தத்தைப் பொழியவும் அவ்வமிர்தத்தை பானஞ்செய்து வஜ்ஜிரகாயமுடை யோர்களாயும் இன்னும் அநேக அற் புத சித்திகளை செய்ய வல்லவர்களாயும் விளங்குவார்கள் சித்த புருஷர்கள். பிராணுயாம அப்பியாச காலத்தில் காமத் தினல் ரேதஸ் வெளிப்படுத்தப்பட்டால், அப்பியாசிக்குக் கேடு சம்பவிக்குமென்று மேலோர் கூறுவர். ஜிதேந்திரிய னுகிய சித்த புருஷனுடைய சிரசில் சிரோமாணிக்கம் என்று ஓர் விலைமதிக்கத்தகாத ரத்தினம் உண்டாகும். இம்மணி யின் உடைமையாலும் சித்திகள் விளங்கும். இன்னும் பிரா ணனை அபானனிலும் அபானனை பிராணனிலும் செலுத்தி சிலர் அப்பியசிப்பார்கள். இன்னும் பலவிதமாய் பயங்கர மான ஆசனங்களில் சரீரத்தை வளைத்து இருந்து அப்பிய சிப்பார்கள். சில இங்ஙனம் ஹடயோகத்தின்பிரிவுகளாகப் பலவித அப்பியாசங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. தவிர, நியம நிஷ்டையுடன் கூடிய மந்திர தியானத்தினுலும் சித்தி கள் பெறலாம். அபூர்வமானவையும் அதி ரகஸ்யமுமான மூலிகைகளின் மூலமாயும் சித்திகளை யடையலாம். அவர் களுடைய மகிமைகளை சொல்லக் கேட்பாய்: அணுவுக்கு மணுவாயுள்ள சரீரத்தைப்பொருந்தி யிருப்பார்கள்; மகா பர்வதம் போலவும் சரீரத்தையடைவார்கள்; ஆகாயகமனம் செய்வார்கள்; பரகாயப் பிரவேசமும் செய்வார்கள். சிங்கம், புலி, கரடி முதலிய துஷ்ட ஜெந்துக்கள் அவர்களிடம் ஆட்டுக்குட்டிகளைப்போல் அடங்கிநிற்கும். ஓர் விநாடிக்குள் திரிலோகமும் சுற்றிவருவார்கள். ஓர் விநாடியைக் கல்ப்ப காலமாகக் காட்டுவார்கள்; ஓர் கல்ப்பத்தை ஓர் விநாடி யாக்குவார்கள். ஈசனது சகல தொழில்களையும் தாங்களே

வகிப்பார்கள். இவ்விதமாகவும் இன்னும் அளவற்ற விதங்க ளாகவும் சித்திகளைச் செய்து அதிசயாநந்தத்தை யனுப வித்து காலம்போக்குவார்கள். அவர்களது மகிமை யிவ்வள வேயாம் என்று எங்ஙனம், யாரால் சொல்ல முடியும்? இவர் களை உலகினர் பார்த்து பிரமித்து மகான்களென்றும் அவ தார புருஷர்கள் என்றும் கொண்டாடுவர். நமக்கு தெரி யாத காரியத்தை வேறொருவர் செய்வாராயின் நம்மைவிட அவர்கள் உயர்ந்தவர்களென்று நினைப்பது உலக சுபாவம். உதாரணமாக, ரெயில்வண்டி மின்தபால் முதலியவை யூரோப்பு, அமெரிக்கா முதலிய மேல்நாடுகளில் சர்வசாதா ரணமாயிருந்தும் நமது கீழ் நாட்டு ஜனங்ளுக்கு எப்படி அதிசயமாகத்தோன்றி, அந்த மேல்நாட்டு ஜனங்கள் இந்த கீழ்நாட்டு ஜனங்களால் ஈஸ்வர வரப்பிரசாதம் பெற்றவர் களென்று நினைக்கப்படுகிறார்களோ, அவ்விதமே நாமும் சித்தர்களை நினைக்கிறோம். மேல்நாட்டு ஜனங்கள் ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி என்று சொல்லப்பட்ட பஞ்ச பூதங்களாகிய ஜடவஸ்துக்களினிடத்தில் தங்களது விடா முயற்சியையும் அறிவையும் செலுத்தி அவைகளை வேண்டியபடி கையாளுகிறார்கள். சித்தபுருஷர்கள் தங்க ளது சூட்சும, ஸ்தூல சரீரங்களாகிய ஜடவஸ்துக்களினிடத் தில் தங்களது விடாமுயற்சியையும் அறிவையும் செலுத்தி அவைகளை வேண்டியபடி கையாளுகிறார்கள். மேல் நாட்டு ஜனங்களுடைய நாகரீகமும் அறிவும் உலகினரால் மெச்சப் பட்டாலும் பிரபஞ்சத்தினிடத்தில் சத்திய திருஷ்டியுள்ள வர்களல்லரோ? அவர்களுக்கு இவ்வறிவினாலும் நாகரீகத் தாலும் துக்க நிவர்த்தியுண்டாயிற்றோ? சுகமடைந்தனரோ? இதே மாதிரியாக சித்த புருஷர்களும் அவர்களது அதி யாச்சரியகரமான சித்திகளினால் உலகினரால் மெச்சப்பட்டா

னும், அவர்களும் பிரபஞ்சத்தினிடத்தில் சத்தியதிருஷ்டி யுள்ளவர்களே. இதற்கு முன்னமேயே உனக்கு சித்தி களின் வெறுமையைத் தெரிவித்திருக்கிறேன். அப்பனே, இன்னும் கேட்பாய்: இந்த அண்ட பிண்ட சராசர வஸ்துக் களை யெல்லாம் அவர்களது சரீரத்தினிடத்தில் காண்பார் கள். இது உனக்கு ஆச்சரியமாய் தோன்றலாம். எந்த வஸ்துவானது நாமத்தினாலும் ரூபத்தினாலும் கட்டப்பட் டிருக்கிறதோ, அந்தவஸ்துவின் லட்சணம்சிருஷ்டிவிதிக்குள் அடங்கியதே பஞ்ச பூதங்களின் சையோகமே ஸ்தூல சரீரமென்றும் அறிவாய். இந்தபஞ்சபூதங்களும் ஒன்றினுள் ஒன்று அடக்கமாதலால் ஒன்றைவிட் டொன்று பிரிந்து தனியே வெவ்வேறாய் இருப்பில்லாதனவாம். நாமரூபாதி களால் கட்டப்பட்ட வஸ்து எதுவாயிருந்தாலும் அது இப் பஞ்ச பூதங்களின் சேர்க்கையினாலேயே யாகும். ஆகை யால் ஓர் எறும்பினுடைய சரீரத்தினுள்ளும் இப்பிரபஞ்ச மானது எப்பேர்ப்பட்ட அதிசய விநோதங்களை யடக்கியுள் ளதோ அப்பேர்ப்பட்ட அதிசய விநோதங்கள் காணப்படும். காலசக்தி, கர்மசக்தி எனப் பலபேர் வகித்து லீலைசெய்து வருகிற மகா மாயாசக்தியினது ஆக்ஞா சக்கிரத்தில்பட்டு சுற்றுதலும் மாறுதலும் அடையாத வஸ்துக்கள் இல்லை யாதலால் அப்புவானது பிருதிவியாக மாறும், பிருதிவி யானது அப்புவாக மாறும். இவ்வாறே சமஸ்த சராசரங்க ளும் மாறுதலை யடையும். இப்பிரபஞ்சத்தினிடத்தில் நீ எப்படி இம்மாறுதல்களை பிரத்தியட்சத்தில் பார்க்கின்றனை யோ, அம்மாதிரியே உனது சரீரத்தினிடத்தில் மாறுதல்க ளுண்டாயிருக்கும். இப்பூமியில் எங்ஙனம் பர்வதங்களும், நதிகளும், பாலைவனங்களும், மற்றும் பார்க்கின்றனையோ, உனது சரீரத்தினிடத்திலும் அதேமாதிரி பர்வதங்களும்,

நதிகளும், பாலைவனங்களும், மற்றுமிருக்கலாம். இப்பூமியின் விளைவுகளெல்லாம் உனது சரீரத்தினிடத்திலும் விளையலாம். நான் முன் கூறியபடியே இவைகளுக்கெல்லாம் காரணம் கர்மசக்தி, காலசக்தி, இச்சாசக்தி எனப் பலபேர்வகித்த மாயையினது தொழிலாம். பிரமாண்டமாகிய இப்பிரபஞ்சத்தில் என்னவெல்லாம் உண்டாகுமோ, அவையெல்லாம் சிற்றண்டமாகிய ஓர் எறும்பின் சரீரத்தினிடத்திலும் உண்டாகலாம். இந்தவிதமான சிருஷ்டியின் மகிமைகளையும் விதிகளையும் சித்த புருஷர்கள் அவர்களது யோகானுபவத்தில் பிரத்தியட்சமாக அறிவார்கள். இவ்வப்பியாசத்திற் கெல்லாம் நிர்மானுஷியமான பர்வதப்பிரதேசங்களே அனுகூலமாம். அதிலும் சில பர்வதங்கள் சீதோஷ்ண ஸ்திதியினாலும் அவர்களது வாசஸ்தானத்திற்கு ஏராளமான பெரிய குகைகளையுடைத்தாயிருப்பதினாலும் இன்னும் அவர்களுக்கு அநேக சௌகரியங்களாலும் சிரேஷ்டமெனக் கருதப்படும். குழந்தாய்! நீ இவ்வாச்சரியங்களைக் கேட்டு மயங்கிவிடாதே. நீ உன் லட்சியமே கவனமாயிரு. உன்னிடத்தினின்றும் தோற்றல் மாத்திரமாய் விசிரம்பித்து வாஸ்தவத்தில் இன்மையாய் உண்மைபோல் பாவிக்கப்பட்டுவருகிற இப்பிரபஞ்சசக்தியின் மகிமை இவ்வளவென்றால் உன்னுடைய மகிமையை யாவரால்சொல்லமுடியும்! சித்தபுருஷர்களின் சித்திகளை யடைவது அரிதல்ல; சிவசொரூபமாய் விளங்குவது அரிது! தவிர, எது உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லையோ அது, மத்தியகாலத்திலு மில்லாததாம். ஆதியும் இல்லாமல் அந்தமும் இல்லாமல் மத்தியம் எங்கிருந்து உண்டாகும்? ரஜ்ஜுவில் சர்ப்பம் காண்பதற்கு முந்தியுமில்லாமல் கண்டு தெளிந்த பின்னரும் இல்லாம

விருக்க மத்திய காலமாகிய கண்டபொழுது எங்கிருந்து வரும்? அப் பொழுது தோற்றல்மாத்திரத்தால் விளங்கி யதேயொழிய வாஸ்தவத்தில் இல்லை. முன்னமேயே இந்த விவர்த்த வாதத்தைப்பற்றி உனக்குக் கூறி யிருக்கிறேன். ஆகையால் நீ மயங்கவேண்டாம். நீயே சிவம், சிவமே நீ. இவ்வண்ட பிண்ட அடுக்குகளை யெல்லாம் உருட்டிப் புரட்டி விளையாடுகிற அம்மகா சக்தியின்மேல் ஆணையிட்டுக் கூறு கிறேன். "சிவோகம்" என்று சொல்லி தன்னந்தனியனு யிருப்பாய்.

சிஷ்யன்:—ஸ்வாமி, சிரசில் ஓர் ரத்தின முண்டாகும் என்று தாங்கள் கூறியது மிகவும் ஆச்சரியமா யிருக்கிறது. எங்ஙனம்? உண்டாகும் சாதாரண மனிதர்களுடைய சிரங் களில் உண்டாகாமல் சித்தபுருஷர்களின் சிரங்களில் மாத் திரம் உண்டாகக் காரண மென்ன?

குரு:—புதல்வனே! கேட்பாய்: சித்தபுருஷர்கள் ரேதஸ் வெளிப்படாத சுத்த சரீர முடையவர்களா யிருக்க வேணு மென்று சொன்னே னன்றோ! புருஷனுடைய சுக்கிலத் தையே ரேதஸ் என்று பெரியோர் கூறுவர். சரீரத்தினது சுத்த இரத்தமே ரேதஸாக பரிணமிக்கின்றது. 90 துளி இரத்தமானதுஒருதுளிசுக்கிலமாகும். ஆகையால்சரீரத்தை பாாமரிக்கின்ற ஒரு மனிதனுக்கு இந்த சுக்கிலத்தை விட சிறந்ததுயாது? இந்த சுக்கிலத்தின் ஸ்தானம் மூளையென்று கூறுவர். இந்த சுக்கிலத்தை விதிமார்க்கமாயோ அல்லது நிஷேத மார்க்கமாயோ வெளிப்படுத்தாத மனிதன் யாவன்? எவனுவது ஒருவன் தனது புருஷப் பிரயத்தனத்தால் இவ் விஷயத்தில் ஜயம் பெறுவானுயின் அவனே தீரன்; அவ னுக்கு யோகமானது வெகு சுலபத்தில் சித்திக்கும். இந்த சுக்கிலத்தை வெளிப்படுத்துவதிலேயே சதா கவனமா

யிருக்கும் மனிதனுக்கு சீக்கிரத்தில் அவனது ஞானேந்திரியங்கள் பலயீனமடைந்து கெடும். இந்த சுக்கிலத்தை மூளையிலிருந்து சிரசின் இருபக்கத்திலு முள்ள இரண்டு நாடிகள் மனிதன் இச்சைப்படும் காலத்தில் அவனது குய்ய பாகத்திற்குக் கொண்டுசெல்லும். சுக்கிலத்தை அடிக்கடி வெளிப்படுத்துபவனுக்கு அந்த இரண்டு நாடிகளும் மித மிஞ்சிய பிரயோகத்தால் பலவீனமடைந்து தீராத் தலை நோவை யுண்டாக்கும் என்று வைத்தியர்கள் கூறுவர். இந்த சுக்கிலமே சரீரத்தில் சக்தியா யிருந்து சரீரத்தை ரட்சிக்கிறது. இந்தசுக்கிலம் வெளிப்படுவதினுலேயே வியாதிகள் உண்டாகின்றன என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. ஆகையால் இந்த சுக்கிலமே சகல அறிவுக்கும் ஆதாரமுமாம். ஜீதேந்திரனுகிய சித்தபுருஷனுக்கு இந்த சுக்கிலமானது அல்லது ரேதஸானது வெகு நாளுக்குப் பிறகு மூளையினிடத்தில் ஓர் கடுகளவு மணியாக உருண்டு பிறகு குன்றிமணியளவு பருக்கும் என்பதாக சித்தர்கள் சொல்லுகின்றனர். ரேதஸேதேஜஸாம். ரேதஸை அடக்கியவர்களின் சரீரம் பிரகாசிக்கும். ரேதஸானது மணியாய் சிரசில் தங்கும் என்பதற்கு, பாரதத்தில் அஸ்வத்தாமாவுக்கு சிரோமாணிக்கம் இருந்ததாக கூறப்படுள்ளதே திருஷ்டாந்தமாம். இன்னும் அருமையைக் குறிப்பதற்கு "சிரோஅமணியே" என்று சொல்வதும் பார்க்கிருய். சுகந்த வாயுபட்சணம் செய்து ஜீவிக்கும் கிருஷ்ண சர்ப்பங்களின் சிரசிலும் ரத்தினம் உண்டாகுமென்று பெரியோர் சொல்லுகிருர்கள். இப்பொழுது அப்பேர்ப்பட்ட ரத்தினங்கள் மனிதனதுசிரசிலாவது சர்ப்பங்களின் சிரசிலாவது காணப்படுவதில்லையே, ஆகையால் நம்ப முடியாதென்று சொல்லுவாயாகில், அப்பேர்ப்பட்ட மனிதர்களும் சர்ப்பங்களும் இக்காலத்தில்

வெகு அரிது என்று அறிந்துகொள். பர்மா ராஜ்ஜியத்தில் வெள்ளை யானைகள் காணப்பட்டு வந்தன. இப்பொழுது வெகு அரிதாயிருக்கின்றன. அந்த வர்க்கமே யில்லாமல் போய்விட்டால் இதற்குமுன் இல்லையென்றுசொல்லலாமோ? இன்னும் வெகு அபூர்வமாய், அதாவது 12 வருஷத்துக்கு ஒரு தரம் புணர்ச்சி செய்வதாக சொல்லப்படும் யானைகள் திரேகத்திலுள்ள எலும்புகள் எல்லாம் தந்தங்கள் என்று விலைமதிக்கப்படுகின்றன வல்லவோ? சுக்கிலமே தந்தங்களாக பரிணமித்தது என்பதில் என்ன சந்தேகம்? ஆகையால் சிரசில் மாணிக்கம் உற்பத்தியாகும் என்பதில் நீ சங்கையுறவேண்டாம். இந்த பூமியினிடத்தில் எப்படி பொன், வெள்ளி முதலிய உலோகங்களும் ரத்தினங்களும் எடுக்கப்படுகின்றனவோ, அப்படியே சரீரத்தினிடத்திலும் உலோகங்களும் இரத்தினங்களும் உண்டாகலாம் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. ஒருநாள் சிஷ்யனானவன் "எந்தன் பரமகுருவே, சமஸ்த சராசரங்களும் நீயாய் நின்று என்னையும் நீயாக்குவதற்குள்ள உனது கைமாறு கருதாத பிரயத்தனத்தின் மகிமையை யாவர் அறிவார்? ஒருவனுக்கு சதுர்வித ஆசிரமங்கள் கூறப்பட்டிருக்கின்றவே, எந்த ஆசிரமம் சிரேஷ்டமானது? ஒவ்வொன்றினாலும் உண்டாகும் பயன் என்ன? இவைகளை நன்றாய் உணர்த்தும்படி பிரார்த்திக்கிறேன்" என்றான்.

குரு:—கேட்பாய் புத்திரா, வருணாசிரம தர்மங்கள் ஸ்மிருதியாலேயே கூறப்பட் டிருக்கின்றன. ஸ்மிருதியானது சிவஸ்வரூபமான உனது ஸ்துதியேயாகும். ஆனால் ஸ்மிருதி தத்துவங்களும் ஸ்ருதியையே ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. ஸ்ருதியின்றி ஸ்மிருதிநிற்கமுடியாது: ஸ்மிருதியின்றி ஸ்ருதியுள்ளதாம். ஸ்ருதியில் கோஷிக்

கப்பட்ட பிர்மானுபூதியை ஜீவர்கள் அடையும்பொருட்டே ஸ்மிருதிகள் ஏற்பட்டுள்ளன. ஆகையால் ஸ்ருதிக்கு விரோதமாய் ஸ்மிருதிகள் இருக்கமுடியாது. ஸ்மிருதிகள் பிரபஞ்சமானது ஒழுங்காய் நடைபெறும் பொருட்டு திரிகால ஞானிகளாகிய மகாரிஷிகளால் காலதேசங்களுக்குத் தக்கவாறு விதிக்கப்பட்ட சட்டங்களாம். முன்னொருதரம் ஜாதியாசாரத்தைப்பற்றிச் சொல்லியபொழுது ஜாதிக்கும் மோட்சத்திற்கும் யாதொரு சம்மந்தமும் இல்லை. ஒரு மனிதனுடைய ஆயுட்காலத்தை பகுத்து அவன் பிர்மானு பூதியை யடையும் பொருட்டு செப்பனிடப்பட்ட படிகள் ஆகும் ஆசிரம பேதங்கள். மாதாவின் கர்பபாசயத்தி லிருந்து வெளிவந்த முதல் 5 வயது வரையும் சிசுவெனப் பெயர்பெற்று தான் செய்யும் கர்மங்களில் யாதொரு பயனையும் கருதாதவனும் தனக்கும் அக்கர்மங்களுக்கும் யாதொருவித சம்மந்தமு மற்றவனும் இருப்பான். இக்காலத்தில் அந்த ஜீவன் செய்யும் கர்மங்கள் அவனுக்காவது அவனுடைய பெற்றோருக்காவது வேறு யாருக்காவது ஆகாமியமாக 5 வயதில் உலகநடையில் பிரவேசிக்கலாம். அப்பிராயத்திலேயே நல்வாழ்வுக்குக் காரணமாகிய வித்தியாப்பியாசம் செய்விக்கின்றனர். இவன் அப்பியசிக்கும் வித்தையே மனுஷிய ஜன்மப் பிரயோசனமாகிய அட்சர பிர்மானு பூதிக்கு காரணமா யிருந்ததால் இவ்வப்பியா சிபத்ததை அட்சராப்பியாசம் என்று ஆரியர் சொல்லுவர். 5 வயதுமுதல் 12 வயதுவரை விளையாட்டுப் பருவமாகிய குழந்தை யென பெயர் பெற்று பெற்றோரை விட்டுப் பிரிய அருகனல்லாததால் அவர்க ளிடத்திலேயே வித்தையைக்கற்றுக்கொள்ளவேணும். தான் பிரபஞ்ச நடையில் இறங்கிய போதிலும் அறிவின்மை ஆதலால் அவன்

செய்யும் நன்மை தீமைகளுக்கு அவனது பெற்றோர் பாத்தியப் படுவர்கள். அவனது இக்காலத்துக் கர்மமானது ஆகாமியமாக பெற்றோர்களைச் சேரும். ஆகையால் பெற்றோர்கள் புத்திரனை 12 வயது வரையில் ஜாக்கிரதையாய் நல்வழியில் நடத்திக்கொண்டு வரக்கடவர்கள். ஆகையால் இந்த குழந்தைப் பர்வமே அவனது ஆயுள் நாளுக்கு அஸ்திவாரமாயிருத்தலாலும் இப்பருவத்தில் வளைக்கப்பட்ட படியே வளருவாள் ஆதலாலும் புத்திரப் பிரியர்களாகிய பெற்றோர்கள் புத்திரனை சிராக வளர்க்கக் கடவர்கள். 12 வயது முதல் 25 வயது வரையில் பால்ய பர்வம் எனப்படும். 12 வயதில் நன்மை தீமைகளை ஆராயத்தக்க பகுத்தறிவு முதிர்கிறது. ஆகையால் இவ்வயதில் பிர்ம்ம உபதேசம் செய்யப்பெற்று அதாவது பிர்மவஸ்துவை அடைவதற்குள்ள மார்க்கத்தில் பிரவேசிக்கப் பட்டு பிர்ம்ம சாரிய விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். இப்பொழுது தான் அவன் பிரபஞ்சத்தில் நுழைகிறன். இதுமுதல் அவன் ஜீவன் முக்தனாகும் வரையில் அவன் செய்யும் கர்மங்கள் அவனையே சேரும். இதுவே முதலாவது ஆசிரமம் இவ்வாசிரமம் அப்பியாசமாவது மகா கடினமையானது. அவன் கோடீஸ்வரனுடைய புத்திரனுப் வெகு செல்வமாய் இதுவரை வளர்க்கப் பட்டு வந்தபோதிலும் ஆர்ய தருமத்தை அனுஷ்டிக்க விரும்பினால் பெற்றோரை விட்டு நீங்கி குருகுலவாசம் செய்யவேண்டும். நான் முன்னொருதரம் கூறியுள்ள குரு ஜீவன் முக்தனும் சிஷ்யன் எந்த ஆஸ்ரமத்திலுமுள்ள மும்மூட்சுவுமாவனை இப்பொழுது சர்வ சாஸ்திர சம்பன்னருய் சத்துவ குண பிரதானராகிய குருவும் கிரகசாஸ்ரமத்திலுள்ள சிஷ்யனுமாம். 12 வருஷத்திற்கு குறையாமல் பிர்மச்சாரி விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஆகையால் குருவுக்கு

வேண்டிய பணிவிடைகளை அவர் கூறுமுன் செய்தும் குருவையும் குரு பத்னியையும் தனக்கு பிதா மாதாக்களாக பாவித்து மிருக்கக் கடவன். ஒற்றை வஸ்திரம் தரித்து கிராமத்தில் பிச்சைவாங்கி குருவின் பத்தினியிடம் கொடுத்து அவர்கள் உண்டு மிகுந்த சேஷத்தை தான் புசிக்கக் கடவன். சரீரத்தில் உண்டாகிற ரோமங்களை எவ்விதத்திலும் களையாமல் தீட்சையாக வளர்க்க கடவன். சயனம் செய்யும் காலங்களில் ஆண்பெண் யாதொருவரும் கூடியில்லாத தனியிடத்தில் நித்திரை செய்யக் கடவன். தன் மனதை சதாசர்வதா காலமும் குருவின் ஆக்ஞைகளிலும் சாஸ்திர பாடத்திலும் செலுத்தக் கடவன். "ஞானபுத்திரா" இங்கனமாக அனேக விதிகள் பிர்ம்ம சாரிக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இவ்விதிகளை வழுவாமல் குருவின் ஆக்ஞைகளையே வேதமாக்கொண்டு ஒருவன் 12 வருஷத்திற்குக் குறையாமல் ஒழுகுவானுகில் அவனிடத்தில் சத்துவகுணம் பிரகாசித்து சகல சக்தி, தாழ்மை, தீர்க்காலோசனை, களங்கமற்ற பக்தி ஆகிய இவை விளங்கும். காமக்கோராதாதிய பிரபஞ்சப் பிசாசுகள் பீடிக்காத சுத்த புருஷன் அவனே கனவிலும் காமத்திற்கு இடங்கொடாதவனுதலால் சுக்கிலமானது கட்டுப் பட்டு ரேதஸே தேசஸாகமாறி அவன் சூரியனைப்போல பிரகாசிப்பான். இங்கனம் பிரம்மச்சாரி விரதத்தைக்கைக்கொண்டு சகலசாஸ்திர ஞானனுகி குருவுக்கு திருப்தி உண்டானவுடன் குருவினிடத்திலிருந்து விடைபெற்று தனது பெற்றோரை அடையக் கடவன். இனிமேல் 50 வயதி லிருந்து 55 வயதுவரை யவ்வனபருவ மென்று சொல்லப்படும். இப்பருவத்தில் கிருகஸ்தாசிரமத்தில் பிரவேசிக்க வேண்டும் எப்படி பஞ்சமகா பாதகங்க ளெல்லாம் சுலபத்தில் காரணமாகக் கூடிய

கட்டுக் கடங்காத காளைப்பருவ மாகிய வாலிப பருவத்தில் சுத்த பிர்ம்மசாரிய ஆஸ்ரமத்தில் இருந்து குருகுல வாசம் செய்து ஆயுளை வியர்த்த மாக்காமல் பிரயோஜனப் படுத்தி ஞனே அதுபோலவே அதிகாரம் 'கீர்த்தி! ஆசை இவை களுக்கு சுலபத்தில் காரணமாகக் கூடிய இந்த யவ்வன பருவத்தையும் சீராக கழிக்க வேண்டும். பிறபஞ்ச பற் றுனது அதிதீரபிரதானவைராக்கியசாலியாகிய முமூட்சுவினு லேயே ஜெயிக்கப்படுமே ஒழிய மற்ற வர்களால் முடியாதா கையாலும் அப்பேர் பட்ட முமூட்சுக்கள் அருமையிலும் அரிதாகையாலும் பிரமச்சாரியாஸ்ரமத்தைக் கடந்த மனி தன் கிரகஸ்தா சிரமத்தில் புகவேண்டும். நற்குலத்தில் பிறந் தவளும் நற்குண முடையவளுமான ஓர் கன்னிக்கயை மணந்து அவளைத் தவிர மற்ற ஸ்திரீகளை ஜகன்மாதாவாக பாவிப்பானுய் ஏகபத்தினி விரதம் பூண்டு ஜீவஹிம் சைக்கு காரண மாகிய யாதொரு தொழிலையும் செய்யாதவனுய் ராஜ பக்தி தெய்வபக்தி யுடையவனுய் வாழக் கடவன். "இல்லை" என்று வந்து கேட்டவர்க்கு "இல்லை" என்னுத வனுய் இடக் கடவன். சதா ஈஸ்வரத்தியான, முடைய வனுய் தனது பந்துக் களையும் மித்திரர் களையும் தன்னிடத் தில் ஆதரவு தேடியவர் களையும ரெக்ஷிக்கக் கடவன். தனது மனைவி யிடத்தில் பிரீதி யுடையவனுய் அவளுடைய மனமானது நோகும்படியான செயல்களை செய்யாமல் யிருக் கக் கடவன். பிரபஞ்ச வாழ்க்கைக்கு ஸ்திரிகளே காரண மாம். ஸ்திரீகள் எந்த தேசத்தில் மதிக்கப் படுகிறதில் லையோ, எந்ததேசத்தில் புருஷர்களால் ஸ்திரீகள் மிகதுன் பத்திற்குள் ளாகிறுர்களோ, அந்த தேசமானது பிரபஞ்ச வாழ்க்கையில் தாழ்வை யடையும். புருஷன் மனைவியின் மனம் நோகச் செய்தால், மகாசக்தியானவள் அப்புருஷ

னுக்கு வித்தியாசக்தி குலையும்படி செய்வாள். பிதாவினிடத்தில் பார்க்கிலும் குழந்தை மட்டும் மாதாவினிடத்திலேயே பிரியமாம். ஆகையாலும் மாதாவை தனது ஸ்தன்னிய க்ஷீரத்துடன் குழந்தை மட்டு குணத்தையும் அறிவையும் ஊட்டுப வளாதலாலும், புருஷன் அவனது மனேவிக்கு கல்வி கற்பித்து நல்லொழுக் கங்களை போதிக்க வேண்டும் இன்னும் பிரசாலிக்க பிச்சை யிட்டும், வானப் பிரஸ்தனுக்குதவி செய்தும், சன்னியாசிகளை ஆதரித்தும், இப்பேர்ப்பட்ட செயல்களால் மற்ற 3 ஆஸ்ர மத்தவரும் இவனே நாடி யிருக்கின்ற வர்கள் ஆகையால் இந்த ஆஸ்ரமமானது முக்கியமாம். அடியவர்கள் பூஜையும், அதிதி பூஜையும், கிருகஸ்தாஸ் சிரம தர்மங்க ளென்று இதிகாச புராணங்களெல்லாம் கோஷிக் கின்றன. இவ்விதமாய்த் தேர்ந்த புருஷன் சில புத்திரர்களை யடைந்த பின்னர் 50 வயதுக்கு மேற்பட்ட விர்த்தியாப் பர்வத்தில் வானப் பிறஸ்தாஸ்சிரமத்தில் செல்லக் கடவன். ஜனக் கூட்ட மில்லாத வனப் பிரதேச சங்களில், பந்து புத்திர மித்திர சகல ஜனங்களையும் விட்டுப் பிரிந்தாலும் தன் மனேவியுமாக வாசஞ்செய்து வேதாந்த விசாரணே செய்யக் கடவன். தனது ஏகாந்த ஆசிர மத்திற்கு எதேச்சையாய் வரப்பட்ட சாது சச் ஜனங்களை உபசரித்து அவர்களிட மிருந்து அனுபவ ஞானத்தை யடையக் கடவன். இங்கனமே சிறிது நாட்ச் செல்ல மெல்ல மெல்ல உலகப் பற்று நழுவ, ஸ்திரீயும் புருஷனும் இருவரும், சன்னியாசி ஆச்சிரமம் புகுந்து ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து அவரவர் பிராரப்த கர்மத்திற்கு தக்கவாறு ஒழுகுவார்கள். அல்லது புருஷன் சன்னியாசியாக, ஸ்திரீ புருஷனே விட்டு நீங்க மனமில்லாத வளாய் மனேவி யென்ற பேர்மாறி ஸஸ்யஸ்தான வரித்தி சாதாபணிவிடை செய்து

கொண்டிருக்கக் கடவள் அல்லது தானும் சந்நியாசி யாகி உலகிலுள்ள ஸ்திரீ ஜனங்களுக்கு சன்மார்க் கங்களை உபதேசித்து மோட்சலா பத்திற்கு பாத்திரர்க ளாகக் கடவள். புருஷன் சந்நியாசி யாகி சதாபிரம்ம நிஸ்டா பிரனு யிருக்கக் கடவன். விசாரதீரனே, இதுவரையில் நான்கு ஆசிரமங்களின் தன்மையும் சொல்லிவிட்டேன். பிரம சாரியும், கிருகஸ்தனும் வானப்பிரஸ்தனும், சிவானுபூதியை யடை வதற்குள் சன்மார்க்கத்தில் அப்பியாசி களாய் பூசகம் பகூதகம் என்ற நாமங்களோடு கூடிய சந்நியாசியிம் அவரதுவரது அனுஷ்டானத் திலும் அப்பியாசத்தாலும் அவரவர் சிறந்தவர்களே. இவ்விதமாக உலகினர் ஓர் எறும் பானது ஓர் மரத்தின் உச்சியிலுள்ள ஓர் பழத்தை மெல்ல மெல்ல ஊர்ந்து போய் எப்படி அடையுமோ, அப்படியே படிப்படியாய் ஏறி பிரமஞ் ஞானத்தை யடைந்து பிரம ஸ்வ ரூபமாய் விளங்குவார்கள் இது சிரச முக்தி எனப்படும். உன்னைப் போன்ற அதிதீவிர தரவிக்தனுகிய முமூட்சு வானவன் ஓர் பட்சியானது வெகு தூரத்திலிருந்து சீக்கிர மாகபறந்துவந்து எப்படி ஓர் மரத்திலுள்ள பழத்தை அனு பவிக்குமோ அப்படியே அதி சீக்கிரத்தில் பிரமஞ்ஞானத் தையடைந்து பிரமஸ்வ ரூபமாய்விளங்குவான். இதுசத்யோ முக்தி யெனப்படும். இதிரண்டும் என்னூற யாகும் தவிர, ஆசிரம தாயங்கள் துவிசர்களெ னப்பட்ட பிராமண க்ஷத்தி ரிய வைசியர் ஆகிய மூன்று வகுப் பினர்க்கே கூறப் பட்டிருக்கின்றது. குற்றமற்ற தொழில்களை செய்தும் சூத்திரருக்கு ஏன்விதிக்கப் படவில்லை யென்றால் இவர்களது ஏழ்மைத் தனத்தாலும் சாவகாசமின்மை யாலும் என்று தோன்றுகிறது. ஸ்ருதிகள் எவ்விதமாய் கூறிய போதி லும், நான் சொல்வதைக் கேட்பாய். இந்த பிரமச்சாரிய,

கிறகஸ்த வனஸ்த சந்நியா சிரமங்கள் மானிட உடல்தரித்த ஒவ்வொருவருக்கும் இன்றியமைந்ததே யாகும். மனதை திடப்படுத்தக் கூடிய பிரம சர்யமும், சித்த சுத்தி செய்யப் பட்ட கிரக ஸதருமமும், சாது சங்கத்தில் பழகி வேதாந்த விசாரனை செய்து எகாந்த வாசம் செய்யப்பட்ட வானப்பிர ஸ்த தருமமும், அனுபவ அப்பியாசத்திற்கு காரணமான சந்நியாச தருமமும் படிப்படியாய் தேறிகடந்து வந்திருக் கிற மனிதனுக்கு முக்தி வெகுசுலபமாம். இவ்வாசிரமவிதி வழுவாது நடக்கப் பட்ட ஜனங்க ளிருக்கப் பட்ட நாட் டிற்கு ராஜாங்கம் அவசியமில்லை. நமது நாட்டில் பிரம சாரிய ஆசிரமத்தை கைவிட்டதி னலேயே ஜனசமுதாய மானது இந்த தாழ்மையான நிலைமைக்கு வந்து விட்டது. பிரமசாரி ஆசிரமத்தில் தேறியவர்களே கிரகஸ்த தர்மத்தில் போகலாம் அப்பேர்பட்ட கிரகஸ்தர்கள் வாசம் செய்யும் நாடே புண்ணிய பூமியெனப் ெபயர் பெற்று மாதமும் மாரி பெய்து மிகசெழிப்பாய் ஜீவராசிக ளுடைய ஆனந்த பிராப் திக்கு இடமாம்.

சிஷ்யன்:—சுவாமி சந்நியாசி ஆசிரமத்தின் விதிகளை யும் சந்நியாசிகளின் மகிமைகளையும் உரைக்கப் பிரார்த்திக்கி றேன்.

குரு:—நான் முன்னமேயே உனக்கு அகத்துறவு, புறத் துறவு, என்பதாக இருவகையாகப் பிரித்து துறவின் தன் மையை கூறி யிருக்கிறேன் இன்னும் கேட்பாய்:—சந்நியாச மானது அறுவகைப் படுமென்பதாக ஆன்றோர் கூறுவர். அவைகுடீசகம், பகூதகம், அம்சம், பிரமாம்சம், துரியம், துரியாதீதம் ஆகிய இவைகளாம். இவற்றில் குடீசக, பகூ தக சந்நியாசிகள் ஜீவன் முக்தர்களும், துரிய துரியாதீதர் கள்விதேய முக்தர்களுமாம். உலகவாசையை நீக்கி மன

மானது நிலைபுருமனும், மனம் நிலை பெறுவதற்கு அவசிய மான சஞ்சாரம் செய்ய சக்தியில்லாமலு மிருப்பவர்கள் குசடீகர்கள் எனப்படுவார். சஞ்சாரம் செய்ய சக்தியுள்ள வர்கள் பகூதர்கள் எனப்படுவார் இவ்விருதரும் அப்பியாசி களாம். குடீசக னுக்கு தீர்க்க மௌனம் சாதிக்க வேண்டு மென்ற விதியாம் பகூதசனுக்கு தினம் ஒன்றுக்கு, ஊர் சுற்ற வேண்டுமென்ற விதியாம் முக்கியமென ஏற்பட்டிருக் கின்றது. அப்பியாசிக ளுகைபால் அத்தியந்த மௌவனத் தால் சகல சக்தி விருத்தியாகு மாகையாலும் ஓர் ஊரில் நிலையா யிராமல் பல ஊர்களிலும் சுற்றுவதால் மயக்கத்திற் குட்படாதவர்க ளாகைபால் கட்டாயம் அனுஷ்டிக்க வேண் டியது. அம்ச பராம்ச துரிய துரியாதீதர் களுக்கு விதி விலங்குகள் இல்லை. அம்சர் களுக்கும் பரமாம்சர் களுக்கும் பிராரப் தகர்மமானது சரீர ரூபமாயும் கர்ம ரூபமாயும் இருக்கும். துரியர் களுக்கும் துரியாதீதர் களுக்கும் பிரா ரப்தமானது சரீரமாத்திரமாய் இருக்கும். அம்சகர்கள் சரீர போஷணார்த்தம் கர்மம் செய்பவர்களென்றும், பரமாம் சர் கள் அம்சர்களைப் போலவே யாயினும் மற்றவர்களால் அதி கார விஷயத்தில் மாத்திரம் ஊட்டப் படுபவர்க ளென்றும் இவர்களுக்கு முறைமே விதிகளாக சிலர் கற்பிக்கின்றனர். இங்கனமல்ல சரீர போஷணார்த்தம் என்பதாகவோ வேறே யாதொரு யாதொரு உத்தேசமு மில்லாமல் "சிவோகம்" என்ன நிச்சயமானது கிஞ்சிற்றும் நழுவாமல் பிராரப்தானு சாரமாய் கர்மங்களை செய்பவர்கள் அம்சர்களாகும்)பரமாம் சர்கள் சொரூப சமாதியில் சிவானு பூதியை அடைபவர்க ளாதலால் பிரபஞ்ச வாசம் நெடுங்காலம் நழுவுவர்களாத லால் புண்ணியகுண சிலர்கள் அப்பரமாம் சர்களுக்கு ஆகா ரத்தை ஊட்டுவது உண்டு. துரிய துரியாதீதர்கள் கற்பனை

களுக்கு அதீதமாய் சத்தா மாத்திரமாய் விளங்கு வார்கள். இங்கனம் அறுவகையாகப் பிரிக்கப் பட்டனரேனும் பிற் சொல்லிய அம்ச பரமாம்ச, துரிய துரியாதீதர்கள் "சந்நியா சிகள்" எனப்படுவோர். சந்நியாசிக்கு இன்ன லட்சணங் கள் என்று யாரால் கற்பிக்க முடியும். யாவனொருவன் கிடைத்த வஸ்துக்களை வெறுக்கிற தில்லையோ, அல்லது அவைகளைப் பற்றி சந்தோஷிக்கிற தில்லையோ, கிடையாத வஸ்துக்களை விரும்புகிற தில்லையோ, அல்லது அவைகளைப் பற்றி விசனப் படுகிறதில்லையோ, அவனே சந்நியாசியாம். யாவனொருவன் தன்சரீரத்தை சந்தனபுஷ்பாபரணாதிகளால் அலங்கரித்த பொழுதும், சித்திரவதை செய்த பொழுதும், சுகதுக்கங் களில் கலவாமல் சமத்துவமா யிருப்பானோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன் பிரபஞ்சத்தவர் எங்கனம் விஷயங்களை அனுபவிக்கிறார்களோ அஞ்ஞானம் சற்றும் பற்றின்றி அனுபவிப்பாரோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன்சமஸ்தகோடி ஜீவராசிகளுக்கு இதத்தையே செய்பவனாய் திரிகரணங்களும் ஒத்திருப்பானோ அவனே சந்நியாசியாம், யாவனொருவன் ஈனர், எளியர், வியாதி யஸ்தர், ஸ்திரீகள், விருத்தாப்பியர்கள், சிசுக்கள், பசுக்கள், சாதுக்கள், இவர்களுக்கே ஆபத்து வந்தகாலத்தில் கை கொடுத்து உதவுகிறாரோ அவனே சந்நியாசியாம். யாவ னொருவன் உலக போகம் அனுபவித்துக் கொண்டிருந்தா லும் வேண்டிய காலத்து நின்ற நிலையில் அவைகளை உதறி விடவல்லவனோ அவனே சந்நியாசியாம். யாவனுடைய கர்மங்கள் சுய நன்மையின் உத்தேசமின்றி பறந்த ஆகாயம் போல் அநேக ஜீவராசிகளைக் கருதியிருக்குமோ அவனே சந்நியாசியாம். தன்னை ஈஸ்வரனிடத்தில் திரிகரணங்களும் ஒத்து அடிமையாக யாவனொருவன் ஒப்புவித்து விடுகிறானோ

அவனே சந்நியாசியாம். யாவனொருவன் எக்கருமங்களை செய்தாலும் எப்பொழுதும் ஈஸ்வர னிடத்தில் மனதை செலுத்தி யிருப்பானாகில் அவனே சந்நியாசியாம். யாவனொருவன் உலகத்தவரால் அசைக்க முடியாத வைராக்கியத்தை உடையவனாய் எப்பொழுதும் பிர்மசொரூபத்தில் மனதைக் கட்டி யிருப்பானோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன் சதாகாலமும் அந்தர் முகதிருஷ்டியுடையவனாய் பிரபஞ்சத்தை உதாசீனம் செய்திருப்பானோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன் ஞானகர்மேந்திரியங்களை உள்ளுக் கிழுத்து சதானந்தத்தை சிவத்தி னிடத்தில் அனுபவிப்பானோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன் பிரமநிஷ்டையில் தானாயிருப்பானோ அவனே சந்நியாசியாம். யாவனொருவன் சிவமேயாகி பிரபஞ்ச ஞாபகம் முழுதுமின்றிபேயன் அல்லது பித்தனைப்போல் விளங்குவானோ அவனே சந்நியாசியாம். அப்பனே இங்ஙனம் சந்நியாசி லட்சணங்களால் கட்டுப் படாமல் எவ்விதத்திலும் இருப்பான். அவனது மகிமைகளை யாவரால் உரைக்கமுடியும். பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்கள் சந்நியாசியினது பாததூளியை சிரசில் அணிந்து கொள்ளக் கருதி அவர்களுக்கு ஏவல் செய்வார்கள். பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களாகிய சகலரும் சந்நியாசிகளாயிருந்தால் ஆ! ஆ! பிரபஞ்சத்தினது மகிமையை யாவரால் அளவிடமுடியும்! மைந்தனே! வாஸ்தவம் போல் நடிக்கும் வேஷ சந்நியாசிகளே பலரும் தங்களை விதிவிலக்குகளுக் குட்படுத்தி டம்பமாய் வேஷம் இட்டு மகான்கள் போல அபிநயிக்கும் சந்நியாசிகள் காவில் போகம் நுகர்பலர் களுக்கும், நீ ஒரு சந்நியாசியாம், சிவமாம், சந்நியாசியே சிவமாம். நீ நித்திய சந்நியாசியாகி மாயா போகத்தால் உண்டாகின்ற சரீரத் திரயத்தினி விலும்

வேறுபட்டு சிவமாய் விளங்குவாய். இல்லாத திணுவுண்டான இல்லாமையாகிய உனது சரீரங்கள் அந்த இல்லாததினுல் அரசாட்சி செய்யப் படுவனவாம். சத்திய ஸ்வரூபமான உன்னை அந்த இல்லாதது அசைக்க வல்லதல்ல உனது சூட்சும ஸ்தூல சரீரங்கள் அந்த இல்லாத தாகிய மாயாசக்தியினுல் ஏவப்பட்டு பற்பல வியவாகாரங்களைப் புரியினும், நீ உனது யதார்த்த ஸ்வரூபம் சிவம் என்பதை மறவாதே. மாயாசக்தியினது மகேந்திர ஜாலங்களை நீ சர்வ சாட்சியாயிருந்து வேடிக்கைபார். 'சிவோகம்' என்ற பாவனை நினைப்பிலும் இருக்கட்டும், மறப்பிலும் இருக்கட்டும். விழிப்பிலும் இருகக்கட்டும். உறக்கத்திலும் இருக்கட்டும். 'சிவோகம்' என்ற பாவனையானது உன்னை விட்டும் பிரியாமல் இரவும் பகலும் எப்பொழுதும் இருக்கட்டும். ஆனுல் உனது அனுபவத்தை அறிய வல்லவர் யாவர்? நீ ஓர் சந்நியாசியென நிலைமை பூண்டுசிவம் எனப்பிரகாசிப்பாய்.

சிஷ்யன்:—ஸ்வாமி, சற்குருநாதா, சதானந்த ஸ்வரூபா, சரண்புகுந்த என்னை நானும் நீயுமாய் ஒன்றென்றும், பச்சைமரத்தில் ஆணியறைந்தது போல பதியவைத்து ராஜயோக மார்க்கத்தில் கைபிடித்து கூட்டிவிட்டுச் சென்று என்னை நித்தியானந்த பரவசனுக்கி சின்மயமாக உருட்டி, சத்தாமாத்திரமாய் விளங்கிய 'நீ' யாகிய எனக்கு, நானுகிய, நான், ஜெகன் மித்தியா (ஜெகன் மித்தியா) ஜெகம்பொய் எனதம்பட்ட மடியே என்றபடி எனப் பறையோசை யிட்டு 'பிரகை வசத்தியம்' என ஜெய பேரிகை யடித்து 'அகம் பிரமாஸ்மி' எனத் தெளிந்திட 'சிவோகம்' ஆயிருத்தலே கைம்மாறும். நனே சிவம், சிவமே நான். என்னைத்தவிர வேறில்லை என்மே லாணைப்படிக்கு நானே யிருக்கின்றேன். நானுகவே யிருக்கிறேன், "சிவோகம்"

---

# சமர்ப்பணம்.

---

பிரபஞ்சத்தினது ஒற்றுமை வேற்றுமைகளுக்கு எந்த சக்தி காரணமா யிருக்குமோ, எந்த சக்தியினுல் பிரேரேபிக்கப்பட்டு ஜீவகோடிகள் பிரமையில்பட்டு சுழலுவார்களோ, எந்த சக்தியானது பந்த மோட்ச வியவகாரங்களுக்கு இடங்கொடுக்குமோ, எந்த சக்தியின் கடாட்சத்தினுல் ராஜாங்கம் நடத்தப்படுமோ, எந்த சக்தியானது ஜீவகோடிகள்து ஜீவித நாட்களை தன்னிச்சைபோல் நடத்திலீலை செய்யுமோ, எந்த சக்தியானது ஓர் நொடிக்குள் அநந்தம் கோடி விதங்களாகவும் நாம ரூபங்களாகவும் செய்யுமோ, எந்த சக்தியானது இன்மையே சொரூபமாய் தான் உண்டாக்கிய இன்மையாகிய பிரபஞ்சத்தில் பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்களுடைய பலவிதமான அறிவாயும் ஆனந்தமாயும் பரிணமித்து சிவமாகத் தனித்த ஜீவன்முக்தர் விதேக முக்தர்களிடத்து இன்மையாகவே போகுமோ, அந்த ஜெகன்மாதாவாகிய மகா சக்தி யினிடத்தில் இந்நூலையும் இதனுடன் எனது ஜீவித காலத்தையும் சமர்ப்பிக்கின்றேன்.

சுப்பிரமணிய சிவம்.

PRINTED BY P. R. RAMA IYAR AND Co., MADRAS.

